அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–७

## ( श्री सौन्दर्यलहरी )



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா - 7

## ( ஸ்ரீ ஸௌந்தர்யலஹரீ )

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம்.

1962



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषा द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमाला सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை

ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவில் ஏழாவது மலர் ஸ்ரீ ஸௌந்தர்யலஹரீ. இதில் ஸ்ரீ பகவத்பாதாள் தேவியின் பிரபாவத்தையும், மந்திரசாஸ்திரத்தின் ரஹஸ்யங்களையும், யோகசாஸ்திரத்தின் ஸூக்ஷ்மங்களையும், அத்வைதத்தின் பெருமையையும் அடக்கிவைத்துள்ளார்கள். இவைகளை எல்லாம் ஸுலபமாக இந்த கிரந்தத்தைப் படிப்பதால்மட்டும் யாவரும் அறிந்துகொள்ளமுடியாது அதிலும் சாஸ்திர அப்பியாஸம் இல்லாதவர்களுக்கு இதிலுள்ள சுலோகங்களின் பொருளே விளங்காது. இவ்வளவு மதிப்புள்ள இக் கிரந்தத்தில் ஸ்ரீமதாசார்யாள் உள்ளடக்கிவைத்துள்ள கருத்துக்களை நன்கு காட்டும்படியான ரீதியில் மிகவும் எளியமுறையில் அமைந்துள்ள தமிழ் உரையுடன் இதை வெளியிடும்படி கிடைத்தது பொதுமக்களின் பாக்யமே. ஸ்ரீ தேவீபக்தர் ஒவ்வொருவரும் இந்த கிரந்தத்தைப் படித்து கருத்துக்களை நன்கு உணர்ந்து தேவியின் சரணங்களில் மனதைச் செலுத்தினால் எல்லா மேன்மைகளையும் பெறலாம்.

இதற்குப் பதவுரை, விரிவுரைகள் எழுதிக்கொடுத்து உதவியவரும், டாக்டர் ராதாகிருஷ்ணன், டாக்டர் ஹிரியண்ணா இவர்களிடம் பயிற்சி பெற்றவருமான ஓய்வு பெற்ற பேராசிரியர் மணத்தட்டை ஸ்ரீ M. K. வெங்கடராம அய்யர் அவர்களுக்கு எங்கள் ஸமிதியின் நன்றி உரித்தாகுக.

இப்புத்தகம் வெளிவர பொருள் உதவி செய்த மேல் மங்கலம் தீக்ஷிதர் ஸ்ரீ M. S. வெங்கடராம அய்யர், பாகவத ஸ்ரீ M. S. வெங்கடராம அய்யர் இவர்களுக்கு ஸமிதியின் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**K. V. சுப்பரத்னம் அய்யர்,**
*பொதுக்காரியதரிசி,*
*அகிலபாரத சங்கர ஸேவா ஸமிதி.*

# முகவுரை

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் உயர்ந்த அத்வைத சாஸ்திரத்தை ஸ்தாபித்தார் என்பது லோக ப்ரஸித்தமான விஷயம். அந்த சாஸ்திரத்தில் நிர்ணயிக்கப்பட்டிருக்கும் ப்ரம்மம் தேசகாலங்களுக்கும், காரியகாரணங்களுக்கும் நாம ரூபங்களுக்கும் அப்பால் நிற்பதாதலால், அது நிர்குணம் என்றும், நிஷ்பிரபஞ்சம் என்றும், அஸம்ஸ்ருஷ்டம் என்றும் சொல்லப்படுகிறது. உபநிஷத்துக்களில் சொல்லியபடி இது இரண்டற ஒரே வஸ்துவாகவிருப்பதால், ஜீவன் என்பது ப்ரம்மமே தவிர வேறு வஸ்துவல்ல. ஆகவே உபாஸகன், உபாஸ்யமான தெய்வம் என்னும் பேதத்திற்கு அவகாசமில்லை. ஆகையால், ஸ்ரீசங்கர ப்ரணீதமான அத்வைத சாஸ்திரத்தில், பக்தியும் உபாஸனையும் செய்வதற்கு இடமே இல்லை என்று சிலர் தோஷம் சொல்லுகிறார்கள் ஆனால் அது தவறுதலான அபிப்பிராயம்.

ஸ்ரீ ஆசார்ய பாதாள் மனிதர்களுக்கு ஏற்படும் ப்ரதீதிகளை பிராதிபாஸிகம், வியாவஹாரிகம், பாரமார்த்திகம் என்று மூன்று பிரிவுகளாக வகுத்திருக்கிறார்கள் நாம் ஸ்வப்னத்தில் அனுபவிக்கும் காக்ஷிகள் பிராதிபாஸிகம். ஸ்வப்னம் நீடிக்கும் வரையில்தான் அவைகள் உண்மையாகத் தோன்றும். ஸ்வப்னம் கலைந்தவுடன் அவை பொய்யாய்விடுகின்றன. நாம் விழித்துக்கொண்டிருக்கும் போது காணப்படும் உலகம் வியாவஹாரிகஸத்தாகம் என்று சொல்லப்படுகிறது இந்த உலகம் எல்லாக் காலங்களிலும், எல்லோராலும் பார்க்கப்படுகிறது. ஆனால் ப்ரம்ம ஞானமேற்பட்டு அது அபரோக்ஷ ஸாக்ஷாத் காரமாக மாறிவிட்டால், அப்பொழுது ஞானிக்கு வைசித்திரியத்துடன் கூடிய இந்த உலகம் தென்படுவதில்லை. "பரமாத்மா என்னும் ஸூரியன் பிரகாசித்துக்கொண்டிருக் கிறான். அவித்யை என்னும் இருட்டு விலகிவிட்டது. ஞானிகள் களங்கமில்லாத திருஷ்டியுடன் விழித்துக்கொண்டு இருக்கிறார்கள். ஆனால் என்ன ஆச்சரியம்! அவர்கள் இந்த உலகத்தில் ஒன்றையும் பார்ப்பதில்லை" என்று [1] 'யோகதாரா

---

[1] प्रकाशमाने परमात्मभानौ नश्यत्यविद्यातिमिरे समस्ते ।
अहो बुधा निर्मलदृष्टयोऽपि किंचिन्न पश्यन्ति जगत्समग्रम् ॥

வளி'யில் (சு 27) ஸ்ரீ ஆசார்யபாதாள் கூறியிருக்கிறார். அதாவது ப்ரம்மஞானமேற்பட்டால் உலகத்தோற்றம் பாதிக்கப்படுகிறது. " பூர்ணாத்மா ஸுஸமீக்ஷ்யதாம் ஜகதிதம் தத்பாதிதம் த்ருச்யதாம் पूर्णात्मा सुसमीक्ष्यतां जगदिदं तद्बाधितं दृश्यताम् ) என்று உபதேசபஞ்சகத்தில் எழுதியிருக்கிறார். ப்ரம்மஸாக்ஷாத்காரம் பாரமார்த்திகமான உண்மை அதற்கு மேல்பட்ட அனுபவமே கிடையாதாகையால் அது ஒரு பொழுதும் பாதிக்கப்படமாட்டாது.

பாரமார்த்திக தசையிலிருந்து ஒரு படி கீழே இறங்கி, வியவஹார த்ருஷ்டியுடன் அதே ப்ரம்மத்தை உணர்ந்தால் அது ஸகுணமாகவும் ஸப்ரபஞ்சமாகவும் மாறிவிடும். உலகத்தை ஆக்கவும், காக்கவும், அழிக்கவும் சக்தி வாய்ந்த ஈசுவரன் என்று அதே ப்ரம்மத்தைச் சொல்லுகிறோம். ஈசுவரன் ஸர்வக்ஞனாகவும், ஸர்வ வ்யாபியாகவும், ஸர்வ சக்திவாய்ந்தவனாகவும் இருப்பதால், ஜீவன் தானாகவே அவரை உபாஸ்ய வஸ்துவாகக் கருதி பக்தி செய்கிறான். எனவே வியவஹார தசையில் ஈசுவரன், ஜீவன் என்னும் பேதத்திற்கு இடமிருக்கிறது. ஆகையால் அத்வைத சாஸ்திரத்தில் உபாஸனைக்கும், பக்திக்கும், அவகாசமே இல்லை என்பது உண்மையல்ல.

ஈசுவரன் உபாஸகர்களுடைய வெவ்வேறான ருசியை யனுஸரித்து சிவனாகவும், விஷ்ணுவாகவும், கணபதியாகவும், ஸுப்ரமண்யனாகவும், ராமனாகவும், கிருஷ்ணனாகவும் இன்னும் பல்வேறு நாமரூபங்களுடன் தோன்றுகிறார். நிர்குணமாகிய ப்ரம்மத்திற்கு நாமரூபங்களைக் கொடுப்பது ஆரோபம் அல்லது கல்பனை. ஆகவே எல்லா நாமரூபங்களும் ஒரே மாதிரி ஸமம்தான், அதில் உத்க்ருஷ்டம் இது, நிக்ருஷ்டம் இது என்று கூறும் வாதத்திற்கு அர்த்தமே இல்லை. ஆகையால் ஹரியும் ஹரனும் நாமரூபங்களில் வேறுபட்ட தெய்வங்களானாலும், உண்மையில் வேறுபட்டவைகளல்ல. நம்முடைய புத்தியின் பேதத்தால் வெவ்வேறு நாமரூபங் களுடன் ஒரேப்ரம்மம் தோற்றமளிக்கிறது என்று 1ஹரிமீடே

1 ब्रह्मा विष्णूरुद्रहुताशौ रविचन्द्राविन्द्रो वायुर्यज्ञ इतीत्थं परिकल्प्य
एकं सन्तं यं बहुधाहुर्मतिभेदात्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥

ஸ்தோத்திரத்தில் (சு. 18) சொல்லியிருக்கிறார். இந்த த்ருஷ்டியுடன் ஸ்ரீ ஆசார்யபாதாள் சிவன், விஷ்ணு, கணபதி, சுப்ரமண்யம், இவர்களைப்போற்றி அனேக ஸ்தோத்திரங்கள் அருளியிருக்கிறார். இவைகளில் ஆழ்ந்த பக்திரஸமும், சிறந்த கவிச்சுவையும் ஒருங்கே அமைந்திருக்கின்றன.

ஈசுவரன் உலகமாதாவாகிய தேவியாகவும் தோன்றலாம். தெய்வத்தை ஸ்திரீயாகவும், உலகின் தாயாகவும் போற்றித் துதிப்பது வைதிக மதத்தின் தனிப்பெருமை. வேறு எந்த மதத்திலும் தெய்வம் இவ்வாறு கருதப்படவில்லை. ப்ரமமத்தை தேவீ ஸ்வரூபமாக உபாஸனை செய்வதை 'தைத்திரீய ஆரண்யகம்', [1]'தைத்திரீய ப்ராமமணம்' போன்ற வேத பாகங் களில் காணலாம். கேனோபநிஷத்தில் தேவி 'உமா ஹைமவதி' என்ற பெயருடன் ப்ரம்மவித்யையை தேவர்களுக்கு உபதேசம் செய்கிறாள். சாந்தோக்ய உபநிஷத் ஏழாவது அத்யாயத்தில் காணப்படும் 'தஹர வித்யா' என்பது அனாஹதசக்ரத்தில் தேவியின் உபாஸனையைக் குறிக்கிறது. பிருஹதாரண்யகம், நான்காவது அத்யாயம் இரண்டாவது பிராமணத்தில் கூறப் படும் 'இந்திரன்', 'விராட்' என்பவர்கள் ஆகஞா சக்ரத்தில் பூஜிக்கப்படும் காமேச்வரன் காமேச்வரியை குறிககினறன.

வஸிஷ்டர், சுகாசார்யர், ஸநகர், ஸநந்தனர், ஸனத் குமாரர்போன்ற மஹா சிஷ்டர்கள் தேவியை உபாஸனைசெய்து இருக்கிறார்கள். இவர்கள் இயற்றியிருக்கும் ஸம்ஹிதைகளுக்கு 'சுபாகமபஞ்சக' மென்றுபெயர். 'சமயாசாரம' அலலது 'தக்ஷிணாசார' மென்று சொல்லப்படும் தேவீ உபாஸனை முறைகது இதுதான் பிரமாண கிரந்தம். இந்த முறையை அனுஸரித்துத்தான் ஸ்ரீ ஆசார்யபாதாள் 'ஸௌந்தர்யலஹரி' என்னும் உத்தமமான தேவீ ஸ்தோத்திரத்தை இயற்றி இருக்கிறார். இதில் தேவியானவள் ஸரஸ்வதி, லக்ஷ்மி, பாாவதி இவர்களுக்கெல்லாம் மேலான நான்காவது தத்வமாகவும், மனஸுக்கும் வாக்குக்கும் எட்டாத தத்வமாகவும், கேவல நிர்குண ப்ரம்மாபின்னமான மஹாமாயை என்றும வர்ணிக்கப் படுகிறாள். ப்ரம்மத்தை சிவனென்றும், மஹா மாயையை

1. Serpent Power by Arthur Avlon P. 147: "It seems that Taittiriya Araṇyaka contains much esoteric matter for the mystic to digest. The first chapter of Āraṇyaka is chanted in worshipping the Sun. It is called Āruṇam because it treats of Aruṇā, red-coloured Devi."

சக்தியென்றும், இவர்களைப் பிரிக்க முடியாததால், இருவரும் சேர்ந்து சிவ-சக்தி என்ற ஒரே தத்துவமாகவும், எல்லா விதத்திலும் ஸமமாகவும், ப்ரம்ம ரந்த்ரமென்னும் ஸஹஸ்ரார கமலத்தில் ஆனந்தானுபவத்தில் அமர்ந்திருக்கிறார்களென்றும் வர்ணித்திருக்கிறார்.

ஸஹஸ்ரார கமலத்திற்குக் கீழே ஸுஷும்னு நாடியில் ஆக்ஞா, விசுத்தி, அனாஹதம், மணிபூரகம், ஸ்வாதிஷ்டானம், மூலாதாரம் எனப்படும் ஆறு சக்ரங்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றிலும் தேவியின் ஒளி வீசுகிறது. அந்த ஒளி சித் ஸ்வரூபமாக விளங்குகிறது. ஆனால், ப்ருதிவி, அப், தேஜஸ், வாயு ஆகாசம், மனஸ் என்னும் ஜட உபாதிகளுடன் ஸம்பந்தப் பட்டிருக்கிறது மூலாதார சக்ரமென்பது ஸுஷும்னு நாடி யின் அடியில் இருக்கிறது. அங்கு ஜடமான உபாதியின் வலுவு அதிகமாயிருப்பதால் தேவி பெட்டியில் அடைக்கப் பட்ட பாம்புபோல் உறங்கிக்கொண்டிருக்கிறாளென்று வர்ணிக்கப்படுகிறது. அப்படி அடங்கியிருக்கும் சித்சக்தி 'குண்டலினி' என்று சொல்லப்படுகிறது. தகுந்த ஸாதனங் களால் அந்தக் குண்டலினீ சக்தியை எழுப்பி படிப்படியாக மேல் சக்கரங்களுக்கு ஏறும்படிசெய்து ஒவ்வொன்றிலும் தகுந்த முறையில் உபாஸனையும், தியானமும் செய்தால் கடைசியில் அது ஸஹஸ்ரார கமலம்போய்ச் சேருகிறது. அப்பொழுது ஸாதகனுடைய ஆத்மா சிவ-சக்தியுடன் ஐக்கிய மாய்விடுகிறது. அதுதான் மோக்ஷநிலை நமக்குள் இருக்கும் சித் சக்தியை படிப்படியாக ஞானேந்திரியங்கள், அவை களுக்கு விஷயமான கந்தம், ரஸம், ரூபம், ஸ்பர்சம், சப்தம் போன்ற குணங்களோடுகூடின வஸ்துக்கள், மனஸ், சித்தம், அந்தக்கரணம் இவைகளிலிருந்து விடுவித்தால் அது தன் நிஜஸ்வரூபத்தை அடைந்து ப்ரம்மமாக விளங்குகிறதென்ற வேதாந்த தத்வமானது 'குண்டலினீயோகம்' என்றும், 'ஷட்சக்ரயோகம்' என்றும் ஸ்ரீ வித்யையின் ப்ரக்ரியையை யனுஸரித்துச் சொல்லப்படுகிறது. தேவீ உபாஸனையை வைதிகமான அத்வைத சாஸ்திரத்திற்குச் சிறிதும் விரோத மில்லாமல் ஆசார்யபாதாள் வர்ணித்திருக்கிறார்.

அந்தக் காரணத்தினால்தான் தேவி பண்டாஸுரன் சண்டன், முண்டன், சும்பன், நிசும்பன், மஹிஷாஸுரன் போன்ற அஸுரர்களை ஸம்ஹாரம்செய்த கதைகளுக்கு

ஸௌந்தர்யலஹரியில் சிறிதும் இடம் கொடுக்கவில்லை. ப்ரம்மாண்ட புராணத்தில் காணப்படும் லலிதோபாக்யானத்திலும், மார்க்கண்டேய புராணத்தில் காணப்படும் தேவீ மாஹாத்ம்யத்திலும் தேவி அஸுரர்களை ஸம்ஹாரம் செய்த விருத்தாந்தங்கள் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. லலிதா ஸஹஸ்ர நாமத்தில் பண்டாஸுரவதம் விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. தேவீ பாகவதத்திலும் இந்த அஸுர ஸம்ஹாரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால் ஸௌந்தர்ய லஹரியிலும் இதர தேவீ ஸ்தோத்திரங்களிலும் ஸ்ரீ ஆசார்யபாதாள் இந்த விஷயத்தைப்பற்றி ஒரு வார்த்தை கூடச சொல்லவில்லை. பரமசிவன் செய்த த்ரிபுரஸம்ஹாரம், மன்மத தஹனம், குமாரஸ்வாமி செய்த தாரகாஸுரவதம் இவைகளைப்பற்றிச் சிறிது பிரஸ்தாபம் செய்திருக்கிறார். ஆனால் தேவி செய்த அஸுர ஸம்ஹாரத்திற்குத் தான் இயற்றிய எந்த தேவீ ஸ்தோத்திரத்திலும் சிறிதுகூட இடம் கொடுக்கவில்லை. தவிரவும் தேவி 'மாம்ஸ நிஷ்டா' என்றும் 'ஸீதுப்ரியா' என்றும், 'பசுப்ரியா' என்றும் யுதிஷ்டிரரும், அர்ஜுனனும் செய்த 'துர்க்கா ஸ்தோத்திரத்'திலும், 'லலிதா ஸஹஸ்ரநாமத்'திலும், 'துர்க்கா அஷ்டோத்தரத்'திலும் சொல்லப்பட்டிருக்கிறாள். ஸ்ரீ ஆசார்யபாதாள் செய்திருக்கும் 'த்ரிபுரஸுந்தரீ மாநஸ பூஜாஸ்தோத்திரம்' (105–109) 'த்ரிபுர ஸுந்தரீ சது: ஷஷ்டி உபசார பூஜாஸ்தோத்திரம்' (30–32), 'மந்த்ரமாத்ருகா புஷ்பமாலா ஸ்தவம்' (11) என்னும் ஸ்தோத்திரங்களில தேவிக்கு அன்னம், பாயஸம் முதலியவைதான் நைவேத்யம் என்று கூறியிருக்கிறார். மாம்ஸமும் ஸுரையும் பசுவும் நைவேத்யமாக எங்கும் சொல்லப்படவில்லை. அதெல்லாம் வாமாசாரம் அல்லது கௌலாசாரத்தைச் சேர்ந்தவை. வைதிகமான உபாஸனையில் அவைகளுக்கெல்லாம் இடமில்லை யென்று ஒதுக்கிவிட்டார். தேவீ உபாஸனையை மிக்க ஸாத்விகமான முறையில் விவரித்திருக்கிறார். இந்த முறை அத்வைத சாஸ்திரத்திற்குச் சிறிதும் விரோதமில்லாமலும், அதை நெருங்கி அனுஸரித்ததாகவுமிருக்கிறது. ஸமயாசார விதானத்தில் தேவியின் உபாஸனை வெகு ஸுலபமான காரியம் அதற்கு ப்ரதிகம்கூட அவசியமில்லை. ஸ்ரீசக்ரமென்ற யந்திரத்தை தேவியாக பாவித்து உபாஸனை செய்யலாம். மந்த்ரோபாஸனை அதைவிட ஸுலபம். 'பஞ்சதசாக்ஷரீ' என்ற தேவீ மந்திரம் பதினைந்து மாத்ருகா வர்ணங்களை

உடையது. ஆழ்ந்த பக்தியுடன் அந்த மந்திரத்தையோ அல்லது ஸௌந்தர்யலஹரியைப் போன்ற தேவீ ஸ்தோத்திரத்தையோ பாராயணம் செய்தாலும் போதுமானது.

தேவியின் ரூபலாவண்யம் வர்ணனைக்கு உட்படாதது. அதற்கு உபமானமாகச் சொல்லக்கூடியது எதுவுமே இல்லை. அதை ப்ரம்மதேஜஸ் என்றுதான் சொல்லவேணும். தேவியின் ஒவ்வொரு அங்கத்திலும் அது பிரதிபலிககிறது. அந்த நிரதிசயமான அழகைத்தான் தேவியின் கேசாதி பாதாந்த வர்ணனையில் எடுத்துத் தெளிவாகக் காட்டியிருக்கிறார். தேவியின் திவ்ய தேஜஸ் இப்படிப் பரிணமித்திருக்கிறது என்பதுதான் வர்ணனையின் தாத்பர்யம். அழகிற் சிறந்த ஊர்வசி முதலான தேவஸ்த்ரீகள் தேவியின் சமீபத்திற்குப் போய் அவளுடைய ரூபலாவண்யத்தைப் பார்க்கவேண்டும் என்ற எண்ணத்துடன் தவமசெய்து, தேவியின் பர்த்தாவாகிய காமேச்வரனுடன் ஸாயுஜ்யத்தையடைந்து அவருடன் தேவியின் சமீபத்திற்குப் போகிறார்கள். காமனை எரித்த பரமசிவனுக்கு தேவியின் முகலாவண்யத்தில் மோஹம் ஏற்படுகிறது. ஆகவே காமேச்வரனுடைய ப்ரிய பார்யையாகவும், கணபதி, சுப்ரமண்யன், ஆகிய இரு குமாரர்களிடமும் அத்யந்த வாத்ஸல்யமுள்ள தாயாகவும் தேவி விளங்குகிறாள். தேவியின் பாதிவ்ரத்ய மஹிமையால்தான் மஹாபிரளயத்தில் ப்ரம்மா, விஷ்ணு முதலான தேவர்கள் எல்லோரும் நாசத்தை யடையுமபோது பரமசிவனுக்கு மட்டும் நாசமேற்படுவதில்லை என்று 26-வது ச்லோகத்திலும் தேவியின் பாதிவ்ரத்யம் நிகரற்றது என்று 96-வது ச்லோகத்திலும் காண்கிறோம். தேவியின் தாடங்கத்தின் மஹிமையால்தான் பரமசிவன் விஷத்தைப் பானம் செய்தும் ஒரு விபத்துக்கும் உட்படவில்லையென்று 28-வது ச்லோகத்தில் கூறி இருக்கிறார்

தன் அபார கருணையினால் உலகிற்கே தாயாகவும் தேவி இருந்து வருகிறாள். தேவியின் கருணைக்கு எல்லையே கிடையாது. அது நிர்வ்யாஜமானது. நம்மிடத்தில் ஏதாவது யோக்யதை இருந்தால்தால் தேவியின் கிருபை ஏற்படும் என்பதில்லை. "பவானி, தாஸனை என்னிடம் உன் கருணையோடு கூடின பார்வையைச் செலுத்து" என்று

சொல்ல உத்தேசித்து ஒருவன் முதல் வார்த்தையாகிய 'பவானி' என்பதைமட்டும் சொன்னாலும் போதும். அதை கிரியாபதமாகக் கருதி "நான் உன் ஸாயுஜ்யமடைய விரும்புகிறேன்" என்று அவன் சொன்னதாக எண்ணி அவனுக்கு "நிஜஸாயுஜ்ய பதவி"யை தேவி அளிக்கிறாள். உலகிற்கு ஒருவிதமான ஆபத்தும் ஏற்படாமலிருக்கவேண்டுமென்று கவலைகொண்டிருப்பதால் தேவியின் இருபுருவங்களும் கீழ் நோக்கி வளைந்திருக்கின்றனவோ என்று 47வது ச்லோகத்தில் உத்ப்ரேக்ஷை செய்கிறார். காலாக்னி ருத்ரனால் தாபத்தை அடைந்த உலகத்துக்கு தேவி மணிபூரக சக்ரத்தில் இருந்து கொண்டு சைத்யோபசாரம் செய்கிறாளென்று 40வது சுலோகத்தில் காண்கிறோம்.

தேவியின் கடாக்ஷத்தின் மஹிமையை என்னவென்று சொல்லுவது? அந்தக் கடாக்ஷம் ஒருவன்மேல் விழுந்தால் அவன் எவ்வளவு குரூபியாக இருந்தபோதிலும் சிறந்த ரூப லாவண்யத்தையடைகிறான். அவனைப்பார்த்து ரதிதேவி "இவன் என்னுடைய பர்த்தாவான மன்மதன்' என்று எண்ணி ஏமாந்துபோகிறாள். தேவியின் கடாக்ஷத்தின் பலனாகப் பரமதரித்திரன் தான் ஆசைப்பட்டதற்கும் அதிகமான ஐச்வர்யத்தை அடைகிறான். "தரித்ராணாம் சிந்தாமணி குணனிகா" (दरिद्राणां चिन्तामणिगुणनिका) என்று 3வது ச்லோகத்தில் காண்கிறோம். "நான் எந்த விதமான யோக்யதையும் இல்லாதவனாய் உன் ஸமீபத்தில் வருவதற்கு பயந்து வெகுதூரத்தில் நிற்கிறேன். தீனனான என்னிடத்திலும் ஹே தாயே! அந்தக் கருணாகடாக்ஷத்தைச் சற்றுச் செலுத்து. அதனால் உனக்கு ஒரு குறைவும் ஏற்படாது. ஆனால் எனக்கு அது பரமலாபம். சந்திரிகை வித்யாஸமில்லாமல் காடுகளிலும் வீடுகளின்மேலும் விழுவதில்லையா?" என்று 57வது சுலோகத்தில் ஸ்ரீ ஆசார்யபாதாள் கேட்டுக்கொள்கிறார். தேவியின் கடாக்ஷபாதம் ஒருவனுக்கு ஏற்பட்டால் அவனுடைய பாபங்களெல்லாம் தொலைந்து கங்கா, யமுனா, சோணபத்ரா என்னும் மூன்று நதிகளின் ஸங்கமத்தில் ஸ்நானம் செய்த பலனை அடைகிறானென்று 54வது ச்லோகத்தில் காண்கிறோம். தேவி கண் திறந்தால் லோகம் ஸிருஷ்டிக்கப் படுகிறது, தேவி கண் மூடினால் லோகம் பிரளயத்தையடையுமென்று 55-வது ச்லோகத்தில் 'த்ருஷ்டி-ஸ்ருஷ்டி வ்ாத

மென்று வேதாந்தத்தில் சொல்லப்படும் தத்வம் கூறப்பட்டிருக்கிறது. தேவியை அந்தரங்க பக்தியுடனும், யதோக்தமான முறையிலும் உபாஸனை செய்தால் மதுரமான வாக்விலாஸமும், உயர்ந்த கல்பனாசக்தியும் கவிதாசாதுர்யமும் ஏற்படுகின்றன என்று மூன்று சுலோகங்களில் (15-17) சொல்லுகிறார். மிக்கதயையுடன் தேவி கொடுத்த ஸ்தன்யத்தைப் பானம் செய்ததால் ஞானஸம்பந்தர் உத்தமமான கவியாக விளங்கினார் என்று 75வது ச்லோகத்தில் கூறுகிறார். தேவியின் பாத ப்ரக்ஷாலன ஜலத்தைப் பானம் செய்ததினால் பிறவியிலேயே ஊமையாயிருந்தவன் சிறந்த கவித்வத்தை அடைந்தான் என்று 98வது ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தேவியின் அனுக்ரஹத்தினால் ஏற்பட்ட கவிதா சக்தியைக் கொண்டு தேவியைத் தான் ஸ்தோத்திரம் செய்வதாகக் கடைசி ச்லோகத்தில் ஸ்ரீ ஆசார்யபாதாள் சொல்லுகிறார்.

இவ்வளவு பிரபாவமுள்ள தேவி ஸர்வோத்க்ருஷ்டமான தேவதை என்பதில் சிறிதும் ஸந்தேஹமில்லை. தேவியின் ஆக்ஞையை அவளுடைய ப்ரூவிலாசங்களிலிருந்து அறிந்து கொண்டு ப்ரம்மா, விஷ்ணு, சிவன் முதலான தேவர்கள் ஸ்ருஷ்டி ஸ்திதி, ஸம்ஹாரம் முதலான தங்களுடைய காரியங்களில் ஈடுபடுகிறார்கள் (24). மும்மூர்த்திகளும் எப்பொழுதும் தேவியின் பாதாரவிந்தங்களில் நமஸ்கரித்துக்கொண்டிருப்பதால், பக்தர்கள் தேவியின் பாதங்களில் அர்ச்சனை செய்யும் புஷ்பங்கள் அந்த தேவர்களின் சிரஸுகளில் விழுகின்றன. எனவே தேவியைப் பூஜைசெய்தால் மற்ற எல்லா தேவர்களையும் பூஜைசெய்த பலன் ஏற்படுகிறது (25). தேவியைப் பார்வதி என்றாவது லக்ஷ்மிஎன்றாவது, ஸரஸ்வதிஎன்றாவது சொல்லமுடியாது. அவள் ப்ரம்மாபின்னமான மஹாமாயை அல்லது பரப்ரம்ம மஹிஷி என்றுதான் சொல்லவேண்டும்(97) இப்படி தேவியினிடம் அந்தரங்க பக்தி ஏற்படும் முறையிலும், தேவியை யதோக்தமாக உபாஸனைசெய்தால் உயர்ந்த ஞானமும், மோக்ஷலாபமும் ஸித்திக்கும் என்ற நம்பிக்கை ஏற்படும் முறையிலும் தேவியின் குணங்களை வர்ணித்திருக்கிறார். விஷ்ணு, ருத்ரன், ப்ரம்மா முதலான தேவர்களாலேயே தேவி ஆராதிக்கத்தகுந்தவள் என்று முதல் ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மனிதர்களால் பூஜிக்கத்தகுந்தவள் என்பது சொல்லாமலே விளங்குகிறது. ஒரு தெய்வத்தினிடம்

நமக்கு பக்தி ஏற்பட்டு நாம் அந்த தேவதையை உபாஸனை செய்ய முற்படவேண்டுமானால் அந்த தெய்வம் சில அம்சங்களில் நமக்கு ஸமீபத்தில் இருப்பதாகவும், வேறு சில அமசங்களில் நம்மால் எட்ட முடியாத தூரத்தில் இருப்பதாகவும், இன்னும் சில அம்சங்களில் அசிந்த்யமான குண விசேஷங்களுடன் கூடியிருப்பதாகவும் வர்ணிக்கப்படவேண்டும. அந்த முறையில் தான் தேவியின் குணங்களையும், ரூபலாவண்யத்தையும், நிக்ரஹாநுக்ரஹசகதியையும் ஸ்ரீ ஆசாரயபாதாள் வாணித்திருககிறார்.

இதே ரீதியில் தேவி உபாஸனைக்கு உபயுக்தமாக 'மீனாக்ஷீ பஞ்சரத்னம்', 'மீனாக்ஷீ ஸ்தோத்திரம்', 'அன்னபூர்ணா அஷ்டகம்', 'ப்ரமராம்பாஷ்டகம்', 'த்ரிபுரஸுந்தரீ அஷ்டகம்' 'லலிதா பஞ்சரத்னம்', 'த்ரிபுரஸுந்தரீ வேத பாத ஸ்தோத்திரம்', 'த்ரிபுரஸுந்தரீ மானஸ பூஜா ஸ்தோத்திரம்', 'தேவீ புஜங்கம்', ஆனந்தலஹரீ' இவை போன்ற இன்னும் அநேக ஸ்தோத்திர ரத்னங்களை இயற்றி இருக்கிறார்கள். தேவீ ஸ்தோத்திரங்களில் 'ஸௌந்தர்ய லஹரீ' யென்பது தனிச் சிறப்புடன் விளங்குகிறது இதன் கர்த்தா யாரெனறு நிாணயிக்கமுடியாமல் இருந்ததென்று 'டிண்டிமம்' என்னும் ப்ராசீன வ்யாக்யானத்தில் சொல்லப் படுகிறது. 'ஸுதாவித்யோதினீ' என்னும் வயாக்யானத்தில் இதன் கர்த்தா ப்ரவரஸேனர் என்ற க்ஷத்திரியர் என்று சொல்லப்படுகிறது. லக்ஷ்மீதர வ்யாக்யானத்தில் 'ஸௌந்தர்யலஹரீ' என்னும் ஸ்தோத்திரத்தை ஸ்ரீ சங்கர பகவத்பாதர்தான் இயற்றினார் என்று நிச்சயமாகச் சொல்லப்படுகிறது.

தேவீ பக்தியின் பரமகாஷ்டையும் உயர்ந்த கவிதா சாதுர்யமும் இந்த ஸ்தோத்திரத்தில் ஊடுருவி ஒருங்கே அமைந்திருப்பதை இந்த ஸ்தோத்திரத்தில் பார்க்கலாம். இரண்டும் பிரிக்கமுடியாதவகையில் இணைக்கப்பட்டிருப்பதால் அவைகளுக்குள் நெருங்கிய ஸம்பந்தமிருக்கிறதென்று நிச்சயமாகச் சொல்லலாம். பக்தியின் பரீவாஹம் வார்த்தைகள் மூலம் வெளிககிளம்பும்போது இந்த வாக்கியங்கள் கவிச்சுவை நிரம்பியனவாகத் தானாகவே ஏற்படுகின்றன. கவி ரவீந்த்ரநாத் தாகூரின் (Rabindranath Tagore) 'கீதாஞ்சலி' என்னும் பாமாலையைப்பற்றி 'லண்டன் டைம்ஸ் லிடரரி'

அநுபந்தத்தில் (London Times Literary Supplement) ஒரு விமர்சகர் "No religious man was more poetic and no poet was more religious than Tagore" என்று எழுதினர். 'ஸௌந்தர்ய லஹரி'யை உலகிற்கருளிய ஸ்ரீ ஆசார்யபாதாளுக்கும் அந்த விமர்சனம் அப்படியே பொருத்தமாயிருக்கிறது. பக்தியும் கவிதையும் இரண்டறக்கலந்து ஏகரஸமாக விளங்குவதை இந்த ஸ்தோத்திரத்தில் பார்க்கலாம்.

'ஸௌந்தர்யலஹரி'என்னும் உத்தமமான ஸ்தோத்திரத்தில் நூறுச்லோகங்கள் உள்ளன. அவைகளில் முதல் 41 ச்லோகங்கள் 'ஆனந்தலஹரி' எனப்படும். அவைகள் ஆசார்ய பாதாளுக்குக் கைலாசத்தில் சிவபெருமான் அளித்தாரென்று ஒரு ஐதிஹ்யமுண்டு. ஆழ்ந்த சிவத்யானத்தில இருந்தபோது இந்த நாற்பத்தி ஒன்று ச்லோகங்கள் ஸ்ரீ ஆசார்யபாதாளின் ஹ்ருதயத்தில் ஸ்புரித்தனவென்று அந்த ஐதிஹ்யத்திற்கு அர்த்தம் செய்யலாம். பிறகு வரும் ஐம்பத்தொன்பது ச்லோகங்களில் தேவியின் கேசாதிபாதாந்த வர்ணனை கொடுக்கப்பட்டிருக்கிறது. அவைகளுக்கு 'ஸௌந்தர்யலஹரி' என்று பெயர். இந்த க்ரந்தத்திற்கு லக்ஷ்மீதர வ்யாக்யானத்தைதவிர 'டிண்டிமம்', 'ஸுதா வித்யோதினி' என்ற வேறு பல வியாக்யானங்கள் இருப்பதாகத் தெரியவருகிறது. ஆனல் லக்ஷ்மீதர வியாக்யானம்தான் மைசூர் சர்க்கார் அவர்களால் அசசிடப்பட்டு எங்கும் பிரசாரத்தில் இருந்து வருகிறது. அதையனுஸரித்துத்தான் இந்த தமிழாக்கம் செய்யப்பட்டு இருக்கிறது. 'ஆனந்தலஹரி' என்னும் முதல் நாற்பத்தி ஒரு ச்லோகங்கள் 'லக்ஷ்மீதரா', 'ஸௌபாக்யவர்த்தினி', 'அருணமோதினி' என்ற மூன்று வியாக்யானங்களுடன் சிருங்ககிரி ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகர பாரதீ மஹா ஸ்வாமிகளுடைய ஸ்ரீ முகத்துடன் ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ அச்சுக்கூடத்தில் 1953-வது வருஷம் ஸ்ரீ சங்கர குருகுலம் வெளியீடாக ப்ரசுரிக்கப்பட்டது.

M. K. வெங்கடராம அய்யர்,
மணத்தட்டை,

## விஷய அட்டவணை.

**கேசாதி பாதாந்த வர்ணனம்**

———

|| श्रीः ||



## ஸ்ரீ சக்ரம்

चतुर्भिः श्रीकण्ठैः शिवयुवतिभिः पञ्चभिरपि
प्रभिन्नाभिः शम्भोर्नवभिरपि मूलप्रकृतिभिः ।
चतुश्चत्वारिंशद्वसुदलकलाश्रत्रिवलय-
त्रिरेखाभिः सार्धं तव शरणकोणाः परिणताः ॥

(ஸ்ரீ ஸௌந்தர்யலஹரீ சுலோகம் 11)

|| श्रीः ||

|| श्रीललितामहात्रिपुरसुन्दर्यै नमः ||

# || सौन्दर्यलहरी ||

# ஸௌந்தர்யலஹரீ

(ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் அருளியது)

(அ) எல்லா சக்திகளுக்கும் இருப்பிடமாக இருப்பவளும், விஷ்ணு, பரமசிவன், நான்முகன் முதலான தேவதைகளால் போற்றத்தகுந்தவளுமான அம்பிகையைத் துதிக்க பூர்வஜன்ம ஸுக்ருதமில்லாத தனக்கு என்ன யோக்யதை இருக்கிறது என்று ஆரம்பம் செய்கிறார் ஸ்ரீ ஆசார்யபாதாள் :—

शिवः शक्त्या युक्तो यदि भवति शक्तः प्रभवितुं
न चेदेवं देवो न खलु कुशलः स्पन्दितुमपि ।
अतस्त्वां आराध्यां हरिहरविरिञ्चादिभिरपि
प्रणन्तुं स्तोतुं वा कथमकृतपुण्यः प्रभवति ॥ १ ॥

*ஶிவ: ஶக்த்யா யுக்தோ யதி பவதி ஶக்த: ப்ரபவிதும்*
*ந சேதேவம் தேவோ ந கலு குஶல: ஸ்பந்திதுமபி ।*
*அதஸ்த்வாம் ஆராத்யாம் ஹரிஹரவிரிஞ்சாதிபிரபி*
*ப்ரணந்தும் ஸ்தோதும் வா கதமக்ருதபுண்ய: ப்ரபவதி ॥*

(பதவுரை) **हे भगवति**-ஹே பரதேவதையே! **शिवः**-சிவ பெருமான், **शक्त्या युक्तो यदि**-சக்தியுடன் கூடிஇருப்பாரேயானால், **प्रभवितुं**-எந்தக் காரியத்தைச் செய்வதற்கும், **शक्तः भवति**-சக்தியுள்ளவராக ஆகிறார். **एवं न चेत्**-அப்படி இல்லாவிடில், **देवः**-அந்த சிவ பெருமான், **स्पन्दितुमपि**-தான் அசைவதற்கும்கூட, **कुशलः**-ஸாமர்த்யமுள்ளவராக, **न खलु (भवति)**-நிச்சயம் ஆகமாட்டார். **अतः**-ஆகவே, **हरिहरविरिञ्चा-**

**दिभिरपि**-ஹரி, ஹரன், நான்முகன் போன்ற தேவதைகளா லும், **आराध्यां**–ஆராதிக்கத்தகுந்தவளான **त्वां**-உன்னை, **प्रणन्तुं**–நமஸ்கரிக்கவோ **स्तोतुं वा**-துதிக்கவோ, **अकृतपुण्यः**– பூர்வஜன்மத்தில் புண்யம் செய்யாதவன், **कथं प्रभवति**– எப்படி யோக்யதையுள்ளவனாக ஆவான் ?

(**தாத்பர்யம் :**) உலகில் தோன்றும் எவ்வித சக்திக்கும் ஆதாரமாக இருப்பவளும், பிரம்மாதி தேவர்களாலும் பூஜிக்கத்தகுந்தவளுமான ஆதிசக்தி என்னும் பரதேவதை யைப் பூர்வஜன்ம ஸுக்ருதமில்லாத நான் சரீரத்தால் நமஸ்கரிப்பதற்கோ, வாக்கால் துதிப்பதற்கோ, மனதால் த்யானம் செய்வதற்கோ என்ன அர்ஹதையுள்ளவன் என்று தாழ்மை புத்தியுடன் ஸ்ரீ சங்கரபகவத்பாதாள் வினவுகிறார்.

சக்திஸம்பந்தம் இல்லாவிடில் சிவனால் அசையவும் முடியாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. லோகரீதியாகப் பார்த்தால் ஸ்த்ரீஸம்பந்தம் இலலாமல் புருஷனால் மட்டும் பிரஜைகளை ஸ்ருஷ்டிக்கமுடியாது என்பது ப்ரஸித்தம். சக்தி ஸ்வரூபமான சிவயுவதிகள் எனப்படும் ஐந்து த்ரி கோணங்களும், சிவஸம்பந்தமான ஸ்ரீகண்டம் எனப்படும் நான்கு த்ரிகோணங்களும் சேர்ந்துதான் ஸ்ரீசக்ரம் ஏற்படு கிறது. ஸ்ரீசக்ரத்திலிருந்துதான் ஜகத் உத்பத்தியாகிறது என்பது ஸ்ரீவித்யையின் கொள்கை. கேவல அத்வைத சாஸ்திரரீதியில் பார்த்தால் ஆகாயம்போல் எங்கும் நிறைந்த தாயும், நிராகாரமாயும் உள்ள நிர்குணப்ரம்மத்திற்கு யாதொரு விகாரமும் இருப்பதற்கு நியாயம் இல்லை. சக்தி என்ற அவித்யையுடன் ஸம்பந்தம் ஏற்பட்டால்தான் அது ஜகத்திற்குக் காரணமாகிறது. "**अविद्यावच्छिन्नचैतन्यस्यैव ब्रह्मणः जगन्निर्माणशक्तत्वात्**" என்று லக்ஷ்மீதரவியாக்யானத் தில் காணப்படுகிறது. (1)

(அ) மேற்கூறிய ப்ரம்மாதி தேவர்கள் தேவியை வழி பட்டு என்ன விசேஷ சக்தியை அடைந்தார்கள் என்பது விவரிக்கப்படுகிறது :—

तनीयांसं पांसुं तव चरणपङ्केरुहभवं
विरिञ्चिः संचिन्वन् विरचयति लोकानविकलम् ।
वहत्येनं शौरिः कथमपि सहस्रेण शिरसां
हरः संक्षुद्यैनं भजति भसितोद्धूलनविधिम् ॥ २ ॥

தநீயாம்ஸம் பாம்ஸுும் தவ சரணபங்கேருஹபவம்
விரிஞ்சி: ஸஞ்சின்வன் விரசயதி லோகான் அவிகலம் ;
வஹத்யேனம் ஶௌரி: கதமபி ஸஹஸ்ரேண ஶிரஸாம்
ஹர: ஸம்க்ஷுத்யைநம் பஜதி பஸிதோத்தூளன விதிம் ॥

**हे भगवति**-ஹே பராசக்தியே! **तव**-உனனுடைய **चरणपङ्केरुहभवं**- பாதகமலங்களிலிருந்து உண்டாகும், **तनीयांसं**-அதிஸூக்ஷ்மமான, **पांसुं**-தூளியை, **संचिन्वन्**-திரட்டி எடுத்துக்கொண்டு, **विरिञ्चिः**-ப்ரம்மதேவன், **लोकान्**-ஸகல லோகங்களையும், **अविकलं**-ஒன்றோடொன்று சேராமல் தனித்தனியே இருக்கும்படி, **विरचयति**-ஸ்ருஷ்டி செய்கிறார். **एनं**-அந்தத் தூளியை, **शौरिः**-விஷ்ணு, **शिरसां सहस्रेण**-தனது ஆயிரம் தலைகளினால், **कथमपि**-மிக்க சிரமத்துடன், **वहति**-தாங்குகிறார். **एनं**-அதே தூளியை, **हरः**-சிவபெருமான், **संक्षुद्य**-நன்றாகப் பொடிசெய்து, **भसितोद्धूलन-विधिं**-சரீரத்தில் விபூதி தரித்தல் என்ற நியமத்தை, **भजति**-செய்துகொள்கிறார்.

பரதேவதையினுடைய பாததூளியின் மஹிமையை இந்த சுலோகத்தில் ஸ்ரீ ஆசார்யபாதாள் சொல்லுகிறார்கள். இதன் பலத்தைக்கொண்டுதான் ப்ரம்மா மேல்லோகங்கள் ஏழு, கீழ்லோகங்கள் ஏழு, ஆகிய பதினான்கு லோகங்களையும் ஸ்ருஷ்டி செய்கிறார். அவரால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட லோகங்களை ஸ்ரீ மஹா விஷ்ணு ஆயிரம் தலைபடைத்த ஆதிசேஷனாக நின்று அதே பாததூளியின் ப்ரபாவத்தால் ரக்ஷிக்கிறார். ப்ரளய கர்த்தாவான சிவன் அந்த பாத தூளியைப் பொடியாக்கி தன் சரீரம் முழுவதும் பூசிக்கொள்கிறார். தேவியின் பாததூளியின் பெருமை இதனால் நன்கு

விளங்குகிறது. "**ब्रह्मविष्णुमहेश्वराणां प्रपञ्चविषयसृष्टिस्थितिलयकर्तृत्वं भगवत्याः पादाब्जरेणुमहिमायत्तम्**" என்பது தாத்பர்யம் என்று லக்ஷ்மீதரர் எழுதியிருக்கிறார். (2)

(அ) அசேதனமான பாததூளிக்கு இத்தகைய மஹிமை எப்படி ஏற்படும் என்று சங்கித்து அதன் மஹிமையை மேலும் விளக்குகிறார் :—

**अविद्यानामन्तस्तिमिरमिहिरद्वीपनगरी**
**जडानां चैतन्यस्तवकमकरन्दस्रुतिझरी ।**
**दरिद्राणां चिन्तामणिगुणनिका जन्मजलधौ**
**निमग्नानां दंष्ट्रा मुररिपुवराहस्य भवति ॥ ३ ॥**

அவித்யாநாம் அந்தஸ்திமிரமிஹிரத்வீப நகரீ
ஜடாநாம் சைதன்யஸ்தபகமகரந்தஸ்ருதிஜரீ ।
தரித்ராணும் சிந்தாமணிகுணநிகா ஜன்மஜலதௌ
நிமக்நாநும் தம்ஷ்ட்ரா முரரிபுவ்ராஹஸ்ய பவதி ॥

**हे भगवति**–ஹே தாயே! **अविद्यानां**-அக்ஞானிகளுடைய **अन्तस्तिमिरमिहिरद्वीपनगरी**–ஹ்ருதயத்தில் குடிகொண்டிருக்கும் இருட்டுக்கு ஸூர்யோதயமாகும் தீவிலுள்ள நகரமாகவும், **जडानां**–மந்தபுத்திகளுக்கு, **चैतन्यस्तवकमकरन्दस्रुतिझरी** ஞானமென்னும் பூங்கொத்திலிருக்கும் ரஸப் பெருக்கின் பிரவாஹமாகவும், **दरिद्राणां**–ஏழைகளுக்கு, **चिन्तामणिगुणनिका** — இச்சைகளைப்பூர்த்தி செய்விக்கும் சிந்தாமணி என்னும் ரத்னத்தின் குவியலாகவும், **जन्मजलधौ**-பிறவிக்கடலில், **निमग्नानां**–மூழ்கிக்கிடப்பவர்களுக்கு, **मुररिपुवराहस्य**–ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அவதாரமாகிய ஆதிவராஹ மூர்த்தியின், **दंष्ट्रा**–தெத்திப்பல்லாகவும், **भवति**–(தேவியின் பாததூளி) ஆகிறது.

நம்முடைய உண்மை ஸ்வரூபமானது மூல அவித்யையினுல் மறைக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் அவித்யை என்பது இருட்டுக்குச் சமானமாகிறது. இருட்டு எப்படி

ஸூர்யோதயமானவுடன் மறைந்துவிடுகிறதோ, அதே மாதிரி தேவியினுடைய பாததூளியின் பிரபாவத்தினுல் ஜீவர்களுடைய அக்ஞானம் மறைந்து உத்தமமான ஆத்ம ஞானம் ஏற்படுகிறது. கேனேபநிஷத்தில் இந்த்ராதி தேவர் களுக்கு தேவியின் அனுக்ரஹத்தால் ப்ரம்மஞானம் ஏற்பட்ட தாகச் சொல்லப்பட்டிருக்கிறது. பரதேவதை 'ஹார்த ஸந்தமஸாபஹா' (हार्दसंतमसापहा 171) என்று லலிதாத்ரிசதி ஸ்தோத்திரத்திலும் வர்ணிக்கப்பட்டிருக்கிருள். 'பக்த ஹார்ததமோபேத பானுமத்பானுஸந்ததி:'(404)(भक्तहार्दतमोभेदभानुमद्भानुसंततिः) என்று லலிதா ஸஹஸ்ரநாமத்திலும் காணப்படுகிறது. புஷ்பங்களிலிருந்து தேன் பெருகுவது போல் தேவியின் பாததூளியின் அனுக்ரஹத்தால் மந்த புத்திகளுக்கு விசேஷமான ஞானசக்தி ஏற்படுகிறது. நித்ய தரித்ரர்களுக்கு ஏராளமான ஐச்வர்யத்தைக் கொடுக்கக் கூடிய சிந்தாமணி போன்றது தேவியின் பாததூளி. 'தீனுனுமதிவேலபாக்யஜனனீம்' (दीनानां अतिवेलभाग्यजननीं) என்று 'ப்ரமராம்பா அஷ்டகத்தில் தேவி வர்ணிக்கப்பட்டிருக் கிருள். காமக்ரோதாதிகளுக்கு உட்பட்டு ஸம்ஸாரமென்னும் ஸமுத்திரத்தில் மூழ்கிக் கிடப்பவர்களைக் கரையேற்றுவதில் ஆதிவராஹமூர்த்தியின் தெத்திப்பல்லுக்கு ஒப்பாக தேவி யின் பாததூளி சொல்லப்படுகிறது. ஹிரண்யாக்ஷனுல் அபஹரிக்கப்பட்டு ஸமுத்திரத்தில் மூழ்கடிக்கப்பட்டிருந்த பூமியை ஸ்ரீ மஹாவிஷ்ணு வராஹமூர்த்தியாக அவதரித்து தன் தெத்திப்பல்லால் ஜலத்திலிருந்து வெளியே எடுத்துக் கொண்டுவந்து காப்பாற்றினுர் என்பது புராணக் கதை. [1]'தனுப்ருதாம் தாரித்ரியமுத்ராத்விஷே' (तनुभृतां दारिद्र्यमुद्राद्विषे) என்று மூகபஞ்சசதியில் சொல்லப்பட்டிருப்பதும் கவனிக்கத்தக்கது. அவித்யை என்பது வித்யையின் அபாவத்தைக் குறிப்பதுமட்டுமல்ல. தவறுதலான அபிப்ராயங்களையும் குறிக்கிறது. ஆகவே அவித்யை என்பது பாவபதார்த்தம். अविद्यानां अविद्याऽऽविष्टचित्तानां अज्ञानिनामित्यर्थः; न तु अविद्यमानविद्यानां, अविद्यायाः भाव-

1. ஸ்துதி சதகம் சுலோகம் 2.

रूपत्वात्" என்று லக்ஷ்மீதர வ்யாக்யானத்தில் காண்கிறோம். (3)

(அ) தேவியின் பாததூளியின் மஹிமையைச் சொன்னபிறகு தேவியின் பாதங்களின் அஸாதாரணமான பெருமையை வர்ணிக்கிறார் :—

त्वदन्यः पाणिभ्यामभयवरदो दैवतगण-
स्त्वमेका नैवासि प्रकटितवराभीत्यभिनया ।
भयात्त्रातुं दातुं फलमपि च वाञ्छासमधिकं
शरण्ये लोकानां तव हि चरणावेव निपुणौ ॥ ४ ॥

த்வதந்ய: பாணிப்யாம் அபயவரதோ தைவதகண:
த்வமேகா நைவாஸி ப்ரகடிதவராபீத்யபிநயா ।
பயாத் த்ராதும் தாதும் பலமபி ச வாஞ்சாஸமதிகம்
ஶரண்யே லோகானாம் தவ ஹி சரணாவேவ நிபுணௌ ॥

हे भगवति-ஹே தாயே! त्वदन्यः-உன்னைக் காட்டிலும் வேறான, दैवतगणः-தெய்வ ஸமூஹம், पाणिभ्यां-கைகளால், अभयवरदो (भवति)-அபயமென்னும் மோக்ஷத்தையும், வரமென்னும் இஷ்டார்த்தங்களையும் கொடுக்கிறதாக ஆகிறது. त्वं एकैव-நீ ஒருவள்தான் प्रकटितवराभीत्यभिनया नासि-இஷ்டார்த்தம், மோக்ஷம் (இவைகளின்) முத்ரைகளை ப்ரகடனம் செய்யாமலிருக்கிறாய், भयात्-ஸம்ஸார பயத்திலிருந்து, त्रातुं-காப்பாற்றுவதற்கும், वाञ्छासमधिकं फलं च-பக்தன் கேட்பதைவிட அதிகமான பலனையும், दातुमपि-கொடுப்பதற்கும், हे लोकानां शरण्ये-ஸர்வஜீவர்களும் சரணம் அடையத் தகுந்த தாயே! तव चरणावेव-உன் பாதங்களே, निपुणौ हि-ஸாமர்த்யமுள்ளவைகளாகின்றன.

ப்ரம்மா, விஷ்ணு, சிவன் போன்ற தெய்வங்கள் கைகளினால் அளிக்கும் அப்யுதயத்தையும் அபவர்க்கத்தையும் தேவி தன் பாதங்களாலேயே தருகிறாள் என்று சொல்வதின் தாத்பர்யம் எல்லா தெய்வங்களையும்விட தேவி

உத்க்ருஷ்டமானவள் என்று ஸூசிப்பதற்காக. இதனுல் மற்ற தெய்வங்களைக் குறைத்துச் சொன்னதாக அர்த்த மில்லை. ஏதாவது ஒரு தெய்வத்தை உபாஸனை செய்யும் போது அதனிடத்தில் ப்ரம்மபுத்தி வைக்கவேண்டும். ஆகை யால் அதுதான் ஸர்வோத்க்ருஷ்டமான தேவதை என்று ஏற்படும். 'நஹி நிந்தா' (नहि निन्दा) என்னும் மீமாம்ஸா சாஸ்திரத்தின் நியாயப்படி இதர தெய்வங்களை தூஷிப் பதாக ஏற்படாது. அபயம் என்ருல் மோக்ஷமென்று பொருள். "த்விதீயாத் வை பயம் பவதி" (द्वितीयाद्वै भयं भवति) என்று உபநிஷத் சொல்லுகிறது. இரண்டாவது வஸ்து இருப்பதாக எண்ணிஞல்தான் பயம் ஏற்படுகிறது. இருப்பது ப்ரம்மம் ஒன்றே என்ற ஞானம் ஏற்பட்ட பிறகு பயத்திற்கு இடமே இல்லை. "அபயம் வை ஜனக ப்ராப்தோஸி" (अभयं वै जनक प्राप्तोऽसि) என்று ஜனகமஹா ராஜாவைப் பார்த்து யாக்ஞவல்க்யர் சொல்லுவதின் தாத்பர்யம் என்னவென்ருல் ஜனகர் மோக்ஷநிலையை அடைந்துவிட்டார் என்பதாம். ஐசுவர்யத்தையுத்தேசித்து உபாஸிக்கிறவர்களுக்கு அவர்கள் விரும்பியதற்கு அதிக மாகவே தேவி கொடுக்கிருள் என்பதை "த்வம் அக்ஞாநாம் இச்சாதிகமபி ஸமர்த்தா விதரணே" त्वं अज्ञानां इच्छाधिक-मपि समर्था वितरणे) என்று ஆனந்தலஹரி என்னும் ஸ்தோத் திரத்தில் சொல்லுகிருர். (4)

(அ) தேவியின் சரண மாஹாத்ம்யத்தை மேலும் சொல்லுகிருர் :—

हरिस्त्वामाराध्य प्रणतजनसौभाग्यजननीं
पुरा नारी भूत्वा पुररिपुमपि क्षोभमनयत् ।
स्मरोऽपि त्वां नत्वा रतिनयनलेह्येन वपुषा
मुनीनामप्यन्तः प्रभवति हि मोहाय महताम् ॥ ५

ஹரிஸ்த்வாமாராத்ய ப்ரணதஜனஸௌபாக்யஜனனீம்
புரா நாரீ பூத்வா புரரிபுமபி க்ஷோபமநயத் ।

ஸ்மரோபி த்வாம் நத்வா ரதிநயனலேஹ்யேன வபுஷா
முனீநாமப்யந்த: ப்ரபவதி ஹி மோஹாய மஹதாம் ॥

हे भगवति-ஹே பராசக்தியே! प्रणतजन-வணங்கின ஜனங்களுக்கு, सौभाग्यजननीं-ஸகல ஐச்வர்யங்களையும் கொடுக்கிறவளான, त्वां-உன்னை, पुरा-முன்காலத்தில், हरिः-ஸ்ரீ மஹாவிஷ்ணு, आराध्य-பூஜைசெய்து, नारी भूत्वा-ஸ்த்ரீரூபம் எடுத்து, पुररिपुमपि-சிவனையும்கூட, क्षोभमनयत्-மனோவிகாரமடையும்படிச் செய்தார். स्मरोऽपि-மன்மதனும் கூட, त्वां-உன்னை, नत्वा-நமஸ்கரித்து, रतिनयनलेह्येन वपुषा-தன் பார்யையான ரதியின் கண்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கும் சரீரத்தால் महतां मुनीनामपि-பெரிய முனீச்வரர்களுக்கும்கூட, अन्तः-மனதில, मोहाय-வ்யாமோஹத்தை உண்டுபண்ணுவதற்கு, प्रभवति हि-ஸமர்த்தனாகஆகிறான் அல்லவா?

த்ரிபுரஸம்ஹாரத்திற்குப் பிறகு மிகவும் உக்ரமூர்த்தியாயிருந்த பரமசிவனை சாந்தப்படுத்துவதற்காக ஸ்ரீ மஹாவிஷ்ணு மோஹினிரூபம் எடுத்தார் என்பது ப்ரஸித்தமான புராணக்கதை. ரதி மன்மதனின் பத்னீ. அவள் அழகில சிறந்தவள். அவளும் கண்டு மோஹிக்கும்படியான ரூபத்தை மன்மதன் அடைகிறான். ஸ்ரீமஹா விஷ்ணுவும், மன்மதனும் தேவியை ஆராதித்து அத்யத்புதமான ரூபலாவண்யத்தை அடைகிறார்கள் என்பது கருத்து. (5)

(அ) தேவியின் அபாங்க வீக்ஷணத்தின் பெருமையை மேலும் சொல்லுகிறார் :—

धनुः पौष्पं मौर्वी मधुकरमयी पञ्च विशिखाः
वसन्तः सामन्तो मलयमरुदायोधनरथः ।
तथाऽप्येकः सर्वं हिमगिरिसुते कामपि कृपा-
मपाङ्गात्ते लब्ध्वा जगदिदमनङ्गो विजयते ॥ ६ ॥

தனு: பௌஷ்பம் மௌர்வீ மதுகரமயீ பஞ்ச விசிகா:
வஸந்த: ஸாமந்தோ மலயமருதாயோதநரத: |
ததாப்யேக: ஸர்வம் ஹிமகிரிஸுதே காமபி க்ருபாம்
அபாங்காத்தே லப்த்வா ஜகதிதம் அனங்கோ விஜயதே ||

**हे हिमगिरिसुते**-ஹே ஹிமவானின் புதல்வியே! **धनुः**-எந்த மன்மதனுடைய வில்லானது, **पौष्पं**-புஷ்பமாக இருக்கிறதோ, **मौर्वी**-ஞாண் கயிறுனது, **मधुकरमयी**-தேனீக்களின் வரிசையோ, **विशिखाः** - பாணங்கள், **पञ्च** - ஐந்துதானோ, **सामन्तः**-மந்திரி, **वसन्तः**-வஸந்தகாலமோ, **आयोधनरथः**-யுத்தத்திற்கு ரதம், **मलयमरुत्**-மலய பர்வதத்தின் காற்றோ, **तथापि** அப்படியிருந்தும், **सः अनङ्गः**-அந்த மன்மதன், **एकः**-ஒருவனாக இருந்து, **ते अपाङ्गात्**-உன்னுடைய கடைக்கண்ணிலிருந்து, **कामपि कृपां**-வர்ணிக்க முடியாத க்ருபையை, **लब्ध्वा**-அடைந்து, **इदं सर्वं जगत्**-இந்த உலகமனைத்தையும், **विजयते**-தன்வசப்படுத்திக்கொள்கிறான்.

உலகம் முழுதும் காமனுடைய ஆக்ஷிக்கு உட்பட்டிருக்கிறது. நீரையும், காற்றையும், உலர்ந்துபோன இலைகளையும் உணவாகக்கொண்ட தபஸ்விகளும்கூட மன்மதனின் வலையில் சிக்கிவிடுகிறார்கள். ஆயினும் அவனுக்கு என்ன பலம் இருக்கிறது? அவன் கையில் ஏந்தியிருக்கும் வில்லோ தாமரை, மல்லிகை, கருநெய்தல் புஷ்பம், மாம்பூ, அசோக புஷ்பம் இவைகளால் ஆனது. தேனீக்கள் ஞாண்கயிறு; புஷ்பங்கள்தான் அம்புகள். அவைகளும் ஐந்துதான். ஆறாவது கிடையாது. மந்திரி வஸந்தகாலம்; வேறு உதவி கிடையாது. இப்படி இருந்தும் மன்மதன் உலகத்தையே ஜயிக்கிறான். அதற்குக் காரணம் தேவியின் கடாக்ஷ வீக்ஷணம்தான். அந்த வீக்ஷணத்தின் மஹிமை மனத்துக்கும் வாக்குக்கும் எட்டாதது. அது இத்தகையதென்று சொல்லமுடியாது. (6)

(அ) சுபாகம தந்த்ரத்தை அனுஸரித்து தேவியின் த்யானத்தைக் கூறுகிறார் :—

क्वणत्काञ्चीदामा करिकलभकुम्भस्तननता
परिक्षीणा मध्ये परिणतशरच्चन्द्रवदना ।
धनुर्बाणान् पाशं सृणिमपि दधाना करतलैः
पुरस्तादास्तां नः पुरमथितुराहोपुरुषिका ॥ ७ ॥

க்வணத்காஞ்சீதாமா கரிகலபகும்பஸ்தனநதா
பரிக்ஷீணா மத்யே பரிணதஶரச்சந்த்ரவதநா ।
தனுர்பாணான் பாஶம் ஸ்ருணிமபி ததாநா கரதலை:
புரஸ்தாதாஸ்தாம் ந: புரமதிது: ஆஹோபுருஷிகா ॥

क्वणत् - 'ஜல்' 'ஜல்' என்று சப்திக்கின்ற, काञ्चीदामा-சலங்கைகளோடு கூடின ஒட்டியாணத்தை தரித்தவளாயும், करिकलभकुम्भस्तननता-யானைக்குட்டியின் மஸ்தகம் போன்ற ஸ்தனங்களால் சிறிது வளைந்தவளாயும், मध्ये परिक्षीणा-மெல்லிய இடுப்பையுடையவளாயும், परिणतशरच्चन्द्रवदना-சரத்கால பூர்ணசந்திரனைப் போன்ற முகத்தையுடையவளாயும், धनु:-வில்லையும், बाणान्-அம்புகளையும், पाशं-பாசக் கயிற்றையும், सृणिमपि-ஈட்டியையும், करतलैः-கைகளால், दधाना—தரித்துக்கொண்டவளாயும், पुरमथितुः—பரமசிவனுடைய, आहोपुरुषिका—அஹங்கார ரூபிணியுமான பர தேவதையானவள், नः-நமக்கு, पुरस्तात्-முன்னிலையில் आस्ताम्-இருக்கட்டும்.

நாம் தியானம் செய்யும்போது தேவி தன்னுடைய நிஜ ஸ்வரூபத்துடன் தர்சனம் கொடுக்கவேணுமென்று பிரார்த்திக்கிறார். நடக்கும்போது 'ஜல்', 'ஜல்' என்று சப்திக்கும் தங்கச் சலங்கைகளுடன் கூடிய ஒட்டியாணத்தைத் தரித்தவளாகவும், குசபாரத்தினால் சற்று வளைந்தவளாகவும், பிடி இடையாளாகவும், சரத்காலத்திய பூர்ணசந்த்ரனைப்போல் முகமண்டலத்தை உடையவளாகவும், நான்கு கைகளில் வில், அம்பு, பாசம், ஈட்டி இவைகளைப் பிடித்தவளாகவும், பரமசிவனின் ப்ரத்யகாத்ம ஸ்வரூபிணியாகவும் நமக்கு தர்சனம் கொடுக்கவேணுமென்று கேட்டுக்கொள்கிறார்.

புருஷ: (पुरुषः) என்ருல் பரமேசுவரன், ‘புருஷாத் ந பரம் கிஞ்சித்’ (पुरुषान्न परं किंचित्) என்று உபனிஷத்தில் காண்கிரேம். அஹோ (अहो) என்பது ஸாதாரணமாக ஆச்சர்யத்தைக் குறிக்கும் பதம். ஆனல் இங்கு ‘அஹம்’ என்ற ப்ரத்யகாத்மாவைத்தான் குறிக்கிறது. ஆஹோபுருஷிகா (आहोपुरुषिका) என்ருல் காமேச்வராபின்னமான ப்ரத்யகாத்மஸ்வரூபிணி என்று பொருள. ‘**आहोपुरुषिका पुरमथितुः शक्त्याविष्करणरूपा देवीत्यर्थः**’ என்று ‘அருணமோதினீ’ என்னும் வ்யாக்யானத்தில் கண்டிருக்கிறது. ‘மஹஸ்த்ரைபுரம் சங்கராத்வைதம்’ (महस्त्रैपुरं शङ्कराद्वैतं) என்று இதே அர்த்தத்தில் தேவீ புஜங்கஸ்தோத்திரத்தில் (சு. 1) சொல்லியிருக்கிருர். (7)

(அ) த்யானம் செய்யவேண்டிய முறையை மேலும் சொல்லுகிருர் :—

सुधासिन्धोर्मध्ये सुरविटपिवाटीपरिवृते
मणिद्वीपे नीपोपवनवति चिन्तामणिगृहे ।
शिवाकारे मञ्चे परमशिवपर्यङ्कनिलयां
भजन्ति त्वां धन्याः कतिचन चिदानन्दलहरीम् ॥

ஸுதாஸிந்தோ: மத்யே ஸுரவிடபிவாடீபரிவ்ருதே
மணித்வீபே நீபோபவநவதி சிந்தாமணிக்ருஹே ।
ஶிவாகாரே மஞ்சே பரமஶிவபர்யங்கநிலயாம்
பஜந்தி த்வாம் தன்யா: கதிசன சிதானந்தலஹரீம் ॥

**हे भगवति**-ஹே தாயே! **सुधासिन्धोर्मध्ये**- அமிருத ஸமுத்திரத்தின் நடுவில், **सुरविटपिवाटीपरिवृते**-கலபவிருக்ஷங்களின் வரிசையால் சூழப்பட்ட, **मणिद्वीपे** - ரத்னமயமான தீவில், **नीपोपवनवति** - கதம்பவ்ருக்ஷங்கள் நிறைந்த உத்யான வனத்தோடுகூடின, **चिन्तामणिगृहे**-சிந்தாமணி என்னும் ரத்னங்களால் கட்டப்பட்ட அரண்மனையில், **शिवाकारे मञ्चे**-சிவாகாரமான கட்டிலில், **परमशिवपर्यङ्कनिलयां**-பரமசிவதத்வமென்னும்

படுக்கையில் சயனித்துக் கொண்டிருப்பவளாக, **चिदानन्द-लहरीं त्वां**-சித்ஸ்வரூபமாயும் ஆனந்தப்ரவாஹமாயுமுள்ள உன்னை, **कतिचन धन्याः**-சில பாக்கியசாலிகள், **भजन्ति**-த்யானம் செய்கிறார்கள்.

அமிருதக்கடலின் மத்யபாகத்தில் மணித்வீபம் என்று ஒரு தீவு இருக்கிறது. அந்தத் தீவில் கல்பக விருக்ஷங்கள் ஏராளமாக இருக்கின்றன. அவைகளின் நடுவில் ஒரு சிறிய கதம்பவனம். அதற்குள் சிந்தாமணி என்னும் உயர்ந்த ரத்னங்களால் நிர்மாணிக்கப்பட்ட மாளிகையில் சிவாகாரம் என்னும் கட்டிலில் பரமசிவ தத்வம் என்னும் படுக்கையில் கேவலம் சித்ஸ்வரூபமாகவும் ஆனாநதானுபவத்திலிருப்பவளாகவும் தேவியை சில புண்யவான்கள் த்யானம் செய்கிறார்கள். இது மானஸிகமான பூஜை. இதற்கு ஸமயாசாரம் என்று பெயர். "ஸமயாசாரோ நாம ஆந்தரபூஜாரதி:" (**समयाचारो नाम आन्तरपूजारतिः**) 'தஹராகாசம்' என்று சொலலப்படும் ஹ்ருதயாகாசத்தில் தேவியை மானஸிகமாக த்யானம் செய்யும் முறையைத்தான் பகவத்பாதாள் உபதேசம் செய்கிறார். (8)

(அ) ஆறு சக்ரங்களையும் தாண்டி அவைகளுக்குமேல் இருக்கும் ஸஹஸ்ராரகமலத்தில் தேவி தன் பதியுடன் விஹாரம் செய்துகொண்டிருப்பதை வர்ணிக்கிறார் :—

**महीं मूलाधारे कमपि मणिपूरे हुतवहं**
**स्थितं स्वाधिष्ठाने हृदि मरुतमाकाशमुपरि ।**
**मनोऽपि भ्रूमध्ये सकलमपि भित्त्वा कुलपथं**
**सहस्रारे पद्मे सह रहसि पत्या विहरसे ॥ ९ ॥**

மஹீம் மூலாதாரே கமபி மணிபூரே ஹுதவஹம்
ஸ்திதம் ஸ்வாதிஷ்டானே ஹ்ருதி மருதமாகாசமுபரி
மனோபி ப்ரூமத்யே ஸகலமபி பித்வா குலபதம்
ஸஹஸ்ராரே பத்மே ஸஹ ரஹஸி பத்யா விஹரஸே ।

**हे भगवति**-ஹே தாயே! **मूलाधारे**-மூலாதாரத்தில இருக்கும், **महीं**-ப்ருத்வீ தத்வத்தையும், **मणिपूरे**-மணி பூரகம் என்னும் சக்ரத்தில (இருக்கும்,) **कमपि**-ஜலதத்வத்தையும், **स्वाधिष्ठाने**-ஸ்வாதிஷ்டான சக்ரத்தில், **स्थितं**-இருக்கும், **हुतवहं**-அக்னி தத்வத்தையும், **हृदि**-ஹ்ருதயத்தில் (அனுஹத சக்ரத்தில்) இருக்கிற-**मरुतं**-வாயுதத்வத்தையும் **उपरि**-எல்லாவற்றிற்கும் மேலுள்ள விசுத்தி சக்ரத்தில் இருக்கிற **आकाशं**-ஆகாய தத்வத்தையும், **भ्रूमध्ये**-புருவங்களுக்கு நடுவிலுள்ள (ஆக்ஞா சக்ரத்திலுள்ள), **मनोऽपि** – மனஸ்தத்வத்தையும், **सकलमपि कुलपथं भित्त्वा**-ஸு ஷு ம் ன மார்ககத்திலிருக்கும் இவையனைத்தையும் பிளந்துகொண்டு, **सहस्रारे पद्मे**-ஆயிரம் தளமுள்ள தாமரையில், **पत्या सह**-பதியோடு கூட, **रहसि**-ஏகாந்தமாய், **विहरसे**-விஹாரம் செய்கிறாய்.

தேவி நம் சரீரத்திற்குள் இருக்குமிடத்தை இந்த சுலோகத்தில் தெரிவிக்கிறார். தந்த்ர சாஸ்திரத்தின்படி நம் சரீரத்திற்குள் மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அனுஹதம், விசுத்தி, ஆக்ஞா என்று ஆறு சக்ரங்கள் இருப்பதாகச் சொலலப்படுகிறது. மூலாதாரம் சரீரத்தின் குதஸ்தானத்தில் நான்கு தளங்கள் உள்ள தாமரை போலும், அதற்குச் சற்று மேல் ஸ்வாதிஷ்டானம் ஆறு தள தாமரை போலும், தொப்புள் பிரதேசத்தில் மணிபூரகம் பத்து தள தாமரை போலும், ஹ்ருதயத்தின் ஸமீபத்தில் அனுஹதம் பன்னிரண்டு தள தாமரை போலும், தொண்டையில் விசுத்தி சக்ரம் பதினாறுதள தாமரைபோலும், இரு புருவங்களுக்கும் மத்தியில் ஆக்ஞா சக்கரம் இரண்டுதள தாமரைபோலும் இருப்பதாகத் தந்திர சாஸ்திரத்தில் கண்டிருக்கிறது. மூலாதாரத்தில் ப்ருதிவீ தன்மாத்திரையும், மணிபூரகத்தில் ஜல தன்மாத்திரையும், ஸ்வாதிஷ்டானத்தில் அக்னி தன்மாத்திரையும், அனுஹதத்தில் வாயு தன்மாத்திரையும், விசுத்தி சக்ரத்தில் சப்த தன்மாத்திரையும், இருப்பதாகச் சொல்லப்படுகிறது. மணிபூரக சக்ரத்தில் ஜல தன்மாத்திரை இருப்பதாக இந்த ச்லோகத்தில் காண்கிறோம்,

ஆனால் 'ஷட் சக்ர நிரூபணம்' என்னும் க்ரந்தத்தில் மணி பூரகத்தில் அக்னி தத்வமும் ஸ்வாதிஷ்டானத்தில் ஜல தத்வமும் இருப்பதாகக் காணப்படுகிறது. ஸுஷும்னு நாடியில குதஸ்தானத்தில் மூலாதாரமும் அதற்குமேல் ஸ்வாதிஷ்டானமும் இருக்கிறது. இந்த ச்லோகத்தில் மூலாதாரத்திற்குமேல் மணி பூரகம் இருப்பதாகச் சொல்லப் பட்டிருக்கிறது. இந்த சக்ரங்கள் ப்ருத்வீ முதலான தத்வங் களின் தன்மாத்திரைகள் இருக்குமிடம் என்றும் சொல்லப் பட்டிருக்கிறது. ப்ருத்வீ தத்வத்தையடுத்து ஜல தத்வ மாகையால் அதை யனுஸரித்து சக்ரங்களின் க்ரமம் மாற்றிச்சொல்லப்பட்டிருக்கிறது. சக்ரங்களின் க்ரமத் திற்கும் பிருதிவ்யாதி தத்வங்களின் க்ரமத்திற்கும் வித்யாஸம் இருப்பதால் அதை நிவர்த்தி செய்யும் உத்தேசத் துடன் ஸ்வாதிஷ்டானத்தில ஜல தத்வம் இருப்பதாகவும் மணிபூரகத்தில் அக்னி இருப்பதாகவும ஷட்சக்ர நிரூபணத்தில் சொல்லப்படுகிறது. "**यद्यपि आधारचक्रस्योपरि स्वाधिष्ठानं वर्णनीयं, तथाऽपि आकाशादितत्त्वोत्पत्तिक्रममवलम्ब्य व्युत्क्रमेण मणिपूरचक्रवर्णनं कृतमित्यनुसन्धेयम्**" என்று லக்ஷ்மீதர வ்யாக்யானத்தில் காணப்படுகிறது.

மூலாதாரத்திற்கும் ஸ்வாதிஷ்டானத்திற்கும் மேல் ருத்ரக்ரந்தி இருப்பதாகவும், மணிபூரகத்திற்கும் அனு ஹதத்திற்கும்மேல் விஷ்ணுக்ரந்தி இருப்பதாகவும், விசுத்தி சக்ரத்திற்கும் ஆக்ஞா சக்ரத்திற்கும்மேல் ப்ரம்மக்ரந்தி இருப்பதாகவும் சொல்லப்படுகிறது. முதல் இரண்டு சக்ரங் களுக்கு அக்னி கண்டம் என்றும், மூன்றாவது நான்காவது சக்ரங்களுக்கு ஸூரிய கண்டம் என்றும், ஐந்தாவது ஆறாவது சக்ரங்களுக்கு சந்த்ர கண்டம் என்றும் பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளெல்லாம் தாண்டி ப்ரம்மரந்த்ரமென்னும் ஸஹஸ்ராரகமலம் இருக்கிறது. அதில் தேவி தன் பர்த்தாவாகிய ஸதாசிவனுடன் ஏகாந்தமாக விஹாரம் செய்துகொண்டு இருப்பதாக த்யானம் செய்ய வேண்டும். அப்படி த்யானம் செய்தால் நமக்குள் இருக்கும் சித்சக்தியானது படிப்படியாக மேல்ஏறி பரப்ரம்ம

ஸ்வரூபிணியாகிய தேவியுடன் இரண்டறக்கலந்து விடுகிறது. சித்சக்தியை குண்டலினி என்று தந்த்ர சாஸ்திரத்தில் சொல்லுகிறார்கள். பாம்பு சுருட்டிக்கொண்டு ஒரு சிறு பெட்டியில் அடங்கியிருப்பதுபோல் நம்முடைய சித்சக்தி மூலாதாரத்தில் உறங்கிக்கொண்டிருக்கிறது. "ஒட்யாண ஜாலந்தர மூலபந்தை: உன்னித்ரிதாயாம் உரகாங்கனாயாம்" (ओड्याणजालन्धरमूलबन्धैरुन्निद्रितायामुरगाङ्गनायम्) என்று 'யோகதாராவளியில் (சு. 6) காண்கிறோம்.

தகுந்த ஸாதனங்களால் அதைத் தட்டி எழுப்பி படிப் படியாக உயர்ந்த நிலைகளுக்குக் கொண்டுபோய் இறுதியில் உபாதிகளிலிருந்து அதை விடுவித்து அது தன் நிஜ ஸ்வரூபத்தை அடையும்படி செய்யவேண்டும். உபாதிகளிலிருந்து விடுபட்ட சைதன்யம் அகண்ட சைதன்யமாக விளங்குகிறது எனற வேதாந்த தத்வமானது தந்த்ர சாஸ்திரத்தில் குண்டலினீயோகம் என்று சொல்லப்படுகிறது. ஆறு சக்ரங்களும் சித் சக்தியின் ஊர்த்வ கதியில் ஆறு ஸோபானங்கள் என்று எண்ணவேண்டும். ருத்ர க்ரந்தி, விஷ்ணு க்ரந்தி, ப்ரம்ம க்ரந்தி என்னும் க்ரந்திகள் அக் ஞானத்தின் விகாரங்கள் "பித்யதே ஹ்ருதய க்ரந்தி:" (भिद्यते हृदयग्रन्थिः) என்று உபநிஷத்தில் பொதுவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதையே இங்கு மூன்றாகப் பிரித்து மூன்று க்ரந்திகளையும் ஸாதகன் தாண்டவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. (9)

(அ) ஸஹஸ்ராரகமலத்திலிருந்து மறுபடியும் மூலாதாரத்திற்கு வந்து பாம்புபோல் மண்டலம் போட்டுக் கொண்டு உறங்குகிறாள் என்று சொல்லப்படுகிறது: —

सुधाधारासारैश्चरणयुगलान्तर्विगलितैः
प्रपञ्चं सिञ्चन्ती पुनरपि रसाम्नायमहसः ।
अवाप्य स्वां भूमिं भुजगनिभमध्युष्टवलयं
स्वमात्मानं कृत्वा स्वपिषि कुलकुण्डे कुहरिणि ॥ १० ॥

ஸுதா தாராஸாரை: சரணயுகளாந்தர்விகளிதை:
ப்ரபஞ்சம் ஸிஞ்சந்தீ புநரபி ரஸாம்நாயமஹஸ: ।
அவாப்ய ஸ்வாம் பூமிம் புஜகநிபமத்யுஷ்டவலயம்
ஸ்வம் ஆத்மாநம் க்ருத்வா ஸ்வபிஷி குலகுண்டே
குஹரிணி ॥

**हे भगवति**-ஹே தாயே! **चरणयुगळान्तर्विगलितैः**-(உன்) இருகால்களினின்றும் பிரவஹிக்கிற, **सुधाधारासारैः**-அம்ருத தாரைப் பெருக்கினுல், **प्रपञ्चं**-சரீரத்திலுள்ள 72000 நாடிகள் அனைவற்றையும், **सिञ्चन्ती** – நனைக்கிறவளாய்க்கொண்டு, **रसाम्नायमहसः**–சந்திரமண்டலத்திலிருந்து, **पुनरपि स्वां भूमिं अवाप्य**-மறுபடியும் உன் இருப்பிடத்தையடைந்து, **स्वं आत्मानं**- உன் ஸ்வரூபத்தை, **भुजगनिभं**-பாம்புபோல், **अध्युष्टवलयं कृत्वा**–சுருட்டிக்கொண்டிருப்பதாகச் செய்துகொண்டு, **कुह-रिणि कुलकुण्डे**–சிறிய துவாரத்தையுடைய மூலாதாரத்தில், **स्वपिषि**–உறங்குகிருய்.

குண்டலினீ சக்தி எனப்படும் பரதேவதையை ஏகாக்ர மாக த்யானம் செய்து மேல்நோக்கிச் செல்லும்படியாகச் செய்தால் அம்பாள் ஆறு சக்ரங்களையும், மூன்று க்ரந்தி களையும் அக்னி கண்டத்தையும், ஸூர்ய கண்டத்தையும் தாண்டி மூன்ருவது கண்டமாகிய சந்திரமண்டலத்தில் இருந்துகொண்டு தன் திவ்ய தேஜஸ்ஸை ஸாதகனின் சரீரத்தில் வ்யாபித்திருக்கும் 72000 நாடிகளிலும் ப்ரஸரிக் கும்படியாகச் செய்துவிட்டு பிறகு தன் இருப்பிடமாகிய மூலாதாரத்திற்கு வந்து தன் ஸ்வரூபத்தைப் பாம்புபோல் மண்டலாகாரமாகச் செய்துகொண்டு யோக நித்திரை செய்கிருள் என்பது தாத்பர்யம். “**अतश्च शिरस्स्थितसहस्रदळ-कमलान्तगतश्रीचक्रात्मकशशिबिम्बमध्यस्थिताया भगवत्याश्चरणकमल-निर्णेजनजलैः सुधामयैः साधकस्य सकलशरीरं संप्लाव्य पुनः भुजङ्ग-रूपेण आधारकुण्डं प्रविश्य सुषुम्नामवष्टभ्य सा भगवती स्वपिति**” என்று லக்ஷ்மீதர வ்யாக்யானத்தில் காணப்படுகிறது. “ஸஹஸ்ராராம்புஜாருடா ஸுதாஸாராபிவர்ஷிணீ” என்று

லலிதா ஸஹஸ்ர நாமத்தில் சொல்லியிருப்பது (10)

(அ) பரதேவதையின் ப்ரதீகமாகிய ஸ்ரீசக்ரம் எப்படி உருவாகிறதென்பதைக் கூறுகிறார் :—

चतुर्भिः श्रीकण्ठैः शिवयुवतिभिः पञ्चभिरपि
प्रभिन्नाभिः शम्भोर्नवभिरपि मूलप्रकृतिभिः ।
चतुश्चत्वारिंशद्वसुदलकलाश्रत्रिवलय-
त्रिरेखाभिः सार्धं तव शरणकोणाः परिणताः ॥ ११ ॥

*சதுர்பி: ஸ்ரீகண்டை: ஶிவயுவதிபி: பஞ்சபிரபி*
*ப்ரபின்னாபி: ஶம்போ: நவபிரபி மூலப்ரக்ருதிபி: ।*
*சதுச்சத்வாரிம்ஶத்வஸுதளகலாச்ரத்ரிவலய-*
*த்ரிரேகாபி: ஸார்த்தம் தவ ஶரணகோணா: பரிணதா: ॥*

**हे भगवति** - ஹே பரதேவதையே! **चतुर्भिः श्रीकण्ठैः** ஸ்ரீகண்டம் எனப்படும் நான்கு த்ரிகோணங்களாலும், **शंभोः प्रभिन्नाभिः** - அவைகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டதான, **पञ्चभिः शिवयुवतिभिरपि** - சிவயுவதி எனப்படும் ஐந்து த்ரிகோணங்களாலும், **नवभिः मूलप्रकृतिभिः**- இந்த ஒன்பது மூலப்ரக்ருதிகளாலும், **तव शरणकोणाः** - உன்னுடைய பிந்து ஸ்தான மந்திரகோணங்கள், **वसुदल** எட்டு தளங்கள், **कलाश्र**- பதினாறுதளங்கள், **त्रिवलय** - மூன்று மேகலைகள், **त्रिरेखाभिः सार्धं**-பூபுரத்ரயம் எனப்படும் மூன்று ரேகைகளுடன் கூடி **परिणताः सन्तः**- உருவங்களோடுகூடினவைகளாய்க் கொண்டு, **चतुश्चत्वारिंशत् ( भवन्ति )** - நாற்பத்தி நான்கு தத்வங்களாக ஆகின்றன.

ப்ரஹ்மத்தை உபாஸனைசெய்வதற்கு எப்படி 'ஓம்' என்னும் பிரணவம் மிகவும் நேதிஷ்டமான ப்ரதீகமோ, அம்பாளை த்யானம் செய்வதற்கு ஸ்ரீசக்ரமும் அப்படியே. 'ஓம்' காரமே ப்ரம்மம் என்று சொல்வதுபோல் ஸ்ரீசக்ரமே ஸாக்ஷாத்பரதேவதை என்றும் சொல்வது உண்டு. ஸ்ரீசக்ர

உபாஸனை ஸாதகர்களுக்கு மிகவும் பயனளிக்கக்கூடியது தான். ஆனாலும் அது ஒரு ப்ரதீகம்தான்.

ஸ்ரீசக்ரம் என்பது வெறும் கற்பனையல்ல. தந்த்ர சாஸ்திரத்தில் மனித சரீரத்திற்கு ஆதாரமாகச்சொல்லி யுள்ள நாற்பத்திநான்கு தத்வங்களையனுசரித்து ஏற்பட்ட உருவம் அது. த்வக், அஸ்ருக், மாம்ஸம், மேதஸ், அஸ்தி, என்ற ஐந்து சக்தி ஸ்வரூபமான தத்வங்களை சிவயுவதி களென்றும், மஜ்ஜா, சுக்லம், ப்ராணன், ஜீவன என்ற நான்கு சிவஸ்வரூபமான தத்வங்களை ஸ்ரீகண்டம் என்றும் சொல்வார்கள். சிவயுவதிகள் என்று சொல்லப்படும் தத்வங்களை ஊர்த்வமுகமாக உள்ள ஐந்து த்ரிகோணங் களாகவும், ஸ்ரீகண்டம் என்று சொல்லப்படும் தத்வங்களை அதோமுகமாக உள்ள நான்கு த்ரிகோணங்களாகவும் அமைக்கவேண்டும். இவைகளைச் சுற்றி ஒரு அஷ்டதள பத்மமும், அதைச்சுற்றி ஒரு பதினாறு தளபத்மமும், அதைச் சுற்றி மேகலையென்று சொல்லப்படும் மூன்று ரேகைகளும், இவை எல்லாவற்றையும் உள்ளடக்கி சதுரச்ரமாக மூன்று ரேகைகளையும் வரையவேண்டும். இந்த சதுரச்ரத்திற்கு நான்கு திக்குகளிலும் த்வாரங்கள் இருக்கவேண்டும். எல்லா வற்றிற்கும் வெளியிலிருக்கும் சதுரச்ரத்தை ப்ராகாரவலயம், பூபுரத்ரயம், அல்லது பூக்ருஹம் என்று சொல்வார்கள். ஊர்த்வமுகமாகவும் அதோமுகமாகவும் உள்ள த்ரிகோணங் களுக்கு மத்தியிலுள்ள பிந்துஸ்தானத்தில் தேவி ப்ரஸன்ன மாக இருப்பதாக த்யானம் செய்யவேண்டும். மனித சரீரத் தில் ஹ்ருதயம் என்பது தேவியின் இருப்பிடமாகிய பிந்து ஸ்தானம். இது வ்யஷ்டிரூபமான ஸ்ரீ சக்ரம். உலகத்தையே ஸ்ரீ சக்ரமாக பாவித்து ஸமஷ்டிரூபமான உபாஸனையும் செய்யலாம் ப்ருதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் என்னும் ஐந்து மஹா பூதங்களை ஊர்த்வமுகமான ஐந்து த்ரிகோணங்களாகவும், மாயை, சுத்த வித்யை, மஹேச் வரன், ஸதாசிவன் என்ற நான்கு தத்வங்களை அதோமுக மான நான்கு த்ரிகோணங்களாகவும் எண்ணவேண்டும். ஜகத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம் இவைகளுக்குக் காரண மான பரதேவதை மத்தியில் பிந்துஸ்தானத்தில் இருப்பதாக

பாவனை செய்யவேண்டும். "ஸ்ரீசக்ராங்கித பிந்து மத்ய வஸதிம்" (श्रीचक्राङ्कितबिन्दुमध्यवसतिं) என்று மீனாக்ஷீ பஞ்சரத்னத்தில் சொல்லப்படுகிறது.

வஸுதளம்-வஸுக்கள் எட்டு. ஆதலால் வஸுதளம் என்ற பதம் எட்டு தளங்கள் உள்ள தாமரையைக் குறிக்கிறது. கலாசரம்-கலைகள் 16. அச்ரம் என்றால் தளம். ஆகவே பதினாறு தளதாமரை என்று கிடைக்கிறது. சரணம் என்றால கிருஹம். இங்கு அம்பாள் வாஸம் செய்யும் பைந்தவஸ்தானத்தைக் குறிக்கிறது. (11)

(அ) தேவியின் ரூபலாவண்யம் வர்ணிக்கப்படுகிறது:-

त्वदीयं सौन्दर्यं तुहिनगिरिकन्ये तुलयितुं
कवीन्द्राः कल्पन्ते कथमपि विरिञ्चिप्रभृतयः ।
यदालोकौत्सुक्यादमरललना यान्ति मनसा
तपोभिर्दुष्प्रापामपि गिरिशसायुज्यपदवीम् ॥ १२ ॥

த்வதீயம் ஸௌந்தர்யம் துஹிநகிரிகன்யே துலயிதும்
கவீந்த்ரா: கல்பந்தே கதமபி விரிஞ்சி ப்ரப்ருதய: ।
யதாலோகௌத்ஸுக்யாத் அமரலலநா யாந்தி மனஸா
தபோபி: துஷ்ப்ராபாமபி கிரிஶ ஸாயுஜ்ய பதவீம் ॥

**हे तुहिनगिरिकन्ये** -ஹே இமயமலையின் புத்ரியே! **त्वदीयं सौन्दर्यं** - உன்னுடைய அழகை, **तुलयितुं** - உபமானத்தைக் கொண்டு வர்ணிப்பதற்கு, **विरिञ्चिप्रभृतयः कवीन्द्राः**- நான்முகன் முதலான மஹாகவிகள், **कथमपि कल्पन्ते**- அதிக ப்ரயாஸையுடனாவது ஸமர்த்தர்களாக ஆகிறார்களா?(இல்லை) **यदालोकौत्सुक्यात्**-எந்த அழகைப்பார்க்கவேணுமென்ற ஆசையுடன், **अमरललनाः** தேவஸ்த்ரீகள், **तपोभिः** தவங்களினால், **दुष्प्रापामपि**- அடைய முடியாததாயிருந்தபோதிலும், **गिरिशसायुज्यपदवीं** - சிவஸாயுஜ்யபதவியை, **मनसा** - மனதினால், **यान्ति** - அடைகிறார்கள்.

தேவியின் அழகுக்கு உபமானமாகச் சொல்லக்கூடிய பொருள் வேறு எதுவும் கிடையாது. "ராம ராவணயோர் யுத்தம் ராமராவணயோரிவ" (रामरावणयोर्युद्धं रामरावणयोरिव) என்றபடி தேவிக்கு தேவியேதான் ஈடு. தேவகன்யகைகள் மிகவும் ஸௌந்தர்யம் வாய்ந்தவர்கள் என்று சொல்லப் படுகிறது. ஆனால் அவர்களை ப்ரம்மதேவன் தேவியின் ஸ்நான ஜலத்தையும் பாததூளியையும் வாரி எடுத்து ஸ்ருஷ்டி செய்கிறான் என்று '[1]ஆனந்த லஹரி'யில் சொல்லுகிறார். ஆகவே தேவ ஸ்த்ரீகள் தங்களுடைய அழகைவிட தேவியின் அழகு மிகவும் சிறந்தது என்று தெரிந்துகொண்டு தேவியைப் பார்க்கவேணுமென்று ஆசைப்படுகிறார்கள். தேவியின் ஸமீபத்திற்கு வேறு யாரும் போகமுடியாது. "பரமசிவ த்ருங்மாத்ர விஷய:" (परमशिवदृङ्मात्रविषयः) என்று '[2]ஆனந்தலஹரி'யில் சொல்லியிருக்கிறார். எனவே தேவஸ்த்ரீகள் தவம் புரிந்து பரமசிவனிடம் ஸாயுஜ்ய பதவியை அடைந்து அவருடன் தேவியின் ஸமீபத்திற்குப் போய் தேவியின் ஸௌந்தர்யத்தைப் பார்த்து ஆனந்தம் அடைகிறார்கள். (12)

(அ) தேவியின் கடாக்ஷ மஹிமை வர்ணிக்கப் படுகிறது:—

नरं वर्षीयांसं नयनविरसं नर्मसु जडं
तवापाङ्गालोके पतितमनुधावन्ति शतशः ।
गलद्वेणीबन्धाः कुचकलशविस्रस्तसिचया
हठात्त्रुटयत्काञ्च्यो विगलितदुकूला युवतयः ॥ १३ ॥

நரம் வர்ஷீயாம்ஸம் நயன விரஸம் நர்மஸு ஜடம்
தவாபாங்காலோகே பதிதம் அனுதாவந்தி ஶதஶ: ।
களத்வேணீபந்தா: குசகலஶ விஸ்ரஸ்தஸிசயா:
ஹடாத் த்ருட்யத்காஞ்ச்யோ விகளித துகூலா யுவதய: ॥

1. சுலோகம் 19 2. சுலோகம் 2

**हे भगवति**- ஹே தாயே! **वर्षीयांसं** - வயது முதிர்ந்தவனு யும், **नयनविरसं** - கண்களில் ரோகம் உள்ளவனுயும், **नर्मसु जडम्** ஸ்த்ரீஸங்கத்தில் ஜடனுயும், **तवापाङ्गालोके पतितं** (ஆனுல்) உன் கடாக்ஷவீக்ஷணத்திற்குப் பாத்திரமானவனு யும் உள்ள, **नरं**- மனிதனை, **गलद्वेणीबन्धाः**- தலைப்பின்னலகள் அவிழ்ந்து போனவர்களாயும், **कुचकलशविस्रस्तसिचयाः**- கலசம் போன்ற ஸ்தனங்களிலிருந்து நழுவிப்போன ரவிக்கை முடிச்சுகளுடனும், **हठात्** - வேகத்தினுல், **त्रुट्यत्काञ्च्यः** - பூட்டு ஒடிந்து போன ஒட்யாணங்களுடனும், **विगलितदुकूलाः** - உடுத்திக் கொண்டிருக்கும் வெண்பட்டு சேலைகள் இடுப்பிலிருந்து நழுவினவர்களாயும், **युवतयः शतशः** - நூற்றுக் கணக்கில யுவதிகள், **अनुधावन्ति** - விரைவாகப்பின் பற்றி ஓடிவருகிருர்கள்.

தேவியின் கடாக்ஷம் ஏற்பட்டால் ஸர்வ விகாரமான மனிதனும் கூட மன்மதனுக மாறி விடுகிருன். இதே விஷ யத்தை 'கல்யாண வ்ருஷ்டிஸ்தவம்' என்னும் ஸ்தோத்திரத் தில் (சு. 4) சொல்லுகிருர்:—

**लब्ध्वा सकृत्त्रिपुरसुन्दरि तावकीनं**
**कारुण्यकन्दलितकान्तिभरं कटाक्षम् ।**
**कंदर्पकोटिसुभगास्त्वयि भक्तिभाजः**
**संमोहयन्ति तरुणीर्भुवनत्रयेऽपि ॥** (13)

(அ) ஷட்சக்ரங்களுக்குமேல் தேவியின் இருப்பிடம் சொல்லப்படுகிறது:—

**क्षितौ षट्पञ्चाशद्द्विसमधिकपञ्चाशदुदके**
**हुताशे द्वाषष्टिश्चतुरधिकपञ्चाशदनिले ।**
**दिवि द्विःषट्त्रिंशन्मनसि च चतुःषष्टिरिति ये**
**मयूखास्तेषामप्युपरि तव पादाम्बुजयुगम् ॥ १४ ॥**

க்ஷிதௌ ஷட்பஞ்சாஶத் த்விஸமதிகபஞ்சாஶத் உதகே
ஹுதாஶே த்வாஷஷ்டி: சதுரதிகபஞ்சாஶத் அநிலே ।

திவி த்வி.ஷட்த்ரிம்ஶத் மனஸி ச சது:ஷஷ்டிரிதி யே
மயூகா: தேஷாமப்யுபரி தவ பாதாம்புஜயுகம் ||

**हे भगवति**-ஹே தாயே! **क्षितौ षट्पञ्चाशत्** - மூலாதாரத்தில ஐம்பத்தாறு, **उदके द्विसमधिकपञ्चाशत्** - மணிபூரகத்தில் ஐம்பத்திரண்டு, **हुताशे द्वाषष्टिः**-ஸ்வாதிஷ்டானத்தில் அறுபத்திரண்டு, **अनिले चतुरधिकपञ्चाशत्** - அனாஹதத்தில் ஐம்பத்திநான்கு, **दिवि द्विःषट्त्रिंशत्** - விசுத்தி சக்ரத்தில் எழுபத்திரண்டு, **मनसि च चतुःषष्टिः**-ஆக்ஞா சக்ரத்தில் அறுபத்திநான்கு, **इति ये मयूखाः**-இப்படி எந்த கிரணங்கள் உண்டோ, **तेषामप्युपरि**-அவைகளுக்கும் மேல், **तव पादाम्बुजयुगं**-உன்னுடைய இரு பாதகமலங்கள் (இருககின்றன).

மூலாதாரத்தில் ப்ருத்வீ தத்வமும், மணிபூரகத்தில் ஜல தத்வமும், ஸ்வாதிஷ்டானத்தில் அக்னிதத்வமும், அனாஹதத்தில் வாயுதத்வமும், விசுத்திசக்ரத்தில் ஆகாசதத்வமும், ஆக்ஞாசக்ரத்தில் மனஸ்தத்வமும் இருப்பதாக ஏற்கனவே (சு. 9) சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு சக்ரங்களின் பெயர்களைச் சொல்லாமல் அவைகளில் தங்கும் தத்வங்களின் பெயர்களைச் சொல்லியிருக்கிறார். அதிலிருந்து சக்ரங்களை நாம் நிர்த்தாரணம் செய்யவேண்டும்.

குதஸ்தானத்தைக் குறுக்கிக்கொண்டு ஸாதகன் ச்வாச நிரோதம் செய்து மனதை புருவங்களின் மத்தியில் வைத்து தேவியை த்யானம் செய்ய ஆரம்பித்தால் மூலாதாரமும் ஸ்வாதிஷ்டானமும் அக்னி ஜ்வாலைகளாலும், மணிபூரகமும் அனாஹதமும் ஸூர்ய கிரணங்களாலும் விசுத்தியும் ஆக்ஞா சக்ரமும் சந்திர கிரணங்களாலும் பிரகாசமாக விளங்குகின்றன. இவைகள் எல்லாவற்றிற்கும்மேல் ஸஹஸ்ராரத்தில் தேவி ஜகஜ்ஜோதியாக பாஸித்துக்கொண்டு இருக்கிறாள். தேவியின் ப்ரகாசத்தைக்கொண்டுதான் அக்னி, ஸூர்யன், சந்திரன் ப்ரகாசிக்கின்றன என்று வ்யங்க்யமாகச் சொல்லப்படுகிறது. "தமேவ பாந்தம் அனுபாதி ஸர்வம்" (**तमेव भान्तमनुभाति सर्वं**) என்ற ச்ருதி வாக்கியம்

இதற்கு பிரமாணம். "एतदुक्तं भवति-सूर्यचन्द्राग्नयः भगवतीपादारविन्दोद्भूतानन्तकोटिकिरणमध्ये कतिपयान् किरणानाहृत्य भगवतीप्रसादसमासादितजगत्प्रकाशनसामर्थ्यात् जगन्ति प्रकाशयन्ति" என்று லக்ஷ்மீதரவ்யாக்யானத்தில் காணப்படுகிறது. (14)

(அ) தேவியை உபாஸனை செய்தால் வாக்சாதுர்யம் ஏற்படும் என்று மூன்று சலோகங்களில் சொல்லப்படுகிறது :-

शरज्ज्योत्स्नाशुद्धां शशियुतजटाजूटमकुटां
वरत्रासत्राणस्फटिकघटिकापुस्तककराम् ।
सकृन्न त्वा नत्वा कथमिव सतां संनिदधते
मधुक्षीरद्राक्षामधुरिमधुरीणाः फणितयः ॥ १५ ॥

ஶரத்ஜ்யோத்ஸ்னா ஶுத்தாம் ஶஶியுத ஜடாஜூட மகுடாம்
வர த்ராஸத்ராண ஸ்படிக கடிகா புஸ்தக கராம் ।
ஸக்ருந்ந த்வா நத்வா கதமிவ ஸதாம் ஸந்நிதததே
மது க்ஷீர த்ராக்ஷா மதுரிம துரீணா: பணிதய: ॥

**हे भगवति**-ஹே தாயே! **शरज्ज्योत्स्नाशुद्धां**-சரத்கால சந்த்ரனைப்போல் வெளுப்பானவளாயும் **शशियुतजटाजूटमकुटां**-தலையில் கிரீடமும் சந்த்ரகலையும் உள்ளவளாயும் **वरत्रासत्राणस्फटिकघटिकापुस्तककरां**-ஒரு கையில் வரமுத்ரை, இன்னொரு கையில் அபயமுத்ரை, மற்றொரு கையில் ஸ்படிக மாலை, நான்காவது கையில் புஸ்தகம் தரித்தவளாயும் உள்ள **त्वा**-உன்னை, **सकृत् नत्वा**-ஒரு தடவை நமஸ்கரித்ததினால், **सतां**-ஸாதுக்களுக்கு, **मधुक्षीरद्राक्षामधुरिमधुरीणाः**-தேன், பால், த்ராக்ஷை, இவைகளைவிட அதிக மதுரமான, **फणितयः**-வாக்குகள், **कथमिव न संनिदधते**-ஏன் ஸாந்நித்யம் அடையாது?

இந்த சுலோகத்தில் சொல்லியிருக்கிறபடி தேவியை இடைவிடாது உபாஸனை செய்தால் உத்தமமான வாக் விலாஸம் ஏற்படுகிறது. இதே விஷயத்தை '**शरच्चन्द्रकोटिप्रभाभासुरां त्वां सकृद्भावयन् भारतीवल्लभः स्यात्**' (சரத்சந்த்ரகோடி

ப்ரபாபாஸுராம் த்வாம் ஸக்ருத் பாவயன் பாரதீவல்லப: ஸ்யாத்) என்று 'தேவீபுஜங்க' ஸ்தோத்திரத்திலும் (13), **'सर्वज्ञतां सदसि वाक्पटुतां प्रसूते देवि त्वदङ्घ्रिसरसीरुहयोः प्रणामः'** (ஸர்வக்ஞதாம் ஸதஸி வாக்படுதாம் ப்ரஸூதே தேவி த்வதங்க்ரிஸரஸீருஹயோ: ப்ரணாம:) என்று 'கல்யாண வ்ருஷ்டிஸ்தவ'த்திலும் (7) எழுதியிருக்கிறார். "**तस्य गीर्देवता किंकरी**" (தஸ்ய கீர்தேவதா கிங்கரீ) என்று காளிதாஸன் 'ச்யாமலாதண்டக'த்தில் எழுதியிருப்பதும் இதற்கு போஷகமாக இருக்கிறது. (15)

**कवीन्द्राणां चेतःकमलवनबालातपरुचिं**
**भजन्ते ये सन्तः कतिचिदरुणामेव भवतीम् ।**
**विरिञ्चिप्रेयस्याः तरुणतरशृङ्गारलहरी-**
**गभीराभिर्वाग्भिर्विदधति सतां रञ्जनममी ॥ १६ ॥**

கவீந்த்ராணாம் சேத: கமலவந பாலாதபருசிம்
பஜந்தே யே ஸந்த: கதிசித் அருணாமேவ பவதீம் ।
விரிஞ்சி ப்ரேயஸ்யா: தருணதர ச்ருங்கார லஹரீ-
கபீராபி: வாக்பி: விதததி ஸதாம் ரஞ்ஜனமமீ ॥

**हे भगवति**-ஹே பராசக்தியே! **कवीन्द्राणां**-உயர்ந்த கவிகளுடைய, **चेतःकमलवनबालातपरुचिं**-மனஸ் என்ற தாமரைக் கூட்டத்தில் உதித்த இளம் வெய்யில்போல் காந்தி உள்ள, **अरुणां भवतीं एव**-'அருணா' என்கிற உன்னையே, **कतिचित् ये सन्तः**-எந்த சில புண்யவான்கள், **भजन्ते**-உபாஸனை செய்கிறார்களோ, **अमी**-இவர்கள் (அவர்கள்) **विरिञ्चिप्रेयस्याः**-ஸரஸ்வதியினுடைய, **तरुणतरशृङ्गारलहरी**-உத்க்ருஷ்டமான ச்ருங்கார ரஸத்தின் பெருக்கையும், **गभीराभिः**-காம்பீர்யத்தையும் உடைய, **वाग्भिः**-சொற்களால் **सतां रञ्जनं**-வித்வான்களுக்கு ப்ரீதியை, **विदधति**-செய்கிறார்கள்.

தாமரைப்பூத் தோட்டத்தில் காலை ஸூர்ய கிரணங்கள் விழுந்தால், ஏற்கனவே சிவப்பாயிருக்கும் புஷ்பங்கள்

மேலும் அதிக சிவப்பாக ப்ரகாசிக்கும். இங்கு கவிகளுடைய மனமே தாமரைத் தோட்டம் என்று சொல்லப்படுகிறது. தேவியை 'அருணு' என்று உபாஸித்தால் கவிகளுக்கு உயர்ந்த கல்பனுசக்தி ஏற்படுகிறது. பிறகு சிருங்காரரஸம் ததும்பும் கம்பீரமான கவிதைகளால் ரஸிகர்களுக்கு ஆனந்தத்தை உண்டுபண்ணுகிருர்கள். "கவிகமலபாலார்கஸுஷமா" (कविकमलबालार्कसुषमा) கவிகளாகிய செந்தாமரைகளை மலரச்செய்யும் உதய ஸூர்யனின் காந்தியை உடையவை என்று மூகபஞ்சசதியில் (பாதாரவிந்த சதகம் சு. 4) தேவியின் பாதங்கள் வர்ணிக்கப்படுகின்றன. (16)

सवित्रीभिर्वाचां शशिमणिशिलाभङ्गरुचिभिः
वशिन्याद्याभिस्त्वां सह जननि संचिन्तयति यः ।
स कर्ता काव्यानां भवति महतां भङ्गिरुचिभिः
वचोभिर्वाग्देवीवदनकमलामोदमधुरैः ॥ १७ ॥

*ஸவித்ரீபி: வாசாம் ஶஶிமணிஶிலாபங்கருசிபி:*
*வஶின்யாத்யாபி: த்வாம் ஸஹ ஜனனி ஸஞ்சிந்தயதி ய: ।*
*ஸ கர்த்தா காவ்யானும் பவதி மஹதாம் பங்கிருசிபி:*
*வசோபி: வாக்தேவீவதநகமலாமோதமதுரை: ॥*

**हे जननि**-ஹே தாயே! **वाचां**-நல்ல சொற்களை **सवित्रीभिः**-உண்டுபண்ணுகிறவர்களாயும், **शशिमणिशिला-भङ्गरुचिभिः**-சந்த்ரகாந்தக் கல்லைப் பிளந்தால் அதற்குள் இருக்கும் வெண்மை நிறம்போல் நிறமுள்ளவர்களாயுமிருக்கிற, **वशिन्याद्याभिः सह**-வசினீ முதலான தேவதைகளோடு கூட, **त्वां यः संचिन्तयति**-உன்னை எந்த மனிதன் தியானம்செய்கிருனே, **सः**-அவன், **महतां भङ्गिरुचिभिः**-உயர்ந்த கவிகளின் சைலிகளுள்ளதாயும், **वाग्देवीवदनकमलामोदमधुरैः**-ஸரஸ்வதீ தேவியின் முகமென்ற தாமரையின் ஸுவாஸனையையுடையதாயுமுள்ள, **वचोभिः**-வாக்குகளால், **काव्यानां कर्ता भवति**-காவ்யங்களின் கர்த்தாவாக ஆகிருன்.

ஸ்படிகம்போல் சுத்தமான வசினீ முதலான பரிவார தேவதைகளுடன் கூடினவளாக தேவியை உபாஸனை செய்கிறவர்கள் உத்தமமான காவ்யங்களை ரசனை செய்யும் கல்பனு சக்தியையும் வாக்வன்மையையும் அடைகிறார்கள். தேவீ பக்தியினால் காளிதாஸன் உயர்ந்த கவிதா சக்தியை அடைந்தான் என்பது கர்ண பரம்பரையாகத் தெரிந்த விஷயம். "வசின்யாத்யாபி:" என்று சொல்லியிருப்பதால் எட்டு வசினீ தேவதைகள், பன்னிரண்டு யோகினீ தேவதைகள், கந்தாகர்ஷிணி, ரஸாகர்ஷிணி, ரூபாகர்ஷிணி ஸ்பர்சாகர்ஷிணி என்ற நான்கு த்வார தேவதைகள் குறிக்கப்படுகிறார்கள். "एवं भगवती त्रिपुरसुन्दरी वशिन्यादि-शक्तिभिर्योजिता ध्याता सती काव्यकर्तृत्वसंपादिका" என்று லக்ஷ்மீ தரவ்யாக்யானத்தில் காணப்படுகிறது. "कवयतां जिह्वाकुटी जग्मुषे" (கவயதாம் ஜிஹ்வாகுடீம் ஜக்முஷே) என்று 'மூக பஞ்சசதி'யில் (ஸ்துதிசதகம் சு. 2) காணப்படுகிறது. (17)

(அ) தேவியை உபாஸனை செய்வதால் கவிகள் உலகத்தைப் புதிய த்ருஷ்டியுடன் பார்க்கிறார்களென்று சொல்லப்படுகிறது:—

तनुच्छायाभिस्ते तरुणतरणिश्रीसरणिभि-
दिवं सर्वामुर्वीमरुणिमनिमग्नां स्मरति यः ।
भवन्त्यस्य त्रस्यद्वनहरिणशालीननयनाः
सहोर्वश्या वश्याः कति कति न गीर्वाणगणिकाः ॥

தனுச்சாயாபிஸ்தே தருண தரணி ஸ்ரீஸரணிபி:
திவம் ஸர்வாம் உர்வீம் அருணிமநிமக்நாம் ஸ்மரதி ய: ।
பவந்த்யஸ்ய த்ரஸ்யத்வன ஹரிண ஶாலீனநயனா:
ஸஹோர்வச்யா வச்யா: கதி கதி ந கீர்வாண கணிகா: ॥

**हे भगवति**-ஹே தாயே! **तरुणतरणिश्रीसरणिभिः**-காலை ஸூர்யனின் சிவப்புநிறமுடைய, **ते तनुच्छायाभिः**-உன்னுடைய சரீரகாந்திகளால் **सर्वां दिवं उर्वीं**-ஆகாசம், பூமி

முழுவதையும், अरुणिमनिमग्नां-சிவப்பு நிறத்தில் மூழ்கினவை களாக, यः स्मरति-எவன் த்யானம் செய்கிறானோ, अस्य-அவனுக்கு, वनस्यद्रहरिणशालीननयनाः-காட்டில் ஸஞ்சரிக்கும் மான் குட்டிகளின் பயந்த கண்கள்போல் கண்களையுடைய, गीर्वाणगणिकाः-தேவஸ்த்ரீகள், ऊर्वश्या सह-ஊர்வசியுடனகூட கति कति-எவ்வளவு பேர்கள்தான், वश्याः न भवन्ति-வச்யர் களாக ஆகமாட்டார்கள்?

இந்த ச்லோகத்திற்கு ப்ராக்ருதமாக அர்த்தம் செய்யக் கூடாது. தேவியினுடைய காந்தியில் உலகம் முழுவதும் மூழ்கியிருப்பதாக ஒருவன் த்யானம் செய்கிறான் என்றால், அவனுடைய உத்தமமான கல்பனா சக்தியினால் உலகத்தை புதிய த்ருஷ்டியுடன் பார்க்கிறான் என்பது அர்த்தம். ஸாதாரண மனிதர்களுக்கு ஏற்படாத ஒரு புதிய அழகுடன் உலகம் மஹா கவிகளுக்குத் தோற்றமளிக்கும். இது பிரஸித்தமான விஷயம். நாம் ஸர்வஸாதாரணமென்று அலக்ஷ்யம் செய்யும் ஒரு வஸ்துவைக்கண்டு கவிகள் களித்து ஆனந்தபரவசத்தினால் அதைப்பற்றிக் கவனம் செய்வார்கள். ஊர்வசி முதலான தேவஸ்த்ரீகள் அந்த பக்தனுக்கு வச்யமாகிறார்கள் என்றால் உலகத்திலுள்ள எல்லா விஷயங்களும் அவர்களுடைய கல்பனா சக்தியினால் கவிதைக்கு உகந்த விஷயமாக மாறிவிடுகின்றன என்பது தாத்பர்யம். (18)

(அ) தேவியின் காமகலா த்யானம் கூறப்படுகிறது:-

मुखं बिन्दुं कृत्वा कुचयुगमधस्तस्य तदधो
हरार्धं ध्यायेद्यो हरमहिषि ते मन्मथकलाम् ।
स सद्यः संक्षोभं नयति वनिता इत्यतिलघु
त्रिलोकीमप्याशु भ्रमयति रवीन्दुस्तनयुगाम् ॥ १९ ॥

முகம் பிந்தும் க்ருத்வா குசயுக மதஸ்தஸ்ய தததோ
ஹரார்த்தம் த்யாயேத் யோ ஹரமஹிஷி தே மன்மத
கலாம் ।

ஸ ஸத்ய: ஸம்க்ஷோபம் நயதி வனிதா இத்யதிலகு
த்ரிலோகீமப்யாசு ப்ரமயதி ரவீந்துஸ்தநயுகாம் ॥

**हे हरमहिषि**-ஹே சிவபத்னியே! (**तव**) **मुखं बिन्दुं**-உன் முகத்தை பிந்துஸ்தானத்திலும், **तस्य अधः**-அதற்குக் கீழ் பாகத்தில், **कुचयुगं**-இரு ஸ்தனங்களையும், **तदधः**-அதற்கும் கீழ்பாகத்தில், **हरार्धं कृत्वा**-பரமேச்வரனுடைய சக்தியான யோனியை த்யானம் செய்துகொண்டு, (**तत्र**) **ते मन्मथकलां**-அந்த சிவசக்தியில் உன்னுடைய மன்மத கலையை (காம ராஜ பீஜததை), **यः ध्यायेत्**-எவன் த்யானம் செய்கிறனே, **सः** அவன், **वनिताः**-ஸ்திரீகளை, **सद्यः संक्षोभं** உடனே மனோ விகாரத்தை, **नयति इति यत्**-அடைவிக்கிறன் என்பது, **अतिलघु**-வெகு சுலபமான கார்யம். **रवीन्दुस्तनयुगां**-ஸூரியனையும் சந்த்ரனையும் இருஸ்தனங்களாகக்கொண்ட **त्रिलोकीमपि**-மூன்று உலகங்களையும்கூட, **आशु भ्रमयति**-சீக்கிரம் மோஹம் அடையும்படிச் செய்கிறன்.

இந்த சுலோகத்திற்கும் ப்ராக்ருதமாக அர்த்தம் செய்யக்கூடாது. இங்கு சொல்லியிருக்கும் கிரமப்படி ஸ்ரீசக்ரத்தில் தேவியின் ரூபத்தை த்யானம் செய்கிற வனுக்கு மூன்று லோகங்களையும் வச்யம் செய்துகொள்ளும் சக்தி ஏற்படுகிறது. இதற்கு மாதனப்ரயோகம் என்று பெயர். (19)

(அ) தேவியை உபாஸனை செய்வதால் விஷக் கடியையும், தாபஜ்வரத்தையும் சமனம் செய்யும் சக்தி ஏற்படுகிறது என்று கூறுகிறர் :—

किरन्तीमङ्गेभ्यः किरणनिकुरुम्बामृतरसं
हृदि त्वामाधत्ते हिमकरशिलामूर्तिमिव यः ।
स सर्पाणां दर्पं शमयति शकुन्ताधिप इव
ज्वरप्लुष्टान्दृष्ट्या सुखयति सुधाधारसिरया ॥ २० ॥

கிரந்தீம் அங்கேப்ய: கிரண நிகுரும்பாம்ருத ரஸம்
ஹ்ருதி த்வாம் ஆதத்தே ஹிமகரஶிலா மூர்த்திமிவ ய: ।
ஸ ஸர்ப்பாணாம் தர்பம் ஶமயதி ஶகுந்தாதிப இவ
ஜ்வர ப்லுஷ்டான் த்ருஷ்ட்யா ஸுகயதி ஸுதாதார ஸிரயா ॥

**हे देवि**–ஹே தேவியே! **यः**–எந்த (ஸாதகன்) ஒருவன், **किरणनिकुरम्बामृतरसं**–கிரணங்களின் கூட்டத்திலிருந்து உண்டாகும் அமிருதரஸத்தை, **अङ्गेभ्यः**–சரீராவயவங்களிலிருந்து, **किरन्तीं**–வாரி இரைக்கின்ற, **हिमकरशिलामूर्तिमिव**–சந்த்ரகாந்தக் கல்லினால் செய்யப்பட்ட பிம்பம்போல் இருக்கிற, **त्वां**–உன்னை, **हृदि आधत्ते**–ஹ்ருதயத்தில் த்யானம் செய்கிறானோ, **सः**–அவன், **शकुन्ताधिप इव**–கருடன்போல், **सर्पाणां दर्पं**-ஸர்ப்பங்களின் வேகத்தை, **शमयति**–சமனம் செய்கிறான். **सुधाधारसिरया दृष्ट्या**–அம்ருதரஸத்தை ப்ரவாஹமாகக் கொட்டும் கண்களால், **ज्वरप्लुष्टान्**–ஜ்வரத்தால் தபிக்கிறவர்களையும், **सुखयति**-ஸௌக்கியமாக இருக்கும்படி செய்கிறான்.

சந்த்ரகாந்தக் கற்களால் செய்யப்பட்ட பிம்பம்போன்றவளாயும், தன் தேஜோமயமான சரீரத்திலிருந்து வெளியே வரும் கிரணங்கள்மூலம் அமிருத ரஸத்தை வாரி இரைப்பவளாகவும் தேவியை த்யானம் செய்கிறவன் கொடிய விஷத்தின் வேகத்தையும், தாப ஜ்வரத்தையும் தன் கருணை நிறைந்த த்ருஷ்டி பாதத்தினாலேயே சமனம் செய்யும் சக்தியை அடைகிறான். (20)

(அ) ஞானிகள் தேவியை ஆராதித்து ஆனந்தத்தை அனுபவிக்கிறார்கள் :—

**तटिल्लेखातन्वीं तपनशशिवैश्वानरमयीं**
**निषण्णां षण्णामप्युपरि कमलानां तव कलाम् ।**
**महापद्माटव्यां मृदितमलमायेन मनसा**
**महान्तः पश्यन्तो दधति परमाह्लादलहरीम् ॥ २१ ॥**

தடில்லேகா தந்வீம் தபந சசி வைச்வாநர மயீம்
நிஷண்ணாம் ஷண்ணாமப்யுபரி கமலாநாம்
தவ கலாம் |
மஹா பத்மாடவ்யாம் ம்ருதித மல மாயேன மனஸா
மஹாந்த: பச்யந்தோ தததி பரமாஹ்லாதலஹரீம் ||

**हे भगवति**–ஹே தாயே! **तटिल्लेखातन्वीं** – மின்னல் கொடியைப்போன்ற சரீரமுள்ளவளாயும், **तपनशशि-वैश्वानरमयीं**–ஸூர்யன், சந்த்ரன், அக்னி இவர்களுடைய ரூபமாயும், **षण्णां कमलानामपि**–ஆறு சக்ரங்களுக்கும், **उपरि**–மேல் பாகத்தில், **महापद्माटव्यां निषण्णां**–ஸஹஸ்ரார கமலத்தில் வீற்றிருப்பவளாகவும், **तव कलां**–உன்னுடைய கலையை, **मृदितमलमायेन मनसा**–கல்மஷமில்லாத மனத்தினுல், **महान्तः**–பெரியவர்கள், **पश्यन्तः**–ஸாக்ஷாத்காரம் செய்கிறவர்களாய், **परमानन्दलहरीं** – ஆனந்த பிரவாஹத்தை, **दधति**–அனுபவிக்கிருர்கள்.

"தடில்லதா ஸமருசி:" என்று லலிதாஸஹஸ்ரநாமத்திலும், "வித்யுல்லதா விக்ரஹே" என்று மீனுக்ஷீ ஸ்தோத்திரத்திலும் சொல்லியிருப்பதுபோல் தேவியின் மேனி மின்னல் கொடி போன்றது. "நீலதோயதமத்யஸ்த்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா" என்று ச்ருதியில் காணப்படுகிறது. ஸூர்யன், சந்த்ரன், அக்னி இம்மூவர்களுடைய ரூபமாகவும் தேவி இருக்கிருள். இவ்வாறு உபாஸனை செய்தால் மனிதனுக்கு அநாதிகாலமாக உள்ள காமக்ரோதாதிகளும் அவைகளுக்கு ஆதாரமான அக்ஞானமும் விலகிவிடும். பிறகு நிர்மலமான மனத்துடன் ஸஹஸ்ராரகமலத்தில் வீற்றிருக்கும் தேவியை ஸாக்ஷாத்காரம் செய்து ஆனந்தத்தை அடைகிருன். (21)

भवानि त्वं दासे मयि वितर दृष्टिं सकरुणा-
मिति स्तोतुं वाञ्छन् कथयति भवानि त्वमिति यः ।
तदैव त्वं तस्मै दिशसि निजसायुज्यपदवीं
मुकुन्दब्रह्मेन्द्रस्फुटमकुटनीराजितपदाम् ॥ २२ ॥

பவானி த்வம் தாஸே மயி விதர த்ருஷ்டிம் ஸகருணாம்
ஸ்தோதும் வாஞ்சன் கதயதி பவானி த்வம்
இதி ய: ।
ததைவ த்வம் தஸ்மை திசஸி நிஜ ஸாயுஜ்ய பதவீம்
முகுந்த ப்ரம்மேந்த்ர ஸ்புடமகுட நீராஜிதபதாம் ॥

**हे भवानि**–ஹே பவானி! **दासे मयि**–ஸேவகனான என்னிடத்தில், **त्वं**–நீ, **सकरुणां दृष्टिं**–கருணையுடன் கூடின பார்வையை, **वितर**–கொடு, **इति**–என்று, **स्तोतुं वाञ्छन्**–துதிப்பதற்கு எண்ணி, '**भवानि**–பவானி! **त्वं**–நீ,' **इति**–என்று (மட்டில்) **यः कथयति**–எவன் ஒருவன் சொல்லுகிறானோ, **तदैव**–அப்பொழுதே, **तस्मै**–அவனுக்கு, **त्वं**–நீ **मुकुन्दब्रह्मेन्द्रस्फुटमकुटनीराजितपदां**–விஷ்ணு, ப்ரம்மா, இந்த்ரன் இவர்களின் கிரீடங்களின் ஒளியால் ப்ரகாசிக்கின்ற பாதாரவிந்தங்களை உடைய, **निजसायुज्यपदवीं**–தனது ஸாயுஜ்யம் என்ற மோக்ஷ பதவியை, **दिशसि**–அளிக்கிறாய்,

பவானி என்ற பதத்தை இரண்டுவிதமாக அர்த்தம் செய்யலாம். ஸம்போதனமாக அர்த்தம் செய்தால் 'ஹே தேவி' என்று அம்பிகையை அழைத்ததாக ஆகும். க்ரியா பதமாக எடுத்துக்கொண்டால் 'நான் ஆகிறேன்' என்ற அர்த்தத்தைக் கொடுக்கும்- ஒருவன் "ஹே பவானி! ஸேவகனான என்மீது உன்கடாக்ஷவீக்ஷணம் ஏற்படட்டும்" என்று சொல்லவேண்டுமென்ற எண்ணத்துடன், 'பவானி த்வம்' என்று மட்டும் சொன்னான். மேல்கொண்டு பேசுவதற்கு அவனுக்கு வாய் வரவில்லை. அந்த வார்த்தைமூலம் 'நான் உன் பதவியையடையவேணும் என்று இச்சைகொண்டிருக்கிறேன்' என்று அவன் சொன்னதாக தேவி பாவித்துக்கொண்டு அவனுக்கு ஸாயுஜ்யமென்னும் உத்தமமான மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அளிக்கிறாள். "அவ்யாஜ கருணா மூர்த்தி:" என்று லலிதாஸஹஸ்ரநாமத்திலும், "காருண்ய விக்ரஹா", "கருணாம்ருதஸாகரா" என்று 'லலிதா த்ரிசதீ' ஸ்தோத்திரத்திலும் சொல்லியிருப்பதுபோல் தேவியின் கருணை அபாரமானது. அதற்கு எல்லையே இல்லை. ப்ரம்மாதி

தேவர்கள் தலைவணங்கி நமஸ்காரம் செய்வதால் அவர் களின் கிரீடங்களின் ஒளிபட்டு தேவியின் பாதங்கள் ப்ரகாச மாக இருக்கின்றன என்று இங்கு சொல்லப்படுவதுபோல் 'தேவீபுஜங்க' ஸ்தோத்திரத்தில் (சு. 21),

**नमोवाकमाशास्महे देवि युष्मत्पदाम्भोजयुग्माय तिग्माय गौरि ।**
**विरिञ्च्यादिभास्वत्किरीटप्रतोलीप्रदीपायमानप्रभाभास्वराय ॥**

என்று சொல்லப்பட்டிருப்பதும் கவனிக்கத்தக்கது. (22)

(அ) சக்திஸ்வரூபத்தில் சிவஸ்வரூபம் அந்தர்கதம் என்று சொல்லுகிறார் :—

**त्वया हृत्वा वामं वपुरपरितृप्तेन मनसा**
**शरीरार्धं शम्भोरपरमपि शङ्के हृतमभूत् ।**
**यदेतत्त्वद्रूपं सकलमरुणाभं त्रिनयनं**
**कुचाभ्यामानम्रं कुटिलशशिचूडालमकुटम् ॥ २३ ॥**

த்வயா ஹ்ருத்வா வாமம் வபுரபரித்ருப்தேன மநஸா
சரீரார்தம் ஶம்போ: அபரமபி ஶங்கே ஹ்ருதமபூத் ।
யதேதத் த்வத்ரூபம் ஸகலமருணாபம் த்ரிநயனம்
குசாப்யாம் ஆநம்ரம் குடிலஶஶி சூடால மகுடம் ॥

**हे भगवति**-ஹே தாயே! **एतत् त्वद्रूपं**-இந்த உன் ரூபமானது, **सकलं अरुणाभं**-முழுதும் சிவப்பு நிறமுள்ள தாயும், **त्रिनयनं**-மூன்று கண்கள் உள்ளதாயும், **कुचाभ्यां आनम्रं**-இரண்டு கொங்கைகளால் சற்று வளைந்ததாயும், **कुटिलशशिचूडालमकुटं**-வளைந்த சந்த்ரகலையால் அலங்கரிக்கப் பட்ட கிரீடத்துடன் கூடினதாயும், **यत्**-எந்தக் காரணத்தினால் இருக்கிறதோ, **तत्**-அந்தக் காரணத்தினால், **शंभोः**-சிவபெருமானுடைய, **वामं वपुः**-சரீரத்தின் இடது பாதியை, **हृत्वा**-அபஹரித்துக்கொண்டு, **अपरितृप्तेन मनसा**-த்ருப்தியில்லாத மனத்தினால், **अपरं शरीरार्धमपि**-சரீரத்தின் மற்றொரு பாதியும், **त्वया हृतमभूत्**-உன்னால் அபஹரிக்கப் பட்டது **इति**-என்று, **शङ्के**-எண்ணுகிறேன்.

தேவியின் நிறம் சிவப்பு; சிவனின் நிறம் வெளுப்பு. தேவியை சிவன் தன் சரீரத்தின் இடது பாகத்தில் தரித்துக் கொண்டிருக்கிறார். ஆகவே அந்த அர்த்தநாரீச்வர சரீரத்தில் இடது பாகம் சிவப்பாகவும் வலது பாகம் வெளுப்பாகவும் இருக்கவேண்டும். ஆனால் அப்படி இல்லாமல் சரீரம் முழுவதும் ஒரே சிவப்பாய் இருக்கிறது. ஸ்தனம் ஒன்று தான் இருக்கவேண்டும். ஆனால் இரண்டு இருக்கின்றன. அதனால் சரீரம் சற்று வளைந்ததாக இருக்கிறது தேவியின் நெற்றியில் மூன்று கண்கள் இருக்கின்றன. இதையெல்லாம் பார்த்தால சிவனின் சரீரத்தில் இடது பாகம் மட்டும் போதாது என்று எண்ணி வலது பாகத்தையும் தேவி அபஹரித்துக்கொண்டு விட்டதாகத் தோன்றுகிறது. அதாவது சிவதத்வம் சக்தி தத்வத்தில் அந்தர்கதமாக இருக்கிறது என்று தாத்பர்யம். "**शिवतत्वं शक्तितत्वे अन्तर्भूतमिति तदेव उपास्यमिति प्रस्तुतम्**" (சிவதத்வம் சக்திதத்வே அந்தர்பூதமிதி ததேவ உபாஸ்யமிதி ப்ரஸ்துதம்) என்று லக்ஷ்மீதர வ்யாக்யானத்தில காணப்படுகிறது. (23)

(அ) தேவி எல்லா தேவதைகளையும்விட உயர்ந்தவள் என்று கூறுகிறார் :—

**जगत्सूते धाता हरिरवति रुद्रः क्षपयते**
**तिरस्कुर्वन्नेतत्स्वमपि वपुरीशस्तिरयति ।**
**सदापूर्वः सर्वं तदिदमनुगृह्णाति च शिव-**
**स्तवाज्ञामालम्ब्य क्षणचलितयोर्भ्रूलतिकयोः ॥ २४ ॥**

ஜகத் ஸூதே தாதா ஹரிரவதி ருத்ர: க்ஷபயதே
திரஸ்குர்வந் ஏதத் ஸ்வமபி வபுரீசஸ்திரயதி ।
ஸதாபூர்வ: ஸர்வம் ததிதம் அனுக்ருஹ்ணாதி ச சிவ-
ஸ்தவாக்ஞாம் ஆலம்ப்ய க்ஷணசலிதயோ:
ப்ரூலதிகயோ: ॥

**हे भगवति**–ஹே தாயே! **धाता**–ப்ரம்மா, **जगत् सूते**–உலகத்தை ஸ்ருஷ்டிக்கிறார். **हरिः**–விஷ்ணு, **अवति**–காப்

பாற்றுகிறார். रुद्रः-ருத்ரன், क्षपयते-ஸம்ஹாரம் செய்கிறார். ईशः-ஈச்வரன், एतत्तिरस्कुर्वन्-இம்மூவரையும் தனக்குள் மறைத்துக்கொண்டு, स्वं वपुरपि-தன் சரீரத்தையும்கூட, तिरयति-மறைக்கிறார். तदिदं सर्वं-இந்நால்வரையும், सदापूर्वः शिवः-ஸதாசிவன், क्षणचलितयोः-ஒரு க்ஷணம் அசைக்கப் பட்ட, तव भ्रूलतिकयोः-உன்னுடைய லதைபோன்ற புருவங் களின், आज्ञां-உத்திரவை, आलम्ब्य-அடைந்து, अनुगृह्णाति-மறுபடியும் அனுக்ரஹம் செய்கிறார்.

ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன் இவர்கள் மூவரும் ஈச்வரனின் அம்சங்கள். ஈச்வரன் ஸதாசிவனுக்கு உட்பட்டவர். ஸதாசிவன் தேவிக்கு உட்பட்டவர். தேவி வாய் திறந்து பேசாமலே தன் ஆக்ஞையை, புருவங்களை அசைப்பதால் வெளியிடுகிறாள். அதைத்தெரிந்துகொண்டு ஸதாசிவர் ஈசுவரனுக்கு ஆக்ஞை செய்கிறார். அவர் பிரம்மா, விஷ்ணு, சிவன் ரூபமாக மாறி, உலகத்தை ஸ்ருஷ்டி செய்வதும், அதைக் காப்பாற்றுவதும், இறுதியில் அதை அழிப்பதும் செய்கிறார். ஆகவே, எல்லா தேவர்களும் தேவியினிடம் உத்திரவு பெற்றுக்கொண்டு தத்தம் காரியங்களைச் செய் கிறார்கள். "अनेककोटिब्रह्माण्डानामुत्पादने संहरणे च त्वद्भ्रूविक्षेप-मात्ररूपा शक्तिः साचिव्यं सदाशिवस्य करोतीति तात्पर्यम्" (அநேக கோடி ப்ரஹ்மாண்டாநாம் உத்பாதனே ஸம்ஹரணே ச த்வத்ப்ரூவிக்ஷேபமாத்ரரூபா சக்திः ஸாசிவ்யம் ஸதா சிவஸ்ய கரோதீதி தாத்பர்யம்) என்று லக்ஷ்மீதர வியாக்யானத்தில் காணப்படுகிறது. (24)

(அ) தேவியை பூஜைசெய்வதால் மும்மூர்த்திகளையும் பூஜைசெய்த பலன் கிடைக்கிறது:—

त्रयाणां देवानां त्रिगुणजनितानामपि शिवे
भवेत्पूजा पूजा तव चरणयोर्या विरचिता ।
तथाहि त्वत्पादोद्वहनमणिपीठस्य निकटे
स्थिता ह्येते शश्वन्मुकुलितकरोत्तंसमकुटाः ॥ २५ ॥

த்ரயாணாம் தேவாநாம் த்ரிகுண ஜநிதாநாமபி ஶிவே
பவேத் பூஜா பூஜா தவ சரணயோ: யா விரசிதா |
ததாஹி த்வத் பாதோத்வஹந மணிபீடஸ்ய நிகடே
ஸ்திதா ஹ்யேதே ஶச்வத் முகுளித கரோத்தம்ஸ மகுடா:||

**हे शिवे**-ஹே பார்வதியே! **तव चरणयोः**-உன் பாதாரவிந்தங்களில், **या पूजा विरचिता**-எந்த பூஜை செய்யப்பட்டதோ, (அது) **त्रिगुणजनितानां**-ஸத்வம், ரஜஸ், தமஸ், என்னும் மூன்று குணங்களிலிருந்து உண்டான, **त्रयाणां देवानामपि**-மூன்று தெய்வங்களுக்கும், **पूजा भवेत्**-பூஜையாக ஆகிறது. **तथाहि**-அது ஸரியே. **एते**-இம்மூவர்கள், **शश्वत्**-எப்போதும், **मुकुलितकरोत्तंसमकुटाः**-தங்களுடைய கிரீடத்தின்மேல் இரு கைகளையும் கூப்பிக்கொண்டவர்களாக **त्वत्पादोद्वहनमणिपीठस्य निकटे** உன் பாதங்களைத் தாங்கும் ரத்னமயமான பீடத்தின் ஸமீபத்தில், **स्थिता हि**-இருக்கிறார்கள் அல்லவா ?

ப்ரம்மா ரஜோகுணத்தை ப்ரதானமாகக் கொண்ட மாயையுடன் ஸம்பந்தப்பட்டவர்; விஷ்ணு ஸத்வகுண ப்ரதானமான மாயையுடன் ஸம்பந்தப்பட்டவர்; சிவன் தமோகுண ப்ரதானமான மாயையுடன் ஸம்பந்தப்பட்டவர். இம் மூவர்களும் தங்கள் கைகளை சிரஸில் வைத்து அஞ்ஜலி பந்தம் செய்துகொண்டு தேவியின் பாதாரவிந்தத்தில் விழுந்து நமஸ்கரித்துக்கொண்டே இருக்கிறார்கள். ஆகவே தேவியின் பாதாரவிந்தங்களில் பக்தர்கள் அர்ச்சனை செய்யும் புஷ்பங்கள் இவர்களின் சிரஸுகளிலும் விழுகின்றன. அதனால் இவர்களையும் பூஜை செய்த பலன் கிடைக்கிறது. தேவியின் பாதாரவிந்தங்களில் மும்மூர்த்திகளும் எப்பொழுதும் நமஸ்கரித்துக்கொண்டு இருக்கிறார்கள் என்பது முக்கிய தாத்பர்யம். (25)

(அ) தேவியின் மாஹாத்ம்யம் மேலும் சொல்லப்படுகிறது :—

विरिञ्चिः पञ्चत्वं व्रजति हरिराप्नोति विरतिं
विनाशं कीनाशो भजति धनदो याति निधनम् ।
वितन्द्री माहेन्द्री विततिरपि संमीलितदृशा
महासंहारेऽस्मिन् विहरति सति त्वत्पतिरसौ ॥ २६ ॥

விரிஞ்சி: பஞ்சத்வம் வ்ரஜதி ஹரி: ஆப்னோதி விரதிம்
விநாமும் கீநாமோ பஜதி தநதோ யாதி நிதனம் ।
விதந்த்ரீ மாஹேந்த்ரீ விததிரபி ஸம்மீலிதத்ருமா
மஹாஸம்ஹாரேऽஸ்மின் விஹரதி ஸதி த்வத்பதிரஸௌ॥

**हे सति**-ஹே பதிவ்ரதா சிரோமணியே! **विरिञ्चिः**-ப்ரம்மாவானவர், **पञ्चत्वं व्रजति**-சாவை அடைகிறார்; **हरिः**-விஷ்ணுவானவர், **विरतिं आप्नोति**-முடிவை அடைகிறார்; **कीनाशः**-யமன் **विनाशं भजति**-நாசத்தை அடைகிறான்; **धनदः**-குபேரன் **निधनं याति**-மரணத்தை அடைகிறான்; **वितन्द्री**-ஓய்வு எடுத்துக்கொள்ளாத, **माहेन्द्री**-இந்திர ஸம்பந்தமான, **विततिरपि**-வரிசையும்கூட, **संमीलितदृशा**-இரண்டு கண்களையும் மூடிக்கொண்டதாக ஆகிறது. **अस्मिन् महासंहारे**-(ஆனால்)இந்த மஹாப்ரளயத்திலும்கூட, **असौ त्वत्पतिः**-உமது பர்த்தாவாகிய பரமசிவன், **विहरति**-(உம்முடன் விஹாரம் செய்துகொண்டிருக்கிறார்.

மஹா பிரளயத்தில் ப்ரம்மா விஷ்ணு முதலான எல்லா தெய்வங்களும் நாசத்தை அடைகிறார்கள். ஆனால் ஸதா சிவன் மட்டும் தேவியுடன் ஸஹஸ்ராரபத்மத்தில் விஹாரம் செய்துகொண்டிருக்கிறார். அது தேவியின் பாதிவ்ரத்ய மாஹாத்ம்யத்தால் ஏற்படுகிறது "**सर्वेषां अधिकारपुरुषाणां च संहारे ब्रह्माण्डभङ्गसमये तव पत्युर्यत् विहरणं तत् तव पातिव्रत्यमहिमायत्तमिति**" என்று லக்ஷ்மீதர வ்யாக்யானத்தில் காணப்படுகிறது. (26)

(அ) தேவியை உபாஸனை செய்வதில் ஆத்மார்ப்பணம் மிகவும் முக்கியம் என்பதைத் தெரிவிக்கிறார்:—

जपो जल्पः शिल्पं सकलमपि मुद्राविरचना
गतिः प्रादक्षिण्यक्रमणमशनाद्याहुतिविधिः ।
प्रणामः संवेशः सुखमखिलमात्मार्पणदृशा
सपर्यापर्यायस्तव भवतु यन्मे विलसितम् ॥ २७ ॥

ஜபோ ஜல்ப: ஶில்பம் ஸகலமபி முத்ராவிரசநா
கதி: ப்ராதக்ஷிண்ய க்ரமண மஶநாத்யாஹுதி விதி: ।
ப்ரணாம: ஸம்வேஶ: ஸுகமகில மாத்மார்ப்பண த்ருஶா
ஸபர்யா பர்யாயஸ்தவ பவது யந்மே விலஸிதம் ॥

**हे भगवति**-ஹே தேவி! **जल्पः**-பேசுவது, **जपः**-ஜபமாகவும், **सकलं शिल्पमपि**-எல்லாவித அங்கசேஷ்டைகளும், **मुद्राविरचना**-பலவிதமான முத்ரைகளாகவும், **गतिः**-நடப்பது, **प्रादक्षिण्यक्रमणं**-ப்ரதக்ஷிணம் செய்வதாகவும், **अशनादि**-சாப்பிடுவது முதலியவை, **आहुतिविधिः**-அக்னியில் செய்யும் ஹோமமாகவும், **संवेशः**-படுத்துக்கொள்வது, **प्रणामः**-நமஸ்காரமாகவும், **मे**-என்னுடைய, **यत्**-எந்த, **सुखं विलसितं**-இன்ப விலாஸங்கள் இன்னும் என்ன உண்டோ, **अखिलं**-அவைகள் அனைத்தும், **आत्मार्पणदृशा**-ஆத்மார்ப்பணம் செய்துவிட்டேன் என்ற காரணத்தினால், **तव सपर्यापर्यायः भवतु**-உம்முடைய பூஜையின் முக்கிய அம்சங்களாக ஆகட்டும்.

ஸமயாசாரமென்பது தேவியின் மானஸிகமான பூஜை. இதன் முக்கியமான அம்சங்கள் அந்தரங்கபக்தியும், ஆத்மார்ப்பணமும் தான். "உடல், பொருள், ஆவி எல்லாவற்றையும் தேவியின் சரணாரவிந்தத்தில் நிச்சேஷமாக அர்ப்பணம் செய்துவிட்டேன்" என்ற புத்தி உள்ளவனுக்கு தேவியின் பூஜை வெகு ஸுலபம். அவன் லௌகிகமாகச் செய்யும் காரியங்கள் எல்லாம் தேவியின் பூஜாங்கமாக ஆய்விடும். பேசும் பேச்சு ஜபமாகவும், கைகால்களை அசைப்பது பத்துவித முத்ரைகளாகவும், நடப்பது ப்ரதக்ஷிணமாகவும், உண்பது ஆஹுதியாகவும், பூமியில்

படுத்துக்கொள்வது நமஸ்காரமாகவும் ஆய்விடும். வேறு விசேஷ ப்ரயத்னங்களே அவச்யமில்லை. 'மனம் என்ற தாமரைப்புஷ்பத்தை சிவனுக்கு அர்ப்பணம் செய்து விட்டால் வேறு புஷ்ப நிசயத்திற்கு அங்குமிங்கும் போக வேண்டிய அவச்யமில்லை' என்று ஆசார்யபாதாள் சிவானந்தலஹரியில் (சு. 9) சொல்லியிருக்கிறுர். அதே மாதிரி அந்தரங்க பக்தியுடன் ஆத்மார்ப்பணம் செய்தவன் வேறு பூஜாக்ரமங்களைப்பற்றி அதிக ப்ரயாஸை எடுத்துக் கொள்ளவேண்டியதில்லை என்று இங்கு தெரிவிக்கிறுர். "**बाह्यपूजायां तत्क्रियाकलापे च तत्संपादनायां च क्लेशो नास्ति समयिनामिति रहस्यम्**" என்று வ்யாக்யானத்தில் காணப்படுகிறது ஸம்க்ஷோபணம், (**संक्षोभणं**), த்ராவணம் (**द्रावणं**), ஆகர்ஷணம் (**आकर्षणं**), வச்யம் (**वश्यं**), உந்மாதம் (**उन्मादं**), மஹாங்குசம் (**महाङ्कुश**), கேசரீ (**खेचरी**), பீஜம் (**बीज**), யோனி (**योनि**), த்ரிகண்டம் (**त्रिखण्डं**), என்பவை பத்துவித முத்ரைகள். (27)

(அ) தேவியின் தாடங்க மஹிமை சொல்லப்படுகிறது :—

**सुधामप्यास्वाद्य प्रतिभयजरामृत्युहरिणीं**
**विपद्यन्ते विश्वे विधिशतमखाद्या दिविषदः ।**
**करालं यत्क्ष्वेलं कबलितवतः कालकलना**
**न शंभोस्तन्मूलं तव जननि ताटङ्कमहिमा ॥ २८ ॥**

ஸுதாமப்யாஸ்வாத்ய ப்ரதிபய ஜரா ம்ருத்யு ஹரிணீம்
விபத்யந்தே விச்வே விதிமுதமகாத்யா திவிஷத: ।
கராளம் யத் க்ஷ்வேளம் கபளிதவத: கால கலநா
ந ம்போ: தன்மூலம் தவ ஜனனி தாடங்கமஹிமா ॥

**हे जननि**-ஹே தாயே, **विश्वे**-ஸகலமான, **विधिशतमखाद्याः**-ப்ரம்மா, இந்திரன் முதலான, **दिविषदः**-தேவர்கள், **प्रतिभय**-பயங்கரமான, **जरामृत्युहरिणीं**-கிழத்தன்மை, சாவு இவை இரண்டையும் போக்குகின்ற, **सुधां**-அமிருதத்தை, **आस्वाद्यापि**

பானம் செய்தும்; विपद्यन्ते–நாசமடைகிறார்கள். कराळ–கடுமையான क्ष्वेळ–விஷத்தை, कवलितवतः விழுங்கின शंभोः–சிவனுக்கு, कालकलना न–நாசம் என்பது இல்லை. इति यत्–என்பது யாதொன்று உண்டோ, तन्मूलं–அதற்குக் காரணம் तव ताटङ्कमहिमा–உம்முடைய தாடங்கத்தின் மஹிமைதான்.

எல்லா தேவர்களும் அமிருதபானம் செய்திருந்த போதிலும்கூட மஹாப்ரளயத்தில் நாசத்தை அடைகிறார் கள். கடுமையான ஹாலாஹல விஷத்தை உண்டும்கூட சிவன் நாசத்தை அடைவதில்லை. தேவியின் தாடங்க மஹிமைதான் அதற்குக் காரணம். 'சிவானந்தலஹரி'யில் (சு 32) 'உக்ரமான அந்த விஷத்தை சிவன் எப்படிப் பார்த் தாரோ, எப்படிக் கையில் எடுத்தாரோ! எப்படித்தான் நாக்கில் வைத்தாரோ!' என்று ஆச்சர்யப்படுகிறார். அதற்குப் பதில் இங்கு கூறியிருக்கிறார்போலும். கல்யாண வ்ருஷ்டி ஸ்தவ ஸ்தோத்திரத்தில (சு 6) உக்ரமான விஷத்தைச் சாப்பிட்டும் அது ஏன் பரமசிவனை பாதிக்க வில்லை என்று வினவி அதற்குக் காரணம் 'தேவி சிவ னுடைய சரீரத்தில் பாதி பாகமாக இருந்துகொண்டு அமிருதம் என்னும் சீதளத்தை உண்டுபண்ணுவதுதான் என்று சொல்லியிருக்கிறார். (28)

(அ) தேவியின் மேன்மை மேலும் சொல்லப்படுகிறது:

किरीटं वैरिञ्चं परिहर पुरः कैटभभिदः
कठोरे कोटीरे स्खलसि जहि जम्भारिमकुटम् ।
प्रणम्रेष्वेतेषु प्रसभमुपयातस्य भवनं
भवस्याभ्युत्थाने तव परिजनोक्तिर्विजयते ॥ २९ ॥

கிரீடம் வைரிஞ்சம் பரிஹர புர: கைடபபித:
கடோரே கோடீரே ஸ்கலஸி ஜஹி ஜம்பாரி மகுடம் ।
ப்ரணம்ரேஷ்வேதேஷு ப்ரஸபம் உபயாதஸ்ய பவநம்
பவஸ்யாப்யுத்தாநே தவ பரிஜநோக்திர் விஜயதே ॥

**हे भगवति**-ஹே தாயே! **भवनं**-உன் க்ருஹத்திற்கு **उपयातस्य**-வருகின்ற, **भवस्य**-சிவனுடைய, **प्रसभं**-பரபரப்புடன் கூடின, **अभ्युत्थाने**-வரவேற்பு சமயத்தில், **एतेषु प्रणतेषु**-இந்த தேவர்கள் நமஸ்கரித்துக்கொண்டிருப்பதால், **पुरः**-எதிரிலிருக்கும், **विरिञ्चं किरीटं**-ப்ரம்மாவின் கிரீடத்தை, **परिहर**-ஒதுக்கிவிடு, **कैटभभिदः**-விஷ்ணுவினுடைய, **कठोरे कोटीरे**-கடினமான கிரீடத்தில், **स्खलसि**-இடித்துக்கொள்ளப் போகிறாய்! **जम्भारिमकुटं**- இந்திரனுடைய கிரீடத்தை, **जहि**-விட்டுவிடு (என்பதாக), **तव परिजनोक्तिः**-உம்முடைய ஸேவகர்களுடைய வாக்கு **विजयते**-கோஷிக்கிறது.

ப்ரம்மா விஷ்ணு, இந்த்ரன் முதலான தேவதைகள் தேவியின் பாதாரவிந்தத்தில் நமஸ்காரம் செய்துகொண்டிருக்கும் போது பரமசிவன் வருகிறார். அவரை வரவேற்பதற்காக பரபரப்புடன் தேவி எழுந்து போகும்போது இந்த தேவதைகளின் கிரீடங்களை ஒதுக்கிவிட்டு இடித்துக்கொள்ளாமல் போகும்படி தேவி தன் பரிஜனங்களால் வேண்டப்படுகிறாள். த்ரிபுரஸுந்தரீ மானஸ பூஜா ஸ்தோத்திரத்தில் (சு. 66) இதே விஷயம் சொல்லப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது. (29)

स्वदेहोद्भूताभिर्घृणिभिरणिमाद्याभिरभितो
निषेव्ये नित्ये त्वामहमिति सदा भावयति यः ।
किमाश्चर्यं तस्य त्रिनयनसमृद्धिं तृणयतो
महासंवर्ताग्निर्विरचयति नीराजनविधिम् ॥ ३० ॥

ஸ்வதேஹோத்பூதாபி: க்ருணிபி: அணிமாத்யாபிரபிதோ
நிஷேவ்யே நித்யே த்வாம் அஹமிதி ஸதா பாவயதி ய: ।
கிமாச்சர்யம் தஸ்ய த்ரிநயன ஸம்ருத்திம் த்ருணயதோ
மஹா ஸம்வர்த்தாக்னி: விரசயதி நீராஜனவிதிம் ॥

**हे नित्ये**-சாச்வதமான ஹே பரதேவதையே! **निषेव्ये**-எல்லோராலும் ஸேவிக்கத் தகுந்தவளே, **स्वदेहोद्भूताभिः**-

உன் தேஹத்திலுள்ள சரணங்களிலிருந்து வெளிக் கிளம்புகிற, अणिमाद्याभिः-அணிமாதி ஸித்திகள் எனப்படும் घृणिभिः-கிரணங்களால், अभितः-எல்லா பக்கங்களிலும் (சூழப் பட்டவளான), त्वां-உன்னை, यः-எவனொருவன், अहमिति-தனது ஆத்மாவாக, सदा-எப்பொழுதும், भावयति-மானஸிக மாக அனுஸந்தானம் செய்கிறானோ, त्रिनयनसमृद्धिं-முக்கண்ணனான பரமசிவனுடைய பதவியையும், तृणयतः-த்ருணமாக எண்ணுகிற, तस्य-அவனுக்கு, महासंवर्ताग्निः-பிரளயகால அக்னியானது, नीराजनविधिं-கர்பூரஹாரதியை, विरचयति-செய்கிறது என்பது, किं आश्चर्यं-என்ன விநோதம்?

தேவியினிடம் ஆத்மார்ப்பணம் செய்து ஐக்யபாவத்தையும் அடைந்தவன் வேறு எந்த பதவியையும் லக்ஷ்யம் செய்யமாட்டான். அவனுக்கு பிரளயகாலத்திலும் நாசம் கிடையாது. அணிமாதி ஸித்திகள் என்பவை ஆவரண தேவதைகளைக் குறிக்கும். ஆவரண தேவதைகளால் நான்கு பக்கங்களிலும் சூழப்பட்டிருப்பதாக தேவியை உபாஸனை செய்தால் ஐக்கியபாவம் உண்டாகும். உபநிஷத்துக்களில் சொல்லியிருக்கும் ப்ரம்மாத்மபாவம் (ब्रह्मात्मभावः) உண்டாகும். அந்த அனுபவம் வந்தவன் வேறு எந்த பதவியையும் திருணமாகத்தான் எண்ணுவான். பிரளய கால அக்னியும் அவனை பாதிக்காது. (30)

(அ) ஸ்ரீவித்யையில் அதிகாரம் ஏற்படுவதற்கு முன் நாம் தள்ளவேண்டிய தந்திரங்கள் சொல்லப்படுகின்றன:—

चतुःषष्ट्या तन्त्रैः सकलमतिसन्धाय भुवनं
स्थितस्तत्तत्सिद्धिप्रसवपरतन्त्रैः पशुपतिः ।
पुनस्त्वन्निर्बन्धादखिलपुरुषार्थैकघटना-
स्वतन्त्रं ते तन्त्रं क्षितितलमवातीतरदिदम् ॥ ३१ ॥

சதுஃஷஷ்ட்யா தந்த்ரை: ஸகலமதிஸந்தாய புவநம்
ஸ்திதஃ தத்தத்ஸித்தி ப்ரஸவ பரதந்த்ரை: பசுபதி: |

புன: த்வந்நிர்பந்தாத் அகில புருஷார்த்தைக கடநா-
ஸ்வதந்த்ரம் தே தந்த்ரம் க்ஷிதிதலம் அவாதீதரத்
இதம் ||

**हे भगवति**-ஹே தாயே! **पशुपतिः**-பரமசிவன் **तत्तत्सिद्धि-प्रसवपरतन्त्रैः**-ஒவ்வொரு ஸித்தியையும் உண்டுபண்ணுவதற்குக் காரணமான, **चतुःषष्ट्या तन्त्रैः**-அறுபத்து நான்கு விதமான தந்த்ர சாஸ்திரங்களால், **सकलं भुवनं**-எல்லா லோகங்களையும், **अतिसन्धाय**-வஞ்சித்துவிட்டு, **स्थितः**-சும்மா இருந்தார். **पुनः**-மறுபடியும், **त्वन्निर्बन्धात्**-உன் நிர்ப்பந்தத்தால், **अखिलपुरुषार्थैकघटनास्वतन्त्रं**-எல்லா புருஷார்த்தங்களையும் கொடுப்பதில் ஸாமர்த்தியம் உள்ள, **इदं ते तन्त्रं**-இந்த உன் சாஸ்திரத்தை, **क्षितितलं**-பூவுலகில், **अवातीतरत्**-இறங்கும்படியாகச் செய்தார்.

அணிமாதி ஸித்திகளைக் கொடுக்கக்கூடிய தந்த்ர சாஸ்திரங்கள் அறுபத்தி நான்கு. பரமபுருஷார்த்தமாகிய மோக்ஷத்தைக்கோருகிறவன் அவைகளை திரஸ்காரம் செய்ய வேண்டும். அவைகள் எல்லாம் கௌளமதம் என்னும் வாமாசாரத்தைச் சேர்ந்தவை. நம்மைப் பரீக்ஷை செய்வதற்காகத்தான் அவைகளைப் பரமசிவன் உண்டு பண்ணினார். அவைகளில் நமக்கு மோஹம் ஏற்படாமலிருந்தால் பிறகு நமக்கு உத்தமமான ஸ்ரீ வித்யை உபதேசிக்கப்படும். ஸ்ரீவித்யை இதர அபேக்ஷையில்லாமல் பரமபுருஷார்த்தத்தை அளிக்கவல்லது. வஸிஷ்டர், ஸனகர், சுகாசார்யர், ஸனந்தனர், ஸனத்குமாரர் போன்ற பரம சிஷ்டர்கள் இந்த மார்க்கத்தையனுஸரித்ததால் இதற்கு "சுபாகமதந்த்ரம்" என்று பெயர். பகவத்பாதாள் உபதேசம் செய்யும் உபாஸனமும் இதுதான். (31)

(அ) ஸ்ரீவித்யையின் ஸாரபூதமான பஞ்சதசாக்ஷரீ மந்த்ரம் மறைமுகமாக உபதேசிக்கப்படுகிறது.

**शिवः शक्तिः कामः क्षितिरथ रविः शीतकिरणः**
**स्मरो हंसः शक्रस्तदनु च परामारहरयः ।**

अमी हृल्लेखाभिस्तिसृभिरवसानेषु घटिता
भजन्ते वर्णास्ते तव जननि नामावयवताम् ॥ ३२ ॥

*ஶிவ: ஶக்தி: காம: க்ஷிதிரத ரவி: ஶீதகிரண:*
*ஸ்மரோ ஹம்ஸ: ஶக்ர: ததனு ச பரா மார ஹரய: ।*
*அமீ ஹ்ருல்லேகாபி: திஸ்ருபி: அவஸாநேஷு கடிதா*
*பஜந்தே வர்ணாஸ்தே தவ ஜனனி நாமாவயவதாம் ॥*

**हे जननि**-ஹே தாயே! **शिवः**–'க' என்னும் வர்ணம், **शक्तिः**–'ஏ' என்னும் வர்ணம், **कामः**-'ஈ' என்னும் வர்ணம், **क्षितिः**–'ல' என்னும் வர்ணம், **अथ**–பிறகு **रविः**–'ஹ' என்னும் வர்ணம், **शीतकिरणः**–'ஸ' என்னும் வர்ணம், **स्मरः**–'க' என்னும் வர்ணம், **हंसः**–'ஹ' என்னும் வர்ணம், **शक्रः**–'ல' என்னும் வர்ணம், **तदनु च**–அதற்கு பிறகும் **परा**–'ஸ' என்னும் வர்ணம், **मार**–'க' என்னும் வர்ணம், **हरयः**–'ல' என்னும் வர்ணம், **अमी ते वर्णाः**- இந்த வர்ணங்கள், **अवसानेषु**- முடிவில், **तिसृभिः हृल्लेखाभिः**–மூன்று தடவை உச்சரிக்கப் படும் 'ஹ்ரீம்' என்னும் வர்ணத்துடன் **घटिताः**–சேர்க்கப் பட்டவைகளாய்க்கொண்டு **तव**–உன்னுடைய **नामावयवतां**– நாமாவில் அவயவமாகும் தன்மையை **भजन्ते**-அடைகின்றன.

சிவனுக்கு பஞ்சாக்ஷரீ மந்த்ரமும், விஷ்ணுவுக்கு அஷ்டாக்ஷரீ மந்த்ரமும் இருப்பதுபோல் தேவிக்கு பஞ்ச தசாக்ஷரீ என்னும் மந்த்ரம் இருக்கிறது. இந்த மந்த்ரம் பதினைந்து வர்ணங்களை உடையது. இது மிகவும் ரஹஸ்ய மான மந்த்ரமானதால் அதில் அடங்கியிருக்கும் வர்ணங் களை நேர்முகமாக உரைக்கக்கூடாது. லலிதாஸஹஸ்ரநாமத் திலும் லலிதா அஷ்டோத்தர சதநாமாவளியிலும் இந்தப் பதினைந்து அக்ஷரங்கள் மறைமுகமாகக்கூட சொல்லப்பட வில்லை. லலிதாத்ரிசதியில் ஒவ்வொரு அக்ஷரத்தையும் முதல் எழுத்தாக வைத்து இருபது நாமாக்கள் ரசனை செய்யப் பட்டிருக்கின்றன. அதேமாதிரி 'மந்த்ர மாத்ருகா புஷ்ப மாலா ஸ்தவம்' என்னும் ஸ்தோத்திரத்திலும், 'கல்யாண வ்ருஷ்டி ஸ்தவம்' என்னும் ஸ்தோத்திரத்திலும்கூட இந்த

பீஜாக்ஷரங்களை முதல் எழுத்தாக வைத்து பதினைந்து சுலோகங்கள வெகு சாதுர்யமாக கவனம் செய்யப்பட்டிருக்கின்றன. இந்த சலோகத்திலும் தேவியின் பஞ்சதசாக்ஷரீ மந்த்ரம் மறைமுகமாகத்தான் உபதேசம் செய்யப்பட்டிருக்கிறது. ச்லோகத்தில் காணப்படும் 'சிவ' 'சக்தி' 'காம' போன்ற பதங்களுக்கு நேரான பீஜாக்ஷரங்கள் எவை என்பது தந்த்ர சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதையனுஸரித்து இங்கு அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது. பரதேவதையின் அங்கதேவதைகளான 'நித்யா' தேவதைகளின் பெயர்கள் மூலமாக பஞ்சதசாக்ஷரீ மந்த்ரம் மறைபொருளாகக் கூறப்பட்டிருக்கிறது.

இவைகளில் 'க', 'ஏ', 'ஈ', 'ல', (क, ए, ई, ल,) என்ற நான்கு அக்ஷரங்களை வாக்பவகூடம் (वाग्भवकूट) என்றும், 'ஹ', 'ஸ', 'க', 'ஹ', 'ல' (ह, स, क, ह, ल) என்ற அடுத்த ஐந்து வர்ணங்களை காமராஜகூடம் (कामराजकूट) என்றும், கடைசியாக வரும் 'ஸ' 'க' 'ல' (स, क, ल,) என்ற மூன்று அக்ஷரங்களை சக்தி கூடம் (शक्तिकूट) என்றும் சொலலுகிறார்கள். ஒவ்வொரு கூடத்திற்கும் 'ஹ்ரீம்' (ह्रीं) என்னும் வர்ணத்தைக் கடைசியில் சேர்த்துக்கொண்டால் பதினைந்து அக்ஷரங்களடங்கிய பஞ்சதசாக்ஷரீ மந்த்ரமாக ஆகிறது. முதல் கூடத்தை அக்னி கண்டமென்றும், இரண்டாவது கூடத்தை ஸூர்ய கண்டமென்றும் மூன்றாவது கூடத்தை சந்த்ரகண்டமென்றும் சொல்லுவதும் உண்டு. ஒவ்வொரு கண்டத்தின் முடிவில் வரும் 'ஹ்ரீம்' என்னும் அக்ஷரமானது ஸாதகன் தாண்டவேண்டிய மூன்று படிகளை ஸூசிப்பிக்கின்றன. இவைகளுக்கு 'கிரந்திகள்' (ग्रन्थि) என்று பெயர். அக்னி கண்டத்தின் முடிவில் வரும் 'ஹ்ரீம்' என்பது 'ருத்ரக்ரந்தி' (रुद्रग्रन्थि) என்றும், ஸூர்யகண்டத்தின் முடிவில் வரும் 'ஹ்ரீம்' என்பது 'விஷ்ணுக்ரந்தி' (विष्णुग्रन्थि) என்றும், மூன்றாவதான சந்த்ரகண்டத்தின் முடிவில் வரும் 'ஹ்ரீம்' என்பது 'ப்ரம்மக்ரந்தி' (ब्रह्मग्रन्थि) என்றும் சொல்லுவ

படுகின்றன. லலிதா ஸஹஸ்ர நாமத்தில் இந்த மூன்று கூடங்களும், மூன்று கண்டங்களும், மூன்று க்ரந்திகளும் சொல்லப்படுகின்றன.

இந்தப் பதினைந்து வர்ணங்களுடன் 'ஶ்ரீம்' என்னும் பதினாறுவது வர்ணம் சேர்ந்தால பஞ்சதசாக்ஷரீ மந்த்ர மானது ஷோடசாக்ஷரீ மந்த்ரமாக மாறுகிறது. 'த்ரிபாத்' காயத்ரீ மந்த்ரத்திற்கு மேலான 'சதுஷ்பாத்' காயத்ரீ மந்த்ரம் இருப்பதுபோல் பதினைந்து வர்ணங்களுக்குமேல் பதினாறுவது வர்ணம் இருக்கிறது. இது அதிகோப்ய மென்றும், மிகவும உத்தமமான அதிகாரிக்குத் தான் குரு உபதேசம் செய்யவேண்டுமென்றும் சொல்லப்படுகிறது இந்த பதினாறு வர்ணங்களும் பதினாறு நித்யா தேவதை களின் ஸ்வரூபமெனப்படுகின்றன.

மேற்கூறிய மூன்று கண்டங்களில் இச்சா சக்தி, ஞான சக்தி, க்ரியா சக்தி எனப்படும் மூன்று சகதிகளும், ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளும் விச்வன், தைஜஸன், ப்ராக்ஞன் என்ற ஜீவனின் மூன்று நிலைகளும் ஸத்வ, ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களும் அடங்கியிருப்பதாக தந்த்ர சாஸ்திரங்களில் சொல்லப் படுகிறது.

'தேவியின் ஸ்வரூபமே மூன்று கூடங்கள் அடங்கிய பஞ்சதசாக்ஷரீமந்திரம்தான்' என்று த்ரிபுரஸுந்தரீ வேதபாத ஸ்தவத்தில் **महामन्त्रकूटत्रयकळेबरे** (மஹாமந்த்ர கூடத்ரய களேபரே—சு. 59) சொல்லப்பட்டிருக்கிறது. லலிதா ஸஹஸ்ர நாமத்திலும் 'மூல மந்த்ராத்மிகா மூல கூடத்ரய களேபரா' (**मूलमन्त्रात्मिका मूलकूटत्रयकळेबरा**) என்று காணப்படுகிறது. (32)

(அ) ஸௌபாக்யபஞ்சதசீ வர்ணிக்கப்படுகிறது:—

**स्मरं योनिं लक्ष्मीं त्रितयमिदमादौ तव मनो-**
**र्निधायैके नित्ये निरवधिमहाभोगरसिकाः ।**

भजन्ति त्वां चिन्तामणिगुणनिबद्धाक्षवलयाः
शिवाग्नौ जुह्वन्तः सुरभिघृतधाराहुतिशतैः ॥ ३३ ॥

ஸ்மரம் யோநிம் லக்ஷ்மீம் த்ரிதயமிதமாதௌ தவ மநோ:
நிதாயைகே நித்யே நிரவதி மஹாபோக ரஸிகா: ।
பஜந்தி த்வாம் சிந்தாமணி குண நிபத்தாக்ஷ வலயா:
ஶிவாக்நௌ ஜுஹ்வந்த: ஸுரபி க்ருத தாராஹுதி
ஶதை: ॥

हे नित्ये-சாச்வதமான ஹே தாயே! तव मनोः-உன்னுடைய பஞ்சதசாக்ஷரீ மந்த்ரத்திற்கு, आदौ-முதலில், स्मरं-காமபீஜமான 'க்லீம்', योनिं-புவனேச்வரீ பீஜாக்ஷரமான 'ஹ்ரீம்', लक्ष्मीं-லக்ஷ்மீ பீஜாக்ஷரமான 'ஶ்ரீம்' इदं त्रितयं-இந்த மூன்று பீஜாக்ஷரங்களையும், निधाय-வைத்து, चिन्तामणिगुणनिबद्धाक्षवलयाः:-கயிற்றில் கோர்க்கப்பட்ட தாம்ர மணி மாலையைக் கையில் வைத்துக்கொண்டு, शिवाग्नौ-சிவாக்னியில், सुरभिघृतधाराहुतिशतैः जुह्वन्तः-பசுவின் நெய்யினால் அநேக ஆஹுதிகளைச் செய்கிறவர்களாக, एके निरवधि-महाभोगरसिकाः-எல்லையில்லாத ஆனந்தத்தை அனுபவிக்கும் சிலர், त्वां भजन्ति-உன்னைத் துதிக்கிறார்கள்.

த்ரிகோணமான வேதிகையில் போடப்படும் அக்னிக்கு 'சிவாக்னி' என்று பெயர். அந்த அக்னியின் மேல் சில மஹான்கள் பசுவின் நெய்யைக்கொண்டு அநேகம் ஆஹுதிகள் செய்கிறார்கள். கையில் தாம்ரமணி மாலையை வைத்துக் கொண்டு ஜபத்தின் ஆவர்த்தியை எண்ணுகிறார்கள். இப்படி பஞ்சதசாக்ஷரீ மந்த்ரத்தை ஜபம் செய்து கொண்டு சிவாக்னியில் பசுவின் நெய்யால் அநேகம் தடவைகள் ஹோமம் செய்தால் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையும் அடையலாம். (33)

(அ) சிவனுக்கும் தேவிக்கும் உள்ள அன்யோன்ய பாவம் சொல்லப்படுகிறது :—

शरीरं त्वं शंभोः शशिमिहिरवक्षोरुहयुगं
तवात्मानं मन्ये भगवति नवात्मानमनघम् ।
अतः शेषः शेषीत्ययमुभयसाधारणतया
स्थितः संबन्धो वां समरसपरानन्दपरयोः ॥ ३४ ॥

*ஶரீரம் த்வம் ஶம்போ: ஶஶி மிஹிர வக்ஷோருஹ யுகம்*
*தவாத்மாநம் மந்யே பகவதி நவாத்மாந மநகம் ।*
*அத:.ஶேஷ: ஶேஷீத்யயமுபய ஸாதாரணதயா*
*ஸ்தித: ஸம்பந்தோ வாம் ஸமரஸ பரானந்த பரயோ: ॥*

**हे भगवति**-ஹே பரதேவதையே! **त्वं**-நீ, **शंभोः**-சிவனுடைய, **शरीरं**-சரீரமாக இருக்கிருய். **नवात्मानं** - நவாத்மாவை, **शशिमिहिरवक्षोरुहयुगं**-சந்த்ரனையும் ஸூர்யனையும் இரு ஸ்தனங்களாகக்கொண்ட **अनघं** - பாபரஹிதமான, **तवात्मानं** - உன் சரீரமாக, **मन्ये** - எண்ணுகிறேன். **अतः**- ஆகவே, **समरसपरानन्दपरयोः** - ஒற்றுமையுடனும், அதிசயமான ஆனந்தத்துடனும் கூடின தேவதைகளாகிற **वां**- உங்கள் இருவர்களுக்கும் **शेषः - शेषी इति**-சேஷம் சேஷி என்கிற, **अयं संबन्धः**-இந்த ஸம்பந்தமானது, **उभयसाधारणतया**- இருவருக்கும் பொதுவானதாக, **स्थितः**-இருந்து வருகிறது.

சிவனுக்கும் பரமேச்வரிக்கும் ஆழ்ந்த ஒற்றுமை உண்டு. இருவரும் ப்ரம்மானந்தத்தில் மூழ்கியிருப்பவர்கள். வேறு விதங்களிலும் இருவரும் ஸமம். ஆகவே தேவியின் சரீரத்தை சிவனுடைய சரீரமாகவும், சிவனுடைய சரீரத்தை தேவியினுடைய சரீரமாகவும் சொல்லப்படுகிறது. ஈருயிர் ஓருடலாக அவர்கள் இருந்து வருகிருர்கள். ஆயினும் ஒரு ஸமயத்தில் சிவனுக்கு ப்ராதான்யத்தையும், மற்றொரு ஸமயத்தில் தேவிக்கு ப்ராதான்யத்தையும் கொடுப்பது வழக்கமாக இருக்கிறது. சிவனுக்கு ப்ராதான்யம் ஏற்பட்டால் தேவி அப்ரதானமாக விளங்குகிருள். தேவிக்கு ப்ராதான்யமேற்பட்டால் சிவன் அப்ரதானமாக விளங்குகிருர். இந்த ஸம்பந்தத்திற்கு சாஸ்திர பந்தாவில் சேஷ-

சேஷி பாவம் என்று பெயர், இதில் யார் சேஷன், யார் சேஷி என்பது நியதமில்லை. சேஷன் சேஷியாகவும், சேஷி சேஷனாகவும் மாறலாம். ஆகவே இவர்கள் இருவர்களுக்குள் சேஷ—சேஷி என்ற ஸம்பந்தம் நிலைத்து நிற்கிறது. சிவனுக்கும் சக்திக்கும் உள்ள ஸமத்வமானது இன்னும் விஸ்தாரமாக 41வது ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. இருப்பிடம், அவஸ்தை, காரியம், ரூபம், நாமம் என்ற ஐந்து விதமான ஸாம்யம் இருவருக்குமிருப்பதாக அங்கு சொல்லப் படுகிறது. சிவ-சக்தி ஸமத்வம் என்பது ஸமயாசாரத்தில் ஒரு முக்கியமான கொள்கை.

காலம், குலம், நாம, ஞானம், சித்தம், நாதம், பிந்து, கலை, ஜீவன், என்ற ஒன்பதும் சிவனுடைய சரீரமாக தந்த்ர சாஸ்திரத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கிறபடியால் அவருக்கு 'நவாத்மா' (नवात्मा) என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. (34)

(அ) தேவி பிரபஞ்சமாக பரிணமிக்கிறுள் :—

**मनस्त्वं व्योम त्वं मरुदसि मरुत्सारथिरसि**
**त्वमापस्त्वं भूमिस्त्वयि परिणतायां न हि परम् ।**
**त्वमेव स्वात्मानं परिणमयितुं विश्ववपुषा**
**चिदानन्दाकारं शिवयुवतिभावेन बिभृषे ॥ ३५ ॥**

மநஸ்த்வம் வ்யோம த்வம் மருதஸி மருத் ஸாரதிரஸி
த்வமாப: த்வம் பூமி: த்வயி பரிணதாயாம் நஹி பரம் ।
த்வமேவ ஸ்வாத்மானம் பரிணமயிதும் விச்வவபுஷா
சிதானந்தாகாரம் ஶிவயுவதி பாவேன பிப்ருஷே ॥

**हे भगवति**–ஹே தாயே! **त्वं मनः**–நீதான் மனஸ், **त्वं व्योम**–நீதான் ஆகாசம், **मरुदसि**–நீதான் வாயு, **मरुत्सारथिः असि**–நீதான் அக்னி, **त्वं आपः**–நீதான் ஜலம், **त्वं भूमिः**–நீதான் பூமி, **त्वयि परिणतायां**–பிரபஞ்சரூபமாக மாறியிருக்கும் உன்னைத்தவிற **नहि परं**–வேறு ஒன்றும் இல்லை. **विश्ववपुषा**–பிரபஞ்சரூபமாக, **परिणमयितुं**–மாறுவதற்கு, **चिदानन्दाकारं**–

சித்ஆனந்தஸ்வரூபமான, **स्वात्मानं**-உன் சரீரத்தை, **त्वमेव**-நீயே, **शिवयुवतिभावेन**-சிவனின் பத்னி என்ற எண்ணத்துடன் **बिभृषे**-வஹிக்கிருய்.

ஸுஷும்னு நாடியில் மூலாதாரம், மணிபூரகம், ஸ்வாதிஷ்டானம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞா என்ற ஆறு சக்ரங்கள் இருப்பதாகவும், அவைகளில் பிருதிவி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம், மனஸ் என்னும் தத்வங்கள் அடங்கியிருப்பதாகவும் ஏற்கனவே ஒன்பதாவது ச்லோகத்தில் சொல்லப்பட்டது. இந்த தத்வங்களின் சேர்க்கையிஞல் தான் பிரபஞ்சம் ஏற்படுகிறது. தேவியே பிரபஞ்சரூபமாக மாறுகிருள் என்று சொல்லியிருக்கிறபடியால் இந்த ஆறு தத்வங்களும், அவைகளுக்கு ஆதாரமான ஆறு சக்ரங்களும் தேவியினிடத்தில் அந்தர்கதமாகி இருக்கின்றன. பிரபஞ்சமாக மாறுவதற்கு தேவியே சிவயுவதி என்னும் பாவத்தை மனதில எண்ணுகிருள் என்று சொல்லப்பட்டிருக்கிறபடியால் சிவனுடைய தேஜஸ்ஸானது சிவனுடைய தர்மபத்னியாக ரூபம் எடுத்து பிறகு பிரபஞ்சமாக மாறுகிறது. ஆகவே ஸாதகர்கள் ஸர்வ ப்ரபஞ்சத்தையும் ஆறு தத்வங்களில் அடக்கி பிறகு அவைகளை ஆறு சக்ரங்களில் அடக்கி, அந்த சக்ரங்களையும் ஸஹஸ்ரார கமலத்தில் வீற்றிருக்கும் தேவியினிடத்தில் அடக்கி பிறகு தேவியும் பரமசிவனும் அபின்னம் என்பதை உணர்ந்து த்யானம் செய்யவேண்டும் என்பதுதான் முக்யமான தாத்பர்யம். (35)

(அ) ஆக்ஞா சக்ரத்திலிருக்கும் பரசம்புவை ஆராதித்து தேவியின் ஸாயுஜ்யத்தை அடையவேண்டும் என்பதைத் தெரிவிக்கிருர் :—

**तवाज्ञाचक्रस्थं तपनशशिकोटिद्युतिधरं**
**परं शंभुं वन्दे परिमिलितपार्श्वं परचिता ।**
**यमाराध्यन् भक्त्या रविशशिशुचीनामविषये**
**निरालोकेऽलोके निवसति हि भालोकभुवने ॥ ३६ ॥**

தவாஜ்ஞா சக்ரஸ்தம் தபந ஶஶி கோடி த்யுதி தரம்
பரம் ஶம்பும் வந்தே பரிமிளித பார்ச்வம் பரசிதா ।
யமாராத்யன் பக்த்யா ரவி ஶஶி ஶுசீநாமவிஷயே
நிராலோகே லோகே நிவஸதி ஹி பாலோக புவநே ॥

हे भगवति-ஹே பரதேவதையே! यं भक्त्या आराध्यन्-எந்த (பரசம்புவை) பக்தியுடன் ஆராதித்தவன, रविशशिशुचीनां-ஸூர்யன், சந்த்ரன், அக்னி இவர்களால், अविषये-பிரகாசப்படுத்த முடியாததாயும், निरालोके-வேறு பிரகாசமில்லாததாயும், अलोके-ஸாமான்ய உலகிற்கு வேறுபட்ட தாகவும் இருக்கிற, भालोकभुवने-ஸ்வயம்பிரகாசமான லோகத்தில், निवसति-வஸிக்கிருனே, तव आज्ञाचक्रस्थं-உன் ஆக்ஞா சக்ரத்தில இருக்கிற (அந்த), तपनशशिकोटिद्युतिधरं-கோடி ஸூர்ய சந்த்ரர்களுடைய காந்தியை தரித்துக் கொண்டு இருக்கிறவராயும், परचिता-ஸகுண நிர்குண சக்திகளால், परिमिलितपार्श्वं-அலங்கரிக்கப்பட்ட இரு பக்கங்களைஉடையவராயுமுள்ள, परं शंभुं-பர சம்புவை, वन्दे-நமஸ்கரிக்கிறேன்.

ஷட்சக்ரங்களைப் பற்றி ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. அவைகள் ஸுஷும்ந நாடியில் வெவ்வேறு ஸ்தானங்களில் அமைந்திருக்கின்றன. இந்த சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கும் ஆக்ஞா சக்ரம் என்பது இரு புருவங்களுக்கும் மத்தியில் இரண்டு தள தாமரைபோல் அமைந்து உள்ளது. குண்டலினீ சக்தி மூலாதாரத்திலிருந்து படிப் படியாக மேலே ஏறும்போது ஆக்ஞா சக்ரத்திலும் தங்குகிற படியால் அது தேவியினுடைய சக்ரமென்று சொல்லப் படுகிறது. அந்த ஸ்தானத்தில் வீற்றிருக்கும் பரசம்புவை கோடி ஸூர்ய, சந்த்ரர்களுடைய காந்தியையுடையவராகவும், ஸகுணம் நிர்குணம் என்ற சக்திகளை இருபக்கங்களில் உடையவராகவும் த்யானம் செய்தால் ஸாதகன் பாலோக புவனத்தில் வஸிப்பான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'பாலோக புவனம்' என்பது தேவியேதான். பராம்பிகை

ஸ்வயம் ஜ்யோதியாக எப்பொழுதும் பிரகாசித்து வருகிறாள். ஆகையால் ஸூர்யன் சந்த்ரன், அக்னி இவைகளுக்கு அங்கு ப்ரவ்ருத்தி கிடையாது. "न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः" என்று ச்ருதி சொல்லுகிறது தான் இதற்கு ப்ரமாணம். 14வது ச்லோகத்தில் ஏற்கனவே இந்த விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்வயம்ஜ்யோதியான வஸ்துவுக்கு இதர ப்ரகாசம் தேவையில்லை. ஆகவே அது பரப்ரம்ம ஸ்வரூபம், உலகிற்கு விலக்ஷணமானது.

(அ) விசுத்தி சக்ரத்தில் காமேச்வரனும் காமேச்வரியும் வஸிக்கிறார்கள் —

विशुद्धौ ते शुद्धस्फटिकविशदं व्योमजनकं
शिवं सेवे देवीमपि शिवसमानव्यवसिताम् ।
ययोः कान्त्या यान्त्याः शशिकिरणसारूप्यसरणे-
र्विधूतान्तर्ध्वान्ता विलसति चकोरीव जगती ॥ ३७ ॥

வி^{ஶு}த்தௌ தே ^{ஶு}த்த ஸ்படிக வி^{ஶ}தம் வ்யோம ஜநகம்
ஶிவம் ஸேவே தேவீமபி ஶிவஸமாந வ்யவஸிதாம் ।
யயோ: காந்த்யா யாந்த்யா: ^{ஶ}ஶிகிரண ஸாரூப்ய ஸரணே:
விதூதாந்தர்த்வாந்தா விலஸதி சகோரீவ ஜகதீ ॥

हे भगवति-ஹே தாயே, ययोः-எவர்களுடைய, शशिकिरणसारूप्यसरणेः-சந்த்ரகிரணத்தைப் போன்றதான, यान्त्याः-வெளிக் கிளம்பும், कान्त्याः-காந்தியிலிருந்து, विधूतान्तर्ध्वान्ता-உள் இருட்டு நாசமடைந்ததாக, जगती-லோகமானது, चकोरीव-பெண் சகோர பக்ஷியைப்போல், विलसति-ப்ரகாசிக்கிறதோ, ते विशुद्धौ-உன் விசுத்தி சக்ரத்தில், शुद्धस्फटिकविशदं-சுத்தமான ஸ்படிகம்போல் ப்ரகாசிக்கின்றவராயும், व्योमजनकं-ஆகாசத்தையுண்டுபண்ணுகிறவராயுமுள்ள, शिवं அந்த சிவனையும், शिवसमानव्यवसितां-சிவனுடைய மனஸ் எப்படியோ அதேமாதிரி எண்ணமுள்ள, देवीमपि-தேவியையும், सेवे-பஜனம் செய்கிறேன்.

பதினாறு தளத்தாமரை போன்ற விசுத்தி சக்ரம் ஸுஷும்நா நாடியில் ஹ்ருதய ப்ரதேசத்திற்கு ஸமீபத்தில் உள்ளது. அது ஆகாச தத்வத்திற்கு உத்பத்தி ஸ்தானம். ஆகவே அதை 'ஹார்தாகாசம்' (हार्दाकाशं) அல்லது 'தஹராகாசம்' (दहराकाशं) என்று சொல்லலாம். சாந்தோக்யோபநிஷத்தில் (8-1) தஹராகாசத்திற்குள் அடங்கியிருக்கும் வஸ்துவைத்தேட வேண்டுமென்று சொல்லப் படுகிறது. இதை விஸ்தரித்து பிருஹதாரண்யகத்தில் (4-2-3) இந்திரனும் அவனுடைய பத்னியான விராட் என்பவளும் வஸிக்கும் இடம் ஹார்தாகாசமென்று சொல்லக் காண்கிறோம். "**तयोरेष संस्तावो य एषोऽन्तर्हृदय आकाशः**" (தயோரேஷ ஸம்ஸ்தாவோ ய ஏஷோந்தர் ஹ்ருதய ஆகாச:) இவர்கள் இந்த சுலோகத்தில் காமேச்வரன் காமேச்வரி என்ற பெயர்களுடன் விளங்குகிறார்கள். இவர்கள் இருவருக்கும் விசேஷமான மன ஒற்றுமையுண்டு. இவர்களுடைய தேஜஸ்ஸிலிருந்து சந்த்ரனிடமிருந்து கிரணங்கள் கிளம்புவது போல் உலகம் வெளியாகிறது. இவர்களை தியானம் செய்வதால் ஜனங்களுடைய அந்தர் ஹ்ருதயத்தில் அநாதியாகக் குடிகொண்டிருக்கும் மூல அக்ஞானம் நாசமடைகிறது. '**हार्दसंतमसापहा**' என்று லலிதா த்ரிசதீ ஸ்தோத்திரத்தில் தேவி வர்ணிக்கப்பட்டிருக்கிறாள். பெண் சகோர பக்ஷி எப்படி இருட்டை ஸஹிக்க முடியாமல் சந்த்ரனுடைய குளிர்ச்சியான கிரணங்களை எதிர்பார்க்கிறதோ அதேமாதிரி எல்லா ஜனங்களும் தங்களுடைய அக்ஞானத்தைப் போக்கும் காமேச்வரன்—காமேச்வரி இவர்களுடைய அனுக்ரஹத்தை " நாடிநிற்கிறார்கள். **तमस्काण्डप्रौढिप्रकटन-तिरस्कारपटवे** " அக்ஞானம் என்னும் இருள் கூட்டத்தின் ஆடம்பரத் தோற்றத்தை முற்றிலும் அழிக்கும் வன்மையுள்ளவை தேவியின் பாதங்கள் என்று மூகபஞ்சசதியில் (பாதாரவிந்தசதகம் சு. 3) காணப்படுகிறது. (37)

(அ) அநாஹத சக்ரத்தில் காமேச்வரன்—காமேச்வரி இவர்களுடைய ஸல்லாபத்திலிருந்து எல்லாக் கலைகளும் உத்பத்தியாகின்றன —

समुन्मीलत्संवित्कमलमकरन्दैकरसिकं
भजे हंसद्वन्द्वं किमपि महतां मानसचरम् ।
यदालापादष्टादशगुणितविद्यापरिणति-
र्यदादत्ते दोषाद्गुणमखिलमद्भ्यः पय इव ॥ ३८ ॥

ஸமுந்மீலத் ஸம்வித் கமல மகரந்தைக ரஸிகம்
பஜே ஹம்ஸ த்வந்த்வம் கிமபி மஹதாம் மானஸசரம் ।
யதாலாபாத் அஷ்டாதச குணித வித்யா பரிணதி:
யதாதத்தே தோஷாத் குணமகிலம் அத்ப்ய: பய இவ ॥

**हे भगवति**-ஹே தாயே! **यदालापात्**-எந்த ஹம்ஸங்களின் பேச்சுக்களிலிருந்து, **अष्टादशगुणितविद्यापरिणतिः**-பதினெட்டு என்று கணக்கிடப்பட்ட வித்யைகளின் உத்பத்தியோ, **यत्**-எந்த ஹம்ஸத்வந்த்வம், **अद्भ्यः**-ஜலத்திலிருந்து, **पय इव**-பாலைப் பிரித்து எடுப்பதுபோல், **दोषात्**-தோஷத்திலிருந்து, **अखिलं गुणं**-எல்லா குணங்களையும், **आदत्ते**-எடுத்துக் கொள்கின்றதோ, **समुन्मीलत्**-நன்கு மலர்ந்த, **संवित्**-ஞானமென்ற, **कमलमकरन्द**-தாமரைப் புஷ்பத்தின் ரஸத்தை, **एकरसिकं**-ஏகபோகமாக ரஸிக்கிறதோ, **महतां** பெரியவர்களுடைய, **मानसचरं**-மனம் என்னும் மாநஸ ஸரஸ்ஸில் ஸஞ்சரிக்கிறதோ, **किमपि**-வாக்குக்கும் மனதுக்கும் எட்டாததான, **हंसद्वन्द्वं**-(அந்த) ஹம்ஸ தம்பதிகளை, **भजे**-பஜனம் செய்கிறேன்.

பன்னிரண்டு தளங்களோடு கூடின தாமரையைப் போன்ற அநாஹத சக்ரத்தில் சிவனும் தேவியும் இரு ஹம்ஸங்களாக பாவிக்கப்படுகிறார்கள். அவர்களுடைய ஸம்பாஷணையிலிருந்து பதினெட்டு வித்யைகளும் உத்பத்தியாகின்றன. அவர்கள் ஞானத்தின் உத்தம நிலையை யடைந்து ஆனந்தத்தில் அமிழ்ந்திருக்கிறார்கள். ஜீவ ப்ரம்ம ஐக்யம் என்னும் ஸாக்ஷாத்காரத்திலிருந்து ஏற்படும் ஆனந்தம் இதுதான். மஹாயோகிகள் இவர்களை தங்கள் ஹ்ருதயத்தில் வைத்து எப்பொழுதும் த்யானம் செய்கிறார்கள். 'முனி

மானஸ ஹம்ஸிகா' (मुनिमानसहंसिका) என்று லலிதா ஸஹஸ்ர நாமத்தில் தேவி வர்ணிக்கப்பட்டிருக்கிருள் தங்களை த்யானம் செய்யும் பக்தனுடைய தோஷங்களைத் தள்ளிவிட்டு அவனுடைய குணங்களைமட்டும் அவர்கள் க்ரஹிக்கிருர்கள். ஆகவே இந்த ஹம்ஸ தம்பதிகளை இடைவிடாமல் பஜனம் செய்வதால் ஸாதகர்களுக்கு "தத்வமஸி" (तत्वमसि) "அஹம் ப்ரஹ்மாஸ்மி" (अहं ब्रह्मास्मि) போன்ற மஹா வாக்கியங்களின் ஆந்தரார்த்தம் நன்ருக விளங்கும். இது ஹம்ஸ மந்திர மென்று லலிதா த்ரிசதியில் சொல்லப்படுகிறது. "ஹம்ஸ: ஸோஹம், ஸோஹம் ஹம்ஸ:" (हंसस्सोहं सोऽहं हंसः) என்பது மந்த்ரம். ஸம்வித்கமலம் அனுஹத சக்ரம். (38)

(அ) ஸ்வாதிஷ்டான சக்ரத்தில் காமேச்வரன்-காமேச்வரியை உபாஸித்தல் :—

तव स्वाधिष्ठाने हुतवहमधिष्ठाय निरतं
तमीडे संवर्तं जननि महतीं तां च समयाम् ।
यदालोके लोकान्दहति महति क्रोधकलिते
दयार्द्रा या दृष्टिः शिशिरमुपचारं रचयति ॥ ३९ ॥

தவ ஸ்வாதிஷ்டானே ஹுதவஹமதிஷ்டாய நிரதம்
தமீடே ஸம்வர்தம் ஜனனி மஹதீம் தாம் ச ஸமயாம் |
யதாலோகே லோகான் தஹதி மஹதி க்ரோத கலிதே
தயார்த்ரா யா த்ருஷ்டி: மிமிரமுபசாரம் ரசயதி ||

**हे जननि**—ஹே தாயே! **तव स्वाधिष्ठाने**-உன்னுடைய ஸ்வாதிஷ்டான சக்ரத்தில் உள்ள, **हुतवहं**-அக்னி தத்வத்தை, **अधिष्ठाय**-அவலம்பித்துக்கொண்டு **निरतं**-எப்பொழுதும் விளங்கிக் கொண்டிருக்கும், **तं**—அந்த, **संवर्तं**—ப்ரளயகால அக்னியையும் (காமேச்வரனையும்), **महतीं**—பெருமைவாய்ந்த, **तां च समयां**—ஸமயாசாரத்தில் போற்றப் படும் அந்த (காமேச்வரியையும்), **ईडे**-உபாஸனை செய்

கிறேன். यदालोके-எந்த காமேச்வரனுடைய பார்வையானது महति क्रोधकलिते (सति)-மிகுந்த கோபத்தையடைந்ததாக இருந்துகொண்டு, लोकान्-எல்லா லோகங்களையும், दहति (सति)-எரிக்கும்போது, या-எந்த, दयार्द्रा दृष्टिः-தயையுடன் கூடின பார்வையானது, शिशिरमुपचारं-சைத்யோபசாரத்தை, रचयति-செய்கிறதோ.

இதற்கு முந்தின ச்லோகத்தில் அநாஹத சக்ரத்தில் காமேச்வரனையும் காமேச்வரியையும் இரு ஹம்ஸங்களாக் பாவித்து உபாஸனை செய்யவேண்டுமென்று சொல்லப் பட்டது இந்த ச்லோகத்தில் ஸ்வாதிஷ்டானமென்ற எட்டு தள சக்ரத்தில் காமேச்வரனையும் காமேச்வரியையும் உபாஸிக்கவேண்டுமென்று சொல்லப்படுகிறது. ஸ்வாதிஷ்டானமென்பது அக்னி தத்வத்திற்கு உத்பத்தி ஸ்தானம். அக்னிஸ்வரூபமாக காமேச்வரன் விளங்குவதால் அவர் பிரளய கால அக்னி அல்லது ருத்ரன் எனப்படுகிறார். அவருக்குக் கோபம் ஏற்பட்டால் அவருடைய நெற்றிக் கண்ணிலிருந்து கிளம்பும் அக்னியானது ஸர்வலோகங்களையும சாம்பலாக்கி விடுகிறது. அப்பொழுது தேவி கருணை நிறைந்த தன் பார்வையினால் லோகங்களை உஜ்ஜீவிக்கும்படி செய்கிறாள். காமன் சிவனால் எரிக்கப்பட்ட பிறகு தேவியினுடைய கருணையால் பிழைத்தான் என்று லலிதா ஸஹஸ்ரநாமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. "ஹரநேத்ராக்நிஸந்தக்த காமஸஞ்ஜீவநௌஷதி:" (हरनेत्राग्निसन्दग्धकामसञ्जीवनौषधिः) (39)

(அ) மணிபூரக சக்ரத்தில் தேவியை மேக ரூபமாக த்யானம் செய்யவேண்டும் :—

तटित्त्वन्तं शक्त्या तिमिरपरिपन्थिस्फुरणया<br>
स्फुरन्नानारत्नाभरणपरिणद्धेन्द्रधनुषम् ।<br>
तव श्यामं मेघं कमपि मणिपूरैकशरणं<br>
निषेवे वर्षन्तं हरमिहिरतप्तं त्रिभुवनम् ॥ ४० ॥

தடித்வந்தம் ஶக்த்யா திமிர பரிபந்தி ஸ்புரணயா
ஸ்புரன் நாநா ரத்நாபரண பரிணத்தேந்த்ர தநுஷம் ।
தவ ச்யாமம் மேகம் கமபி மணிபூரைக ஶரணம்
நிஷேவே வர்ஷந்தம் ஹர மிஹிர தப்தம் த்ரிபுவநம் ॥

**हे भगवति** – ஹே தாயே! **तिमिरपरिपन्थिस्फुरणया**– இருட்டுக்குச்சத்ருவான வெளிச்சமாகிற, **शक्त्या**-சக்தியினுல், **तटित्वन्तं**–மின்னலோடு கூடினதாயும், **स्फुरन्नानारत्नाभरण**– ப்ரகாசிக்கும் அநேக ரத்னுபரணங்களால், **परिणद्ध**–கட்டப் பட்ட, **इन्द्रधनुषं**–வானவில்லோடு கூடினதாயும், **हरमिहिरतप्तं**- சிவன் என்னும் ஸூர்யனுல் பொசுக்கப்பட்ட, **त्रिभुवनं**- மூன்று லோகங்களையும், **वर्षन्तं**–குளிரச்செய்கிறதாயும், **मणि-पूरैकशरणं**–மணிபூரக சக்ரத்தையே இருப்பிடமாகக்கொண்ட தாயும், **कमपि**–வர்ணிக்க முடியாததுமான, **तव श्यामं मेघं**– நீல வர்ணமான உன் மேகஸ்வரூபமான சரீரத்தை, **निषेवे**– ஸேவிக்கிறேன்.

மணிபூரக சக்ரம் ஆறு தளத்துடன் கூடின தாமரை போன்றது. அது ஜலத்திற்கு ஆச்ரயம். அங்கு தேவி இருண்ட மேகம்போல் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிருள். மணிபூரகத்தில் ஸஹஜமாக உள்ள இருட்டைப் போக்கும் ப்ரகாசத்துடன் கூடியிருப்பதால் தேவியின் ஒளி அந்த மேகத்தில் தோன்றும் மின்னல் என்று உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது. தேவி ரத்னங்கள் இழைக்கப்பட்ட அநேக ஆபரணங்களை அணிந்து கொண்டிருக்கிருள். இவைகள் வானவில்லாக உத்ப்ரேக்ஷிக்கப்படுகின்றன. வர்ஷிப்பது மேகத்தின் ஸ்வபாவம். மூன்று லோகங்களும் காலாக்னி ருத்ரன் என்னும் ஸூர்யனுல் மிகவும் தாபத்தை அடைந்திருக்கிறது. தேவி என்னும் மேகத்தின் வர்ஷத்தால் தபித்துக்கொண்டிருக்கும் லோகங்கள் குளிர்ச்சியை அடைகின்றன. இதற்கு முந்தின சுலோகத்திலும் ஹரனுடைய கோபமென்னும் அக்னியினுல் எரிக்கப்பட்ட லோகங்களை தேவி தன் கடாக்ஷவர்ஷத்தால் உஜ்ஜீவிக்கும் படி செய்கிருள் என்று சொல்லப்பட்டது. (40)

(அ) மூலாதார சக்ரத்தில் சிவன், சக்தி இருவரும் தியானிக்கப்படவேண்டும் —

तवाधारे मूले सह समयया लास्यपरया
नवात्मानं मन्ये नवरसमहाताण्डवनटम् ।
उभाभ्यामेताभ्यामुदयविधिमुद्दिश्य दयया
सनाथाभ्यां जज्ञे जनकजननीमज्जगदिदम् ॥ ४१ ॥

தவாதாரே மூலே ஸஹ ஸமயயா லாஸ்ய பரயா
நவாத்மாநம் மந்யே நவரஸ மஹாதாண்டவ நடம்'
உபாப்யாம் ஏதாப்யாம் உதய விதிம் உத்திச்ய தயயா
ஸநாதாப்யாம் ஜக்ஞே ஜநக ஜநனீமத் ஜகதிதம் ॥

**हे भगवति**-ஹே தாயே! **तव**-உன்னுடைய, **मूले आधारे**-மூலாதார சக்ரத்தில், **नवरसमहाताण्डवनटं**-ஒன்பது ரஸங்களோடு கூடிய மஹாதாண்டவத்தைச் செய்யும், **नवात्मानं**-சிவனை, **लास्यपरया**-ந்ருத்யம் செய்வதில ஈடுபட்ட, **समयया सह**-ஸமயா என்ற தேவியுடன், **मन्ये**-த்யானம் செய்கிறேன். **एताभ्यां**-இந்த, **दयया सनाथाभ्यां**-கருணையால் ஒருவரோடொருவர் சேர்ந்துகொண்ட, **उभाभ्यां**-இருவர்கள் மூலமாக, **उदयविधिं**-மறுபடியும் ஸிருஷ்டியின் பிரகாரத்தை, **उद्दिश्य**-உத்தேசித்து, **इदं**-இந்த, **जगत्**-உலகமானது, **जनकजननीमत्**- தகப்பன், தாய் உள்ளதாக, **जज्ञे**-ஆனது.

மூலாதாரம் என்னும் சக்ரம் ஸுஷும்ஞ நாடியில் அடிபாகத்தில் நான்கு தளங்களோடு கூடின தாமரைபோல் உள்ளது. அது பிருதிவீ தத்வத்தின் இருப்பிடம். அங்கு இருந்துகொண்டு சிவனும் சக்தியும் நர்த்தனம செய்வதாகச் சொல்லப்படுகிறது. சிவனின் நர்த்தனத்திற்குத் தாண்டவம் என்றும் சக்தியின் ந்ருத்யத்திற்கு லாஸ்யம் என்றும் பெயர். அவர்களுடைய நர்த்தனம் ச்ருங்காரம் முதலிய நவரஸங்களையும் ப்ரகாசப்படுத்தக் கூடியதாக இருக்கிறது. அந்த நர்த்தனத்திலிருந்து ருத்ரனல் சாம்பலாக்கப்பட்ட ஜகத்தானது மறுபடியும் ஸ்ருஷ்டியாகிறது. ஆகவே மூலா

தாரத்தில் விளங்கும் சிவனும் சக்தியும் நர்த்தனத்தின் மூலம் உலகை புனர் ஸ்ருஷ்டி செய்து ஜகத்திற்கு தகப்பன தாய்போன்றவர்களாக ஆகிறார்கள்.

இருவருக்கும் இருப்பிடம் மூலாதாரம். நர்த்தனம் இருவருக்கும் பொதுவான அவஸ்தை. உலக ஸ்ருஷ்டி இருவருக்கும் பொதுவான காரியம். ரக்தவர்ணம் இருவருக்கும் பொதுவான ரூபம். சிவனுக்கு ' தடித்வான் ' என்றும் அம்பிகைக்கு ' தடித்வதீ ' என்றும் பெயர். இதில் ' தடித் ' என்பது இருவருக்கும் பொதுவான நாமம். அதிஷ்டானம், அவஸ்தை, அனுஷ்டானம், ரூபம், நாமம் என்னும் ஐந்துவித ஸாம்யம் இவர்கள் இருவருக்கும் உண்டு. சிவனுக்கும் சக்திக்கும் உள்ள ஸமப்ரதானம் சேஷசேஷிபாவம் என்று 34வது ச்லோகத்தில் சொல்லப்பட்டது. இந்த பாவத்துடன் அவர்களை த்யானம் செய்யவேணும்.'நவாத்மா' என்ற பதம் ஏற்கனவே 34வது ச்லோகத்தில் வந்தபோது விவரிக்கப் பட்டிருக்கிறது. சிவன் நவவ்யூஹ ஸ்வரூபியாகையால் ' நவாத்மா ' எனப்படுகிறார்.

**36–41:** இந்த ஆறுச்லோகங்களில் ஆக்ஞா சக்ரத்தி லிருந்து மூலாதாரம் வரையில் தேவியை உபாஸனை செய்ய வேண்டிய முறை சொல்லப்பட்டிருக்கிறது இது அவரோ ஹணக்ரமம். மூலாதாரத்தில் உறங்கிக்கொண்டிருக்கும் குண்டலினி சக்தியைத் தகுந்த ஸாதனங்களால் எழுப்பி படிப்படியாக மேல் சக்ரங்களுக்கு கொண்டுபோய் கடைசி யில் ஸஹஸ்ரார கமலத்தில் உபாஸகன் தேவியுடன் தன்னை ஐக்யானுஸந்தானம் செய்துகொண்டு பரமானந்தத்தை அடைவதுதான் முக்ய பலன். உபாஸனையை மூலாதாரத்தி லிருந்து படிப்படியாக உயர்த்திக்கொண்டு போகாமல் ஆக்ஞா சக்ரத்தில் ஆரம்பித்து படிப்படியாக கீழே இறக்கிக் கொண்டு வந்திருப்பதற்கு காரணம் ச்ருதியை யனுஸரிக்க வேண்டுமென்னும் எண்ணம்தான். தைத்திரீய உபநிஷத் தில் "**तस्माद्वा एतस्मादात्मनः आकाशः संभूतः आकाशाद्वायुः**" (தஸ்மாத்வா ஏதஸ்மாத் ஆத்மந: ஆகாச:ஸம்பூத ஆகாசாத் வாயு:) என்று ஆகாசத்தில் ஆரம்பித்து பிருத்வி வரையில்

சொல்லப்பட்டிருக்கிறது. இதை யனுஸரித்துத்தான் மணி பூரகத்தை மூலாதாரத்திற்குமேல் இருப்பதாக 9வது ச்லோ கத்தில் சொல்லியிருக்கிறது. (41)

(அ) இனி தேவியின் கேசாதி பாதாந்த வர்ணனை ஆரம்பமாகிறது. முதலில் தேவியின் கிரீடம் :—

गतैर्माणिक्यत्वं गगनमणिभिः सान्द्रघटितं
किरीटं ते हैमं हिमगिरिसुते कीर्तयति यः ।
स नीडेयच्छायाच्छुरणशबलं चन्द्रशकलं
धनुः शौनासीरं किमिति न निबध्नाति धिषणाम् ॥

கதை: மாணிக்யத்வம் ககநமணிபி: ஸாந்த்ர கடிதம்
கிரீடம் தே ஹைமம் ஹிம கிரிஸுதே கீர்தயதி ய: ।
ஸ நீடேயச்சாயா ச்சுரண ஶபலம் சந்த்ர ஶகலம்
தனு: ஶௌநாஸீரம் கிமிதி ந நிபத்நாதி திஷணாம் ॥

**हे हिमगिरिसुते**-ஹே பர்வத ராஜகுமாரி, **माणिक्यत्वं गतैः**-ரத்னங்களாக மாறின, **गगनमणिभिः**–த்வாதச(பன்னிரண்டு) ஆதித்யர்களால், **सान्द्रघटितं**-நெருக்கமாக கட்டப்பட்ட, **ते हैमं किरीटं**-உன் தங்கமயமான கிரீடத்தை, **यः कीर्तयति**-எவன் வர்ணிக்கிருனோ, **सः**–அவன், **नीडेय**-ஸந்திகளில் இழைக்கப்பட்ட ரத்னங்களின், **छायाच्छुरण**-சோபையின் சேர்க்கையால், **शबलं**–பல நிறம் உள்ளதாகக் காணப்படும், **चन्द्रशकलं**-சந்த்ரரேகை, **शौनासीरं धनुः इति**-இந்த்ரவில் என்று, **धिषणां**–புத்தியை, **किं न निबध्नाति**-தீர்மானம் செய்துகொள்ள மாட்டானு ?

தேவியின் கிரீடத்தில் இழைக்கப்பட்டிருக்கும் ரத்னங் கள் அதிகமான சோபையுள்ளவைகளாதலால் த்வாதச ஆதித்யர்கள் ரத்னங்களாக மாறி அங்கு வந்து அமைந் திருக்கிருர்கள் என்று சொல்லப்படுகிறது. தேவியின் சிரஸில் சந்த்ரகலையும் இருக்கிறது. தங்கமயமான கிரீடம்

அதில் நெருக்கமாக இழைக்கப்பட்டிருக்கும் ரத்னங்கள். இவைகளின் சோபை சந்த்ரகலையின்மேல படுவதால் வெளுப்பாயிருக்கும் சந்த்ரகலை விசித்திர வர்ணமுள்ள தாக மாறுகிறது. ஆகவே அது இந்த்ர தனுஸ்போல தோன்றுகிறது. உத்ப்ரேக்ஷாலங்காரம். (42)

(அ) தேவியின் கேசம் ஸஹஜமான ஸுகந்தமுள்ளது:

धुनोतु ध्वान्तं नस्तुलितदलितेन्दीवरवनं
घनस्निग्धश्लक्ष्णं चिकुरनिकुरुम्बं तव शिवे ।
यदीयं सौरभ्यं सहजमुपलब्धुं सुमनसो
वसन्त्यस्मिन्मन्ये बलमथनवाटीविटपिनाम् ॥ ४३ ॥

துநோது த்வாந்தம் ந: துலித தளிதேந்தீவர வனம்
கந ஸ்நிக்த ச்லக்ஷ்ணம் சிகுர நிகுரும்பம் தவ ஶிவே।
யதீயம் ஸௌரப்யம் ஸஹஜமுபலப்தும் ஸுமனஸோ
வஸந்த்யஸ்மின் மந்யே வலமதந வாடீ விடபிநாம் ||

**हे शिवे**-ஹே பராசக்தியே! **घनस्निग्धश्लक्ष्णं**-அடர்த்தியாயும் பசையுள்ளதாயும் மிருதுவாயும் உள்ள, **तुलितदलितेन्दीवरवनं**-நன்ருக மலர்ந்த நீலோத்பல புஷ்பக் குவியலை யொத்த, **तव चिकुरनिकुरुम्बं**-உன் கேச ஸமூஹமானது, **नः**-எங்களுடைய, **ध्वान्तं**-அக்ஞானத்தை, **धुनोतु**-போக்கட்டும். **यदीयं सहजं सौरभ्यं**-எவைகளின் இயற்கையான வாஸனையை, **उपलब्धुं**-அடைவதற்காக, **वलमथनवाटीविटपिनां**-இந்த்ரனுடைய நந்தனவனத்தில் விளங்கும் கல்பவ்ருக்ஷங்களின், **सुमनसः**-புஷ்பங்கள், **अस्मिन्**-இந்த (உன் கேசங்களில்) **वसन्ति**-வாஸம் செய்கின்றன (என்று) **मन्ये**-எண்ணுகிறேன்.

தேவியின் கேசங்கள் இயற்கையாகவே நறுமண முடையவை. அந்த ஸுகந்தத்தை அடையவேணும் என்ற எண்ணத்துடன் கல்பவ்ருக்ஷத்தின் புஷ்பங்கள் வந்து தேவியின் கேசங்களில் தங்குகின்றனவோ என்று உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது. புஷ்பங்களின் சேர்க்கை

யினால் தேவியின் கேசங்களுக்கு ஸுகந்தம் ஏற்படுவதில்லை. இயற்கையாகவே தேவியின் கேசங்கள் ஸுகந்தமுள்ளவை என்பது தாத்பர்யம் இதே அபிப்பிராயத்தை "**केशोद्भूतैरद्भुतामोदपूरैराशावृन्दं सान्द्रमापूरयन्तीं**" (கேசோத்பூதைரத்புதாமோதபூரைராசாப்ருந்தம் ஸாந்த்ரமாபூரயந்தீம்) என்று த்ரிபுரஸுந்தரீ வேதபாதஸ்தோத்திரத்தில் (சு. 22) சொல்லியிருக்கிறார். *(43)*

(அ) தேவியின் ஸீமந்தம் வகுடு வர்ணிக்கப்படுகிறது:—

**तनोतु क्षेमं नस्तव वदनसौन्दर्यलहरी-**
**परीवाहस्रोतःसरणिरिव सीमन्तसरणिः ।**
**वहन्ती सिन्दूरं प्रबलकबरीभारतिमिर-**
**द्विषां वृन्दैर्बन्दीकृतमिव नवीनार्ककिरणम् ॥ ४४ ॥**

தநோது க்ஷேமம் நஸ்தவ வதந ஸௌந்தர்ய லஹரீ-
பரீவாஹ ஸ்ரோத: ஸரணிரிவ ஸீமந்த ஸரணி: ।
வஹந்தீ ஸிந்தூரம் ப்ரபல கபரீ பார திமிர-
த்விஷாம் வ்ருந்தை: பந்தீக்ருதமிவ நவீநார்க கிரணம் ॥

**हे भगवति**-ஹே தாயே! **वदनसौन्दर्यलहरीपरीवाहस्रोतःसरणिरिव**-முகத்தின் அழகு ப்ரவாஹப் பெருக்கின் போக்கு மார்க்கம்போல் இருக்கிறதாயும், **प्रबलकबरीभारतिमिरद्विषां वृन्दैः**-அதிகமான கேச பாசங்களாகிய இருட்டு ரூபமான விரோதிகளின் கூட்டங்களால், **वन्दीकृतं**-சிறையில் அடைக்கப்பட்ட, **नवीनार्ककिरणमिव**-உதயஸூர்யனின் கிரணம் போல் இருக்கிற, **सिन्दूरं**-குங்குமத்தை, **वहन्ती** - தரித்துக் கொண்டிருக்கிறதுமான, **तव सीमन्तसरणिः**-உன்னுடைய வகுடு மார்க்கமானது, **नः**-எங்களுடைய, **क्षेमं**-யோக க்ஷேமத்தை, **तनोतु**-கொடுக்கட்டும்.

தேவியின் வகுடு முகத்தின் அதிகமான அழகு வழிந்து ஓடுவதற்காக ஏற்பட்ட ஒரு வாய்க்கால் என்று

உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறது. வகுடின் இரு பக்கங்களிலும் அடர்த்தியாகவும் இருண்டதாகவும் உள்ளன கேச பாசங்கள் இவைகளுக்கு மத்தியில் சிவப்பாய் பிரகாசித்துக் கொண்டிருக்கும் குங்குமப் பொட்டு சிறையில் அடைக்கப் பட்ட பாலஸூர்ய கிரணம்போல் இருக்கிறது. இதேமாதிரி த்ரிபுரஸுந்தரீ மானஸபூஜா ஸ்தோத்திரத் திலும் (சு. 42) சொல்லப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது. "त्वामाश्रयद्भिः कबरीतमिस्रैः बन्दीकृतं द्रागिव भानुबिम्बम्" "த்வாம் ஆச்ரயத்பி: கபரீதமிஸ்ரைர் பந்தீக்ருதம் த்ராகிவ பாநுபிம்பம்" அத்தகைய ஸீமந்த ஸரணியை த்யானம் செய்தால் நம்முடைய யோகக்ஷேமத்தை தேவி கவனிப்பாள் என்பது தாத்பர்யம். அடர்த்தியான கேசபாசங்களின் மத்தியில் வகுக்கப்பட்டிருக்கும் வகுடு முகத்தின் அதிகமான அழகு வழிந்து ஓடுவதற்காக ஏற்பட்ட வாய்க்கால் என்பது சிறந்த உத்ப்ரேக்ஷை. (44)

(அ) தேவியின் முகத்தின் அழகு வர்ணிக்கப் படுகிறது —

अरालैः स्वाभाव्यादलिकलभसश्रीभिरलकैः
परीतं ते वक्त्रं परिहसति पङ्केरुहरुचिम् ।
दरस्मेरे यस्मिन् दशनरुचिकिञ्जल्करुचिरे
सुगन्धौ माद्यन्ति स्मरदहनचक्षुर्मधुलिहः ॥ ४५ ॥

அராளை: ஸ்வாபாவ்யாத் அளிகலபஸ ஸ்ரீபிரலகை:
பரீதம் தே வக்த்ரம் பரிஹஸதி பங்கேருஹ ருசிம் ।
தரஸ்மேரே யஸ்மின் தசநருசி கிஞ்ஜல்க ருசிரே
ஸுகந்தௌ மாத்யந்தி ஸ்மரதஹந சக்ஷுர்மது லிஹ: ॥

हे भगवति—ஹே தாயே! स्वाभाव्यात् अरालैः—இயற்கை யாகவே சுருட்டையாயுள்ள, अलिकलभसश्रीभिः—குட்டி வண்டு களின் சோபையோல் காந்தி உள்ள, अलकैः—நெற்றி மயிர் களால், परीतं—சூழப்பட்ட, ते वक्त्रं—உன் முகமானது, पङ्केरुहरुचिं—தாமரையின் அழகை, परिहसति—பரிஹாஸம்

செய்கிறது. दरस्मेरे-புன் சிரிப்புடன் கூடியதாயும், दशनरुचिकिञ्जल्करुचिरे – பற்களின் காந்திகளாகிற கேஸரங்களால் அழகு பெற்றதாயும், सुगन्धौ-வாஸனையோடுகூடியதாயுமுள்ள, यस्मिन् – எந்த முகத்தில் स्मरदहनचक्षुर्मधुलिहः-மன்மதனை எரித்த சிவனுடைய கண்கள் என்கிற தேனீக்கள், माद्यन्ति-ஆனந்தத்தையடைகின்றனவோ!

தேவியின் முகத்திற்கு தாமரைப் புஷ்பம் உபமானமாக சொல்லப்படுகிறது. தாமரை சற்று மலர்ந்திருப்பதுபோல் தேவியின் முகம் புன் சிரிப்புடன் கூடியிருக்கிறது. தாமரையின் மத்யபாகத்தில் கிஞ்ஜல்கங்கள் இருப்பதுபோல் தேவியின் பற்களின் காந்தி முகத்திற்கு கிஞ்ஜல்கங்கள் போல் விளங்குகிறது. தாமரையிலுள்ள மதுவை அருந்த தேனீக்கள் வந்து மோதுவதுபோல் சிவனுடைய கண்கள் தேவியின் முகத்திலுள்ள அழகில் ஈடுபடுகின்றன. எனவே மன்மதனை எரித்த பரமசிவன் கடைசியில் மன்மதனால் ஜயிக்கப்படுகிறார். தேவியின் முகத்தினுடைய அழகு மன்மதனை எரித்த சிவனையும் வசப்படுத்துகிறது. ஆகவே தாமரைப்புஷ்பத்தின் அழகைவிட தேவியின் முகலாவண்யம் அதிகமானது என்பது மொத்த தாத்பர்யம். (45)

தேவியின் நெற்றி அழகு வர்ணிக்கப்படுகிறது —

ललाटं लावण्यद्युतिविमलमाभाति तव यत्
द्वितीयं तन्मन्ये मकुटघटितं चन्द्रशकलम् ।
विपर्यासन्यासादुभयमपि संभूय च मिथः
सुधालेपस्यूतिः परिणमति राकाहिमकरः ॥ ४६ ॥

லலாடம் லாவண்ய த்யுதி விமலம் ஆபாதி தவ யத்
த்விதீயம் தன்மந்யே மகுட கடிதம் சந்த்ர ஶகலம் ।
விபர்யாஸ ந்யாஸாத் உபயமபி ஸம்பூய ச மித:
ஸுதாலேப ஸ்யூதி: பரிணமதி ராகா ஹிமகர: ॥

हे भगवति-ஹே தாயே! तव-உன்னுடைய, यत् –எந்த ललाटं – நெற்றியானது लावण्यद्युतिविमलं-சோபை என்கிற

நிலவினால் அழகுபெற்று, **आभाति**-பிரகாசிக்கிறதோ, **तत्**-அதை, **मकुटघटितं**-கிரீடத்தில் கட்டப்பட்ட, **द्वितीयं चन्द्रशकलं**-இரண்டாவதான சந்த்ரகலை என்று, **मन्ये**-எண்ணுகிறேன். **यस्मात्**-எந்த காரணத்தால், **उभयमपि**-இரண்டும், **विपर्यासन्यासात्**- திருப்பிவைக்கப்படுவதினால், **मिथः संभूय**-ஒன்றாகச் சேர்ந்து, **सुधालेपस्यूतिः**-அம்ருத ரஸத்தோடு கூடின, **राकाहिमकरः**-பூர்ண சந்த்ரனாக, **परिणमति**-ஆகிறதோ !

தேவியின் நெற்றியை கீழ்முகமாக இருக்கும் அர்த்த சந்த்ரனாகவும் தேவியின் தலையின்மேல் இருக்கும் கிரீடத்தை மேல் முகமாக இருக்கும் அர்த்த சந்த்ரனாகவும் உத்ப்ரேக்ஷை செய்கிறார். இவை இரண்டையும் மாற்றி கிரீடம் என்கிற அர்த்த சந்த்ரனை கீழ்முகமாகவும் லலாடம் என்கிற அர்த்த சந்த்ரனை மேல் முகமாகவும் திருப்பிவைத்தால் இரண்டும் சேர்ந்து பூர்ண சந்த்ரனாக விளங்கும். நெற்றி என்கிற சந்திரனின் அழகு கிரீடம் என்கிற சந்திரனின் அழகைவிட மிகச்சிறந்தது என்பதை ஸூசனையாக காண்பிப்பதற்குத் தான் இரண்டும் ஒன்றோடு ஒன்று ஒட்டாமல் விபர்யாஸமாக வைக்கப்பட்டிருக்கிறதென்று சொல்லியிருக்கிறார். (46)

தேவியின் இருபுருவங்களும் வர்ணிக்கப்படுகின்றன:—

भ्रुवौ भुग्ने किंचिद्भुवनभयभङ्गव्यसनिनि
त्वदीये नेत्राभ्यां मधुकररुचिभ्यां धृतगुणम् ।
धनुर्मन्ये सव्येतरकरगृहीतं रतिपतेः
प्रकोष्ठे मुष्टौ च स्थगयति निगूढान्तरमुमे ॥ ४७ ॥

ப்ருவௌ புக்நே கிஞ்சித் புவன பய பங்க வ்யஸனினி
த்வதீயே நேத்ராப்யாம் மதுகர ருசிப்யாம் த்ருதகுணம் ।
தநுர் மன்யே ஸவ்யேதர கர க்ருஹீதம் ரதிபதே:
ப்ரகோஷ்டே முஷ்டௌ ச ஸ்தகயதி நிகூடாந்தரமுமே ॥

**हे उमे**-ஹே பார்வதியே ! **भुवनभयभङ्गव्यसनिनि**-உலகிற்கு ஏற்படும் விபத்தைத் தடுப்பதில் சிரத்தை கொண்டவளே !

**त्वदीये** - உன்னுடையதான, **किंचिद् भुग्ने**-சிறிது வளைந்த, **भ्रुवौ**-புருவங்கள், **मधुकररुचिभ्यां** - தேனீக்களுடைய சோபையைப்போன்ற காந்தியோடு கூடின, **नेत्राभ्यां**-இரண்டு கண்களால், **धृतगुणं**-கட்டப்பட்ட ஞாண்கயிற்றேடு கூடின தாயும், **रतिपतेः**-மன்மதனுடைய, **सव्येतरकरगृहीतं**-இடது கையில் பிடிக்கப்பட்டதாயும், **प्रकोष्ठे मुष्टौ च**-(ஆகையால்) கை மணிக்கட்டும் விரல்களும், **स्थगयति (सति)**-மறைத்துக் கொண்டிருக்கும்போது, **निगूढान्तरं**-மறைந்திருக்கும் மத்ய பாகத்தையுடையதுமான, **धनुर्मन्ये** - வில்லாக எண்ணு கிறேன்.

தேவியின் இரு புருவங்களும் நுனி பாகத்தில் வளைந்து இருப்பதால் வில்லாகவும், இருகண்களும் ஒரே ஞாண்கயிரு கவும் உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது. இந்த வில்லை மன்மதன் இடது கையில் பிடித்துக் கொண்டிருப்பதால் வில்லின் மத்யபாகமும் ஞாண்கயிரின் மத்யபாகமும் மறைந் திருக்கின்றன. இருபுருவங்களுக்கும் நடுவில் ப்ரூ மத்ய பாகம் இருக்கிறது. இரு கண்களுக்கும் மத்தியில் மூக்கின் அடிபாகம் இருக்கிறது. இதை, வில்லின் மத்யபாகம் மன்மதனுடைய கைபிடிப்பால் மறைக்கப்பட்டிருக்கிற பாக மென்றும், கண்களுக்கு மத்தியில் இருக்கும் பிரதேசத்தை மன்மதனின் கைவிரல்களால் மறைக்கப்பட்டிருக்கும் ஞாண் கயிரின் நடுபாகமென்றும் உத்ப்ரேக்ஷை செய்கிருர். புரு வங்கள் மன்மதனுடைய வில்லாக உத்ப்ரேக்ஷை செய்யப் படுவதால் அவைகள் மிகவும் அழகானவை என்று வ்யங்க்யமாகச் சொல்லப்படுகிறது லோகத்தின் க்ஷேமத்தை உத்தேசித்து புருவங்கள் கீழ்நோக்கி இருக்கின்றனவோ என்னும் உத்ப்ரேக்ஷை மிகவும் நுட்பமானது. (47)

(அ) தேவியின் மூன்று கண்கள் :—

**अहः सूते सव्यं तव नयनमर्कात्मकतया**
**त्रियामां वामं ते सृजति रजनीनायकतया ।**

तृतीया ते दृष्टिर्दरदलितहेमाम्बुजरुचिः
समाधत्ते सन्ध्यां दिवसनिशयोरन्तरचरीम् ॥ ४८ ॥

அஹ: ஸூதே ஸவ்யம் தவ நயந மர்காத்மகதயா
த்ரியாமாம் வாமம் தே ஸ்ருஜதி ரஜனீ நாயகதயா ।
த்ருதீயா தே த்ருஷ்டி: தரதளித ஹேமாம்புஜ ருசி:
ஸமாத்ததே ஸந்த்யாம் திவஸ நிஶயோரந்தரசரீம் ॥

**हे भगवति**–ஹே தாயே! **तव सव्यं नयनं**–உன் வலது கண், **अर्कात्मकतया**–ஸூர்ய ஸ்வரூபமாகையால், **अहः**–பகலை, **सूते** – உண்டுபண்ணுகிறது. **ते वामं(नयनं)** – உன் இடது கண், **रजनीनायकतया**–சந்த்ர ஸ்வரூபமானபடியால், **त्रियामां**-இரவை, **सृजति**–உண்டுபண்ணுகிறது. **ते तृतीया दृष्टिः**–உன் மூன்ருவது கண், **दरदलितहेमांबुजरुचिः**–சிறிது மலர்ந்த பொற்ருமரையின் சோபையைப் போன்ற காந்தியுள்ளதாய், **दिवसनिशयोः** – பகலுக்கும் இரவுக்கும், **अन्तरचरीं**–மத்தியில் நடக்கும், **सन्ध्यां**–ஸந்த்யா காலத்தை, **समाधत्ते** – உண்டு பண்ணுகிறது.

சிவன் சக்தியில் அடங்கினபடியால் சிவனுக்கு மூன்று கண்கள் இருப்பதுபோல் தேவிக்கும் மூன்று கண்கள் இருப்பதாகவும், வலது கண்ணுல் பகலையும், இடது கண்ணுல் இரவையும், மூன்ருவது கண்ணுல் ஸந்த்யா காலங்களையும் தேவி ஸ்ருஷ்டிப்பதாகவும் சொல்லப்படுகிறது. பகல், இரவு, ஸந்த்யாகாலமென்பது எல்லாக் காலத்திற்கும் உபலக்ஷணம் காலத்திற்கே தேவி காரணமானதிஞல் கால பரிச்சேதங்களுக்கு தேவி உட்பட்டவளல்ல ஆகவே தேவிக்கு பிறப்பும் இறப்பும் கிடையாது. நித்யமாயுள்ளவள் என்று தாத்பர்யம்.

**"अत्र सूर्यचन्द्राग्न्यात्मकनयनत्रयेण भगवत्याः अवयवविशेषणेन दिवस निशा सन्ध्यात्मक कालत्रयोपलक्षित पक्ष मासर्तु युग कल्पादि-कालोत्पत्तिकथनात् भगवत्याः कालावच्छेद्यत्वं दूरत एव अपास्तमिति ध्वन्यते"** என்று லக்ஷ்மீதர வ்யாக்யானத்தில் காணப்படுகிறது. (48)

(அ) தேவியின் எட்டுவித பார்வை வர்ணிக்கப் படுகிறது —

**विशाला कल्याणी स्फुटरुचिरयोध्या कुवलयैः**
**कृपाधाराधारा किमपि मधुराभोगवतिका ।**
**अवन्ती दृष्टिस्ते बहुनगरविस्तारविजया**
**ध्रुवं तत्तन्नामव्यवहरणयोग्या विजयते ॥ ४९ ॥**

*விஶாலா கல்யாணீ ஸ்புட-ருசி ரயோத்யா குவலயை:*
*க்ருபா தாரா தாரா கிமபி மதுராபோகவதிகா ।*
*அவந்தீ த்ருஷ்டிஸ்தே பஹு-நகர விஸ்தார விஜயா*
*த்ருவம் தத்தந்நாம வ்யவஹரண யோக்யா விஜயதே ॥*

**हे भगवति**-ஹே தாயே! **ते दृष्टिः**-உன் கண்ணானது, **विशाला**-விசாலமாயும், **कल्याणी**-மங்களகரமாயும், **स्फुटरुचिः**-தெளிவாக பிரகாசிக்கிறதாயும், **कुवलयैः अयोध्या**-குவலய புஷ்பங்களால் ஜயிக்கப்படாததாயும், **कृपाधाराधारा**-கருணைப் பிரவாஹத்திற்கு ஆதாரமாயும்; **किमपि मधुरा**- இவ்வித மென்று சொலலமுடியாத ரீதியில் அழகாயும், **आभोगवतिका**-நீளமுள்ளதாயும், **अवन्ती**-காப்பாற்றுகிறதாயும், **बहुनगर-विस्तारविजया**-அநேக நகரங்கள்போல் விஸ்தாரமாக விளங்குகிறதாயும், **तत्तन्नामव्यवहरणयोग्या**-அந்தந்த நகரத்தின் பெயரால் சொல்லக்கூடியதாயும், **ध्रुवं विजयते**-நிச்சயமாக விளங்குகிறது.

ஸ்த்ரீகளின் பார்வையில் எட்டுவித பிரிவுகள் உண்டு. தேவியின்கண்களில் இவை விசேஷமாக காணப்படுகின்றன. விசாலா, கல்யாணீ, அயோத்யா, தாரா, மதுரா, போகவதீ, அவந்தீ, விஜயா என்று இவைகளுக்குப் பெயர். விசாலா என்பது உள்ளுக்குள் மலர்ந்தது, கல்யாணீ என்பது ஆச்சர்யத்துடன் கூடியது, அயோத்யா என்பது நன்கு மலர்ந்த பார்வை, தாரா என்பது ஆலஸ்யத்தைக் காட்டுவது, மதுரா என்பது ஸஞ்சலமான பார்வை, போகவதீ என்பது ஸ்நேஹத்தைக் காட்டுவது, அவந்தீ என்பது மயங்கிய

பார்வை, விஜயா பாதி மூடியபார்வை இதற்கு 'ஆகேகரம்' என்று பெயர். கனகதாரா ஸ்தோத்திரத்தில் "ஆகேகர ஸ்தித கனீனிக பக்ஷ்மநேத்ரம்" (**आकेकरस्थितकनीनिक-पक्ष्मनेत्रं**) என்று சொல்லப்படுகிறது. இவைகளை ஸம்க்ஷோபணம், ஆகர்ஷணம், த்ராவணம், உந்மாதனம், வச்யம் உச்சாடனம், வித்வேஷணம், மாரணம் என்ற கர்மாக்களில் எந்தெந்த ப்ரதேசங்களில் நின்றுகொண்டு தேவி பிரயோகம் செய்தாளோ அந்தந்த ப்ரதேசங்களுக்கு விசாலா, கல்யாணீ, அயோத்தி, தாரை, மதுரை, போகவதி, அவந்தி, விஜயா என்ற பெயர்கள் ஏற்பட்டன. .(49)

(அ) ஐம்பத்தேழாவது சுலோகம் வரை தேவியின் நீண்ட கண்கள் வர்ணிக்கப்படுகின்றன: —

**कवीनां सन्दर्भस्तबकमकरन्दैकरसिकं**
**कटाक्षव्याक्षेपभ्रमरकलभौ कर्णयुगलम् ।**
**अमुञ्चन्तौ दृष्ट्वा तव नवरसास्वादतरला-**
**वसूयासंसर्गादलिकनयनं किंचिदरुणम् ॥ ५० ॥**

கவீநாம் ஸந்தர்ப ஸ்தபக மகரந்தைகரஸிகம்
கடாக்ஷ வ்யாக்ஷேப ப்ரமர கலபௌ கர்ணயுகளம் ।
அமுஞ்சந்தௌ த்ருஷ்ட்வா தவ நவ ரஸாஸ்வாத தரளா
வஸூயா ஸம்ஸர்காத் அளிக நயனம் கிஞ்சிதருணம் ॥

**हे भगवति**-ஹே பகவதி! **कवीनां** – புலவர்களுடைய, **संदर्भस्तबकमकरन्दैकरसिकं** – காவ்யங்களாகிய பூங்கொத்தில் உள்ள தேனை அருந்துவதில் தீவிர ஆசைகொண்ட, **तव कर्णयुगलं**-உனது இரண்டு காதுகளையும், **अमुञ्चन्तौ**-விட்டுப் பிரியாமலிருக்கிற, **नवरसास्वादतरलौ**-ஒன்பது ரஸங்களையும் அனுபவிப்பதில் இச்சைகொண்ட, **कटाक्षव्याक्षेपभ्रमरकलभौ**-கடாக்ஷம் என்னும் நிமித்தத்தால் குட்டி வண்டுகள்போல் தோன்றுகிற இரு கண்களை, **दृष्ट्वा**-பார்த்து, **अलिकनयनं**-நெற்றிக் கண்ணானது, **असूयासंसर्गात्** – பொறாமையினால், **किंचित्** – சிறிது, **अरुणं**-சிவப்பாக ஆகிறது.

கவிகள் தேவியின் மாஹாத்மியத்தைக் காவ்யங்களில் வர்ணிக்கிறார்கள். அந்த வர்ணனை தேன்போல் இனிப்பாக இருக்கிறது. காதுகளால் அம்பிகை அதைக் கேட்கிறாள். தேவியின் கருவிழிகள் குட்டி வண்டுகள்போல இருக்கின்றன. இந்த வண்டுகளும் அந்தத் தேனைச் சிறிது அருந்த வேண்டும் என்ற எண்ணம் கொண்டு காதுகளை எட்டிப் பிடிக்கின்றன. தேவியின் நெற்றியிலிருக்கும் அக்னிரூபமான மூன்றாவது கண்ணுக்கு இந்த லாபம் கிடைக்காததினால அது பொறாமையினால் சிறிது சிவந்து இருக்கிறதோ என்று உத்ப்ரேக்ஷை செய்கிறார். தேவியின் கண்கள் காதுவரை நீண்டு இருக்கின்றன என்பது முக்கிய தாத்பர்யம். (50)

शिवे शृङ्गाराद्रा तदितरजने कुत्सनपरा
सरोषा गङ्गायां गिरिशनयने विस्मयवती ।
हराहिभ्यो भीता सरसिरुहसौभाग्यजननी
सखीषु स्मेरा ते मयि जननि दृष्टिः सकरुणा ॥

ஶிவே ச்ருங்காரார்த்ரா ததிதரஜனே குத்ஸனபரா
ஸரோஷா கங்காயாம் கிரிஶநயனே விஸ்மயவதீ ।
ஹராஹிப்யோ பீதா ஸரஸிருஹ ஸௌபாக்ய ஜனனீ
ஸகீஷு ஸ்மேரா தே மயி ஜனனி த்ருஷ்டி: ஸகருணா ॥

**हे जननि**-ஹே தாயே! **ते दृष्टिः**-உன் பார்வையானது, **शिवे**-ஸதாசிவனிடத்தில், **शृङ्गाराद्रा**-சிருங்கார ரஸத்தினால் நனைந்ததாயும், **तदितरजने**அவரைத்தவிற வேறு மனிதர்களிடத்தில், **कुत्सनपरा**-பீபத்ஸ ரஸத்துடன்கூடினதாயும், **गङ्गायां**-கங்கையினிடத்தில், **सरोषा**-கோபத்துடன் கூடினதாயும், **गिरिशनयने**-சிவனுடைய நெற்றிக் கண்ணிடத்தில், **विस्मयवती**-அத்புத ரஸத்துடன் கூடினதாயும், **हराहिभ्यः**-சிவன் தரித்துக் கொண்டிருக்கிற பாம்புகளிடமிருந்து. **भीता**-பயத்துடன் கூடியதாயும், **सरसिरुहसौभाग्यजननी**-தாமரைப் புஷ்பத்தின் சிவப்புக்குக் காரணமாயும், **सखीषु**-

தோழிகளிடம், **स्मेरा**–ஹாஸ்ய ரஸத்துடன் கூடியதாயும், **मयि**–என்னிடத்தில், **सकरुणा**–கருணையுடன் கூடினதாயும் (இருக்கிறது).

தேவியின் பார்வையில் எட்டு ரஸங்கள் நிரம்பியிருக்கின்றன. தன் பர்த்தாவாகிய ஸதாசிவனைப் பார்க்கும்போது சிருங்கார ரஸமும், இதர ஜனங்களைப்பார்க்கும்போது பீபத்ஸமும், ஸபத்னியான கங்கையைப் பார்க்கும்போது ரௌத்ர ரஸமும், மன்மதனை எரித்த பரமசிவனின் நெற்றிக் கண்ணைப் பார்க்கும்போது அத்புத ரஸமும், சிவன் அலங்காரமாகப் போட்டுக்கொண்டிருக்கும் பாம்புகளைப் பார்க்கும்போது பயானகம் என்னும் ரஸமும், கண்களில் உள்ள சிவப்பு நிறத்தால் வீரரஸமும், தன் தோழிகளைப் பார்க்கும் போது ஹாஸ்யரஸமும், தன பக்தர்களைப்பார்க்கும் போது கருணாரஸமும் காணப்படுகின்றன. சாந்தத்தில் மனோவிகாரம் ஏற்படுவதில்லை என்ற காரணத்தைக்கொண்டு அதை ஒரு ரஸமாகச் சில ஆலங்காரிகர்கள் ஒப்புக்கொள்வதில்லை. " **विक्रियाजनका एव रसा इति अष्टौ रसाः भरतमते शान्तस्य निर्विकारत्वान्न शान्तं मेनिरे रसम्** " என்று லக்ஷ்மீதர வ்யாக்யானத்தில் காணப்படுகிறது. 'கிரிசநயனே' (**गिरिशनयने**) என்பதற்கு பதிலாக 'கிரிசசரிதே' (**गिरिशचरिते**) என்னும் பாடாந்தரம் சில ப்ரதிகளில் காணப்படுகிறது. அதை அனுஸரித்தால் சிவன் செய்த த்ரிபுராஸுர ஸம்ஹாரத்தைக் கண்டு அத்புதரஸம் ஏற்படுகிறதென்று அர்த்தம் செய்ய வேண்டும்.

தன் ஸபத்னியான கங்கையினிடம் தேவி கொள்ளும் கோபத்திற்குப் பயந்து கங்கை ஜலமாக உருகிவிட்டாளோ, என்று 'ஆனந்தலஹரி' (18)யில் காணப்படுகிறது. இதே அபிப்ராயம் 'மூகபஞ்சசதி'யிலும் (IV 95) சொல்லப்பட்டிருக்கிறது. (51)

**गते कर्णाभ्यर्णं गरुत इव पक्ष्माणि दधती**
**पुरां भेत्तुश्चित्तप्रशमरसविद्रावणफले ।**

इमे नेत्रे गोत्राधरपतिकुलोत्तंसकलिके
तवाकर्णाकृष्टस्मरशरविलासं कलयतः ॥ ५२ ॥

கதே கர்ணாப்யர்ணம் கருத இவ பக்ஷ்மாணி தததீ
புராம் பேத்துச் சித்த ப்ரஶம ரஸ வித்ராவண பலே ।
இமே நேத்ரே கோத்ராதர பதி குலோத்தம்ஸ கலிகே
தவாகர்ணாக்ருஷ்ட ஸ்மரஶர விலாஸம் கலயத: ॥

**हे गोत्राधरपतिकुलोत्तंसकलिके** – ஹிமவானின் வம்சத்திற்கு திலகம் போன்ற ஹே பார்வதி! **तव** – உன்னுடைய **इमे नेत्रे** – இந்த இரண்டு கண்கள் **कर्णाभ्यर्णं गते** – காதுகளின் ஸமீபத்தையடைந்திருக்கின்றன. **गरुत इव** – இரக்கைகள் போல் **पक्ष्माणि दधती** – உரோமங்களைத் தரிக்கின்றவை. **पुरां भेत्तुः** – பரமசிவனுடைய **चित्तप्रशमरसविद्रावणफले** – மன அமைதியைப் போக்கடிக்கின்ற பலன் உள்ளவைகள் **आकर्णाकृष्टस्मरशरविलासं** – காதுவரையில் இழுக்கப்பட்ட மன்மதனுடைய பாணத்தின் சோபையை **कलयतः** – உண்டு பண்ணுகின்றன.

தேவி ஹிமவானின் உத்தமமான குலத்திற்குத் திலகமாக விளங்குகிறாள் என்று இங்கு சொல்லியிருப்பதுபோல் "ஹிமாசல மஹாவம்ஶ பாவநா" **(हिमाचलमहावंशपावना)** என்று லலிதா அஷ்டோத்தர சதநாமாவளியிலும் சொல்லியிருப்பது கவனிக்கத்தக்கது. "ப்ராளேயாசலவம்ஶபாவனகரீ" **(प्रालेयाचलवंशपावनकरी)** என்று 'அன்னபூர்ணாஷ்டகத்திலும் கூறப்பட்டிருக்கிறது. தேவியின் கண்களின் அழகைக்கண்டு சிவனுடைய மனது சாந்த ரஸத்தை இழந்து காமவிகாரம் அடைவதால் மன்மதனுடைய பாணத்திற்கு ஸமமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. பாணங்களுக்கு இரு பக்கங்களிலும் இரக்கைகள் கட்டியிருப்பது போல் கண்களின் இரு இமைகளிலும் மயிர்கள் இருக்கின்றன. பாணத்தைக் காது வரையில் இழுத்துவிடுவது போல் கண்களும் காதுவரையில் நீண்டு இருக்கின்றன. **"पञ्चबाणस्य स्त्रीणां कटाक्षः षष्ठो बाणः"** ஐந்து பாணங்களுள்ள

மன்மதனுக்கு ஸ்த்ரீகளின் கண் பார்வை ஆறுவது பாணம் போன்றது என்று வ்யாக்யானத்தில் காணப்படுகிறது. 'அனங்கஜனகாபாங்கவீக்ஷணா' (अनङ्ग जनकापाङ्ग वीक्षणा) என்று லலிதா அஷ்டோத்தரத்தில் பார்க்கலாம். (52)

विभक्तत्रैवर्ण्यं व्यतिकरितलीलाञ्जनतया
विभाति त्वन्नेत्रत्रितयमिदमीशानदयिते ।
पुनः स्रष्टुं देवान् द्रुहिणहरिरुद्रानुपरतान्
रजः सत्त्वं बिभ्रत्तम इति गुणानां त्रयमिव ॥ ५३ ॥

விபக்த த்ரைவர்ண்யம் வ்யதிகரித லீலாஞ்ஜநதயா
விபாதி த்வந்நேத்ர த்ரிதயமிதமீஶாந தயிதே ।
புன: ஸ்ரஷ்டும் தேவான் த்ருஹிண ஹரி ருத்ரான்
உபரதான்
ரஜ: ஸத்வம் பிப்ரத் தம இதி குணாநாம் த்ரயமிவ ॥

**हे ईशानदयिते**-ஹே பரமேச்வரனுடைய ப்ரிய பத்னியே! **व्यतिकरितलीलाञ्जनतया** - விளையாட்டுக்காக இட்டுக்கொண்டிருக்கும் மையுடன் கூடியிருக்கும் காரணத்தால், **विभक्त-त्रैवर्ण्यं**-ஒன்றோடொன்று கலக்காமல் காணப்படும் மூன்று வர்ணங்களையுடைய, **इदं त्वन्नेत्रत्रितयं**-இந்த உன் மூன்று கண்களும், **उपरतान्**-ஓய்வு பெற்று இருக்கிற, **द्रुहिणहरिरुद्रान्**-ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் என்கிற, **देवान्**-தேவர்களை, **पुनः स्रष्टुं**-மறுபடியும் ஸ்ருஷ்டிப்பதற்கு, **रजः सत्वं तम इति**-ரஜோகுணம், ஸத்வகுணம், தமோகுணம் என்கிற, **गुणानां त्रयं**-மூன்று குணங்களையும், **बिभ्रत् इव**-தரிக்கின்றதுபோல், **विभाति**-தோன்றுகிறது.

தேவியின் கண்களில் இயற்கையாக சிவப்பாகவும், வெளுப்பாகவும் இரண்டு ரேகைகளும், மைஇட்டுக் கொள்ளுவதால் கருப்பான மூன்றாவது ஒரு ரேகையும் காணப்படுகின்றன. மஹாப்ரளயத்தில் உபரதியை யடைந்த ப்ரும்மா விஷ்ணு, ருத்ரன் என்ற ரஜோகுண, ஸத்வகுண, தமோகுண

ப்ரதானமான மூன்று தேவர்களை மறுபடியும் ஸ்ருஷ்டித்து அவரவர்களுடைய காரியத்தைப் பார்க்கும்படி ஆக்ஞை செய்வதுபோல் இந்த மூன்று ரேகைகள் தோன்றுகின்றன என்று உத்ப்ரேக்ஷை செய்கிறார். இதே அபிப்ராயத்தை த்ரிபுரஸுந்தரீ வேதபாத ஸ்தோத்திரத்தில் (சு. 21) சொல்லுகிறார் :—

कल्पस्यादौ कारणेशानपि त्रीन्स्रष्टुं देवि त्रीन्गुणानादधानाम् ।
सेवे नित्यं श्रेयसे भूयसे त्वामजामेकां लोहितशुक्लकृष्णाम् ॥

கல்பஸ்யாதௌ காரணேசானபி த்ரீன்
ஸ்ரஷ்டும் தேவி த்ரீன் குணானாததானாம் ।
ஸேவே நித்யம் ச்ரேயஸே பூயஸே த்வாம்
அஜாமேகாம் லோஹிதசுக்லக்ருஷ்ணாம் ॥ (53)

पवित्रीकर्तुं नः पशुपतिपराधीनहृदये
दयामित्रैर्नेत्रैररुणधवलश्यामरुचिभिः ।
नदः शोणो गङ्गा तपनतनयेति ध्रुवममुं
त्रयाणां तीर्थानामुपनयसि संभेदमनघम् ॥ ५४ ॥

பவித்ரீகர்தும் ந: பசுபதி பராதீந ஹ்ருதயே
தயா மித்ரைர் நேத்ரை ரருண தவள ச்யாம ருசிபி: ।
நத: சோணோ கங்கா தபந தநயேதி த்ருவமமும்
த்ரயாணாம் தீர்த்தானாம் உபநயஸி ஸம்பேதமநகம் ॥

**हे पशुपतिपराधीनहृदये**–பரமசிவனுக்கு அதீனமான மனதையுடைய பரதேவதையே! **दयामित्रैः**– கருணையுடன் கூடின, **अरुणधवलश्यामरुचिभिः** –சிவப்பு, வெளுப்பு, கருப்பு என்ற மூன்று வர்ணங்களின் காந்தியையுடைய, **नेत्रैः** –கண்களினால், **शोणो नदः**– மேற்கு திக்கை நோக்கிச் செல்லும் சோணபத்ரா, **गङ्गा**–கங்கை, **तपनतनया**–யமுனை, **इति**–என்னும், **त्रयाणां तीर्थानां**–மூன்று தீர்த்தங்களுடைய, **अनघं**–பாபத்தைப்போக்கடிக்கின்ற, **अमुं संभेदं**–இந்த ஸங்கமத்தை

**नः**-எங்களை, **पवित्रीकर्तुं**-பரிசுத்தம்செய்து வைப்பதற்கு, **ध्रुवं उपनयसि**-நிச்சயம் உண்டுபண்ணுகிறாய்.

தேவியின் கண்களில் காணப்படும் மூன்று ரேகைகள் மூன்று நதிகளின் ஸங்கமம் என்று உத்ப்ரேக்ஷிக்கப்படு கிறது. சோணபத்ரா என்பது மேற்கு திக்கில் போகும் நதி, அதன் ஜலம் சிவப்பாய் இருக்கும். கங்கை கிழக்கு திக்கில் போகும் நதி, அதன் ஜலம் வெளுப்பாய் இருக்கும். யமுனையும் கிழக்கு திக்கில் போகும் நதி. அதன் ஜலம் கருப்பாய் இருக்கும். ஆகவே தேவியின் கண்களில் தோன்றும் சிவப்பு, வெளுப்பு கருப்பான மூன்று ரேகை களும் இம்மூன்று நதிகளோ என்று உத்ப்ரேக்ஷை செய்யப் படுகிறது. கங்கையும் யமுனையும் கிழக்கு திசையில் போவ தால் ஸங்கமம் ஆகலாம். ஆகவும் ஆகிறது. ஆனால் மேற்குதிக்கில் போகும் சோணபத்ரா இந்த இரண்டு நதி களுடன் ஸங்கமம் அடைவது ஸாத்யமே இல்லை. தேவியின் கண்களில் மூன்று நதிகளும் சேர்ந்திருக்கின்றன என்பது விசேஷம். தேவியின் கடாக்ஷம் ஏற்பட்டால் மூன்று நதி களின் ஸங்கமத்தில் ஸ்நானம் செய்த பலன் ஏற்படுகிறது. தேவியின் கடாக்ஷபாதத்தால் மனிதன் புனிதன் ஆகிறான். என்பது உட்கருத்து (54)

निमेषोन्मेषाभ्यां प्रलयमुदयं याति जगती
तवेत्याहुः सन्तो धरणिधरराजन्यतनये ।
त्वदुन्मेषाज्जातं जगदिदमशेषं प्रलयतः
परित्रातुं शङ्के परिहृतनिमेषास्तव दृशः ॥ ५५ ॥

நிமேஷோந்மேஷாப்யாம் ப்ரளயமுதயம் யாதி ஜகதீ
தவேத்யாஹுஸ் ஸந்தோ தரணிதர ராஜந்ய தநயே ।
த்வதுந்மேஷாத் ஜாதம் ஜகதிதமஶேஷம் ப்ரளயத:
பரித்ராதும் ஶங்கே பரிஹ்ருத நிமேஷாஸ்தவ த்ருஶ: ॥

**हे धरणिधरराजन्यतनये**-ஹே பர்வதராஜகுமாரியே! **तव**-உன்னுடைய, **निमेषोन्मेषाभ्यां**-கண்களை மூடுவது திறப்பது

இவைகளிலிருந்து, **जगती**-உலகம், **उदयं**-ஸ்ருஷ்டியையும், **प्रलयं**-பிரளயத்தையும், **याति**-அடைகிறது. **इति**-என்று, **सन्तः** -பெரியோர்கள், **आहुः** - சொல்கிறார்கள். **त्वदुन्मेषात्**-உன்னுடைய கண் திறப்பினால், **जातं**-உண்டான, **इदमशेषं जगत्** இந்த ஸமஸ்தமான உலகத்தையும், **प्रलयतः** - நாசத்திலிருந்து, **परित्रातुं**-காப்பாற்றுவதற்கு, **तव दृशः** - உன் கண்கள், **परिहृतनिमेषाः** - இமைக்கொட்டுதல் இல்லாமலே இருக்கின்றனவென்று, **शङ्के**-எண்ணுகிறேன்.

ஸ்வப்னம் நீடிக்கும் வரையில் ஸ்வப்னத்தில் பார்க்கும் வஸ்துக்கள் நிஜம். ஸ்வப்னம் கலைந்தால் அந்த வஸ்துக்களும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடுகின்றன. ஆகவே அவைகள் ஸ்வப்னத்ருஷ்டி ஏற்பட்டவுடன் உண்டாகின்றன. ஸ்வப்ன த்ருஷ்டி முடிந்தவுடன் இல்லாமல் போய் விடுகின்றன. அதேமாதிரி தேவி கண்திறந்தால் உலகம் ஸிருஷ்டியாகிறது. தேவி கண்மூடினால் உலகம் பிரளயத்தை அடைகிறது. லலிதா ஸஹஸ்ரநாமத்தில் காணப்படும் "**उन्मेषनिमिषोत्पन्नविपन्नभुवनावलिः**" (உந்மேஷநிமிஷோத்பந்ந விபந்நபுவநாவளி:) என்னும் வாக்யம் இதே அபிப்ராயத்தை கூறுகிறது. இதை வேதாந்த சாஸ்திரத்தில் த்ருஷ்டி ஸ்ருஷ்டிவாதம் என்று சொல்வார்கள். அப்படி ஸ்ருஷ்டிக்கப் பட்ட உலகம் நாசத்தையடையாமலிருக்கவேண்டுமென்று தேவி கண்மூடாமலே இருக்கிறாள். ஸஹஜமாகவே தேவதைகள் கண் மூடமாட்டார்கள். அது உலகம் நாசம் அடையாமல் இருப்பதற்குத்தானோ என்று உத்ப்ரேக்ஷை செய்கிறார். (55)

**तवापर्णे कर्णेजपनयनपैशुन्यचकिताः**
**निलीयन्ते तोये नियतमनिमेषाः शफरिकाः ।**
**इयं च श्रीर्बद्धच्छदपुटकवाटं कुवलयं**
**जहाति प्रत्यूषे निशि च विघटय्य प्रविशति ॥**

தவாபர்ணே கர்ணேஜப நயந பைஶுந்ய சகிதா :
நிலீயந்தே தோயே நியதமநிமேஷா: ஶபரிகா: |
இயம் ச ஸ்ரீர்பத்தச்சத புட கவாடம் குவலயம்
ஜஹாதி ப்ரத்யூஷே நிஶி ச விகடய்ய ப்ரவிஶதி ||

**हे अपर्णे**–ஹே பார்வதியே! **तव**–உன்னுடைய, **कर्णेजप-नयनपैशुन्यचकिताः** - காதுகளுடைய ஸமீபத்திற்குச் சென்று கோள்சொல்லிக் கொடுக்கும் கண்களிடம் பயந்தவைகளாக, **अनिमेषाः** – இமைகொட்டுதல் இல்லாத, **शफरिकाः** – பெண் மீன்கள், **तोये**–ஜலத்தில், **निलीयन्ते**–மறைந்து கொள்ளுகின்றன, **नियतं**–நிச்சயம். **इयं**–இந்த, **श्रीश्च**-சோபையும் கூட, **बद्धच्छदपुटकवाटं**–தளங்களாகிற கதவுகள் மூடப்பட்ட, **कुवलयं**-நீலோத்பலபுஷ்பத்தை, **प्रत्यूषे**- காலையில், **जहाति**-விட்டுவிடுகிறது. **निशि**-இரவில், **विघटय्य**-திறந்துகொண்டு, **प्रविशति च**-பிரவேசிக்கிறது.

தேவியின் கண்கள் எப்பொழுதும் திறந்திருப்பது போல் பெண் மீன்களுடைய கண்களும் மூடப்படாமல் இருக்கின்றன. இதை ஸஹிக்காமல் தேவியின் கண்கள் தேவியின் காதுக்கு ஸமீபம் சென்று ரஹஸ்யமாக கோள்ச் சொல்லுகின்றன. இந்த ஸமாசாரத்தைத் தெரிந்துகொண்டு பெண் மீன்கள் பயத்திஞல் ஜலத்தின்மேல் வராமல் அடியிலேயே இருந்து வருகின்றனவோ என்று உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது. ச்லோகத்தின் உத்தரார்த்தத்தில் நீலோத்பல புஷ்பத்தை தேவியின் கண்களுக்கு உவமையாகச் சொல்லுகிருர். நீலோத்பலம் இரவில்தான் மலரும். பகலில் தளங்கள் மூடியிருக்கும். தேவி இரவில் யோக நித்ரையில் இருக்கும்போது கண்களில் இருக்கும் சோபை திருட்டுத்தனமாக வெளியேவந்து தளங்கள் என்ற கதவை திறந்துகொண்டு நீலோத்பல புஷ்பத்திற்குள் நுழைகிறது. அதிகாலையிலேயே அதைவிட்டு வெளியேவந்து மறுபடியும் தேவியின் கண்கள் திறக்கும் ஸமயத்தில் கண்களுக்குள் பிரவேசித்து விடுகிறது. இந்த ஸமாசாரத்தையும் ரஹஸ்ய மாக தேவியினுடைய காதுகளில் சொல்லுவதற்காக

கண்கள் காதுகளின் ஸமீபத்திற்குப் போகின்றனவோ என்றும் உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது. தேவியின் கண்களுக்கு ஸமமாகச் சொல்லக்கூடிய உபமானங்கள் பெண் மீனும், நீலோத்பலமும்தான் என்பது தாத்பர்யம். "**आकर्णदीर्घनयनं**" (ஆகர்ண தீர்க நயனம்) என்று லலிதா பஞ்சரத்னத்திலும் "**निषक्तं श्रुत्यन्ते नयनं**" (நிஷக்தம் சருத்யந்தே நயனம்) என்று மூகபஞ்சசதியிலும் (பாதாரவிந்த சதகம் சு. 20) சொல்லப்பட்டிருக்கிறது. (56)

(அ) தேவியின் கடாக்ஷத்தை ஆசார்யபாதாள் வேண்டுகிறார் :—

**दृशा द्राघीयस्या दरदलितनीलोत्पलरुचा**
**दवीयांसं दीनं स्नपय कृपया मामपि शिवे ।**
**अनेनायं धन्यो भवति न च ते हानिरियता**
**वने वा हर्म्ये वा समकरनिपातो हिमकरः ॥ ५७ ॥**

த்ருஶா த்ராகீயஸ்யா தர தளித நீலோத்பலருசா
தவீயாம்ஸம் தீநம் ஸ்நபய க்ருபயா மாமபி ஶிவே ।
அநேநாயம் தந்யோ பவதி ந ச தே ஹாநிரியதா
வநே வா ஹர்ம்யே வா ஸமகர நிபாதோ ஹிமகர: ॥

**हे शिवे**-ஹே தாயே! **द्राघीयस्या** - மிகவும் நீண்டதாயும் **दरदलितनीलोत्पलरुचा** - சிறிது மலர்ந்த நீலோத்பல புஷ்பத்தின் சோபையுடன் கூடியதாயும் உள்ள, **दृशा**-கடாக்ஷத்தால், **दवीयांसं**-வெகு தூரத்தில் இருக்கிறவனையும், **दीनं**-தரித்திரனையுமுள்ள, **मामपि**-என்னையும், **कृपया**-கருணையால் **स्नपय**-ஸ்நானம் செய்து வை. **अनेन**-இதனால், **अयं**-இந்த மனிதன் (நான்), **धन्यो भवति**-க்ருதார்த்தனாக ஆகிறான் (ஆவேன்). **इयता**-இதனால், **ते**-உனக்கு, **हानिः** - குறைவு **न च**-கிடையாது. **हिमकरः** - சந்திரன், **वने वा**-காட்டிலோ, **हर्म्ये वा**-அரண்மனையிலோ, **समकरनिपातः** - தன்கிரணங்கள் ஒரேமாதிரி விழும்படி செய்கிறான்.

ஸ்ரீ ஆசார்யபாதாள் தேவியின் கடாக்ஷபாதத்தை வேண்டுகிறார். தன்னிடம் ஒரு யோக்யதையும் இல்லை என்று தெரிந்து தேவியின் ஸமீபத்தில் போவதற்கு பயந்து வெகுதூரத்திலேயே நிற்கிறார். முதல் ச்லோகத்தில் தான் 'அக்ருதபுண்யன்' (ஸுக்ருதம் செய்யாதவன்) என்று சொன்னார். ஆனாலும் தேவியின் கடாக்ஷத்திற்கு புண்யம் செய்தவர்கள்தான் பாத்திரர்கள் என்ற நியமம் கிடையாது. புண்யம் செய்யாதவர்களும்கூட அந்தக் கரண சுத்தியுடன் தேவியை யாசித்தால் போதும். அபார கருணைவாய்ந்தவள் தேவி. "அவ்யாஜகருணாமூர்த்தி:" என்று லலிதா ஸஹஸ்ரநாமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. சந்திரனுடைய கிரணம் வித்தியாஸம் பாராட்டாமல் காட்டிலும், மாளிகைகளின் மேலும் விழுகிறது என்ற பொது நியாயத்தைக்கொண்டு தேவியின் கடாக்ஷத்தை யாசிக்கிறபடியால் 'அர்த்தாந்தர ந்யாஸாலங்காரம்' அத்யந்த வினயத்துடன் தேவியின் கடாக்ஷ வீக்ஷணத்தை யாசிப்பதை 'ஆனந்தலஹரி'யிலும் (சு. 10) 'கல்யாணவ்ருஷ்டி ஸ்தவத்திலும்' (சு. 8, 10) பார்க்கலாம். (57)

(அ) தேவியின் பாளீவர்ணனை :—

अरालं ते पालीयुगलमगराजन्यतनये
न केषामाधत्ते कुसुमशरकोदण्डकुतुकम् ।
तिरश्चीनो यत्र श्रवणपथमुल्लङ्घ्य विलस-
न्नपाङ्गव्यासङ्गो दिशति शरसन्धानधिषणाम् ॥ ५८ ॥

அராளம் தே பாளீயுகளம் அகராஜன்ய தநயே
ந கேஷாம் ஆதத்தே குஸுமசர கோதண்ட குதுகம் ।
திரஸ்சீநோ யத்ர ச்ரவண பதம் உல்லங்க்ய விலஸன்
அபாங்க வ்யாஸங்கோ திசதி சரஸந்தான திஷணாம்॥

**हे अगराजन्यतनये**—ஹே பர்வதராஜகுமாரியே! **ते**—உன்னுடைய, **अरालं**—வளைவான, **पालीयुगलं**—காதுகளுக்கும் கண்களுக்கும் மத்தியில் இருக்கும் பிரதேசம், **कुसुमशरकोदण्डकुतुकं**

மன்மதனுடைய வில்லின் அழகை, **केषां**-எவர்களுக்குத்தான், **न आधत्ते**-உண்டுபண்ணாது. (எந்தகாரணத்தால்), **यत्र**-எந்த பாளீ பிரதேசத்தில், **तिरश्चीनः**-குறுக்காய் திரும்பி இருக்கிற **अपाङ्गव्यासङ्गः**-கடைக்கண் பார்வையானது, **श्रवणपथं**-காதுகளின் வழியையும், **उल्लङ्घ्य**-தாண்டி, **विलसन्**-ப்ரகாசிக்கிறதாய்க்கொண்டு, **शरसंधानधिषणां**-பாணம் போடப்படுகிறதென்ற புத்தியை, **दिशति**-உண்டு பண்ணுகிறதோ!

பாளீ என்ற பிரதேசம் மன்மதனுடைய வில்லாகவும் அந்த பிரதேசத்தில் செலுத்தப்படும் தேவியின் குறுக்குப் பார்வையானது மன்மதனுடைய பாணமாகவும் உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது. பாளீப்ரதேசத்தில் தேவியின் கடைக்கண் பார்வை ஏற்படும்போது பரமேச்வரனுடைய மனதில் காமவிகாரம் ஏற்படுகிறது. (58)

(அ) தேவியின் முகவர்ணனை :—

स्फुरद्गण्डाभोगप्रतिफलितताटङ्कयुगलं
चतुश्चक्रं मन्ये तव मुखमिदं मन्मथरथम् ।
यमारुह्य द्रुह्यत्यवनिरथमर्केन्दुचरणं
महावीरो मारः प्रमथपतये सज्जितवते ॥ ५९ ॥

ஸ்புரத் கண்டாபோக ப்ரதிபலித தாடங்க யுகளம்
சதுஸ்சக்ரம் மந்யே தவ முகமிதம் மன்மத ரதம் ।
யமாருஹ்ய த்ருஹ்யத்யவநிரதம் அர்கேந்து சரணம்
மஹாவீரோ மார: ப்ரமதபதயே ஸஜ்ஜிதவதே ॥

**हे भगवति**-ஹே பகவதி! **स्फुरद्गण्डाभोगप्रतिफलितताटङ्क-युगलं**-நிர்மலமான, விசாலமான கன்னங்களில் பிரதிபலிக்கின்ற தாடங்கங்களுடன் கூடினதான, **तव इदं मुखं**-உன்னுடைய இந்த முகத்தை, **चतुश्चक्रं**-நான்கு சக்ரங்களுடன் கூடின, **मन्मथरथं**-மன்மதனுடைய ரதமாக, **मन्ये**-எண்ணுகிறேன். **यम्**-எந்த ரதத்தில், **आरुह्य**-ஏறிக்கொண்டு, **मारः**-

மன்மதன், **महावीरः (सन्)**-பெரியவீரனாக இருந்துகொண்டு **अर्केन्दुचरणं**-சூரியனையும் சந்திரனையும் சக்ரமாகக்கொண்ட, **अवनिरथे**-பூமியாகிய ரதத்தில் (ஏறிக்கொண்டு) **सज्जितवते**-ஸம்ஹாரம் செய்கிற, **प्रमथपतये**-பரமேச்வரரின் பொருட்டு, **द्रुह्यति**-எதிர்த்துப் போராடுகிறானே!

தேவி தன் இரு காதுகளிலும் தாடங்கத்தை தரித்துக் கொண்டிருக்கிறாள். நிர்மலமான கன்னங்களில் அந்த தாடங்கங்கள் பிரதிபலிக்கின்றன. தேவியின் முகத்தை மன்மதனுடைய ரதமாகவும், காதுகளில் அணிந்திருக்கும் இரண்டு தாடங்கங்கள், கன்னங்களில் பிரதிபலிக்கும் இரண்டு தாடங்கங்களின் ப்ரதிபிம்பங்கள் ஆக நான்கும் நான்கு சக்ரங்களாக உத்ப்ரேக்ஷை செய்யப்படுகின்றன. பரமசிவன் த்ரிபுரஸம்ஹாரம் செய்வதற்குப் புறப்பட்ட போது பூமியை ரதமாக உபயோகப்படுத்தினார் என்றும், அதற்கு ஸூரியன், சந்திரன் இருவரும் இரண்டு சக்ரங் களாக அமைந்தார்கள் என்பதும் புராண ப்ரஸித்தமான கதை. "நான் நான்கு சக்ரரதத்தில் ஏறிக்கொண்டிருக் கிறேன்" என்ற கர்வத்தையடைந்து மன்மதன் பரமசிவனை யும் எதிர்த்து யுத்தம்செய்தான். வெற்றி அவனுக்குத் தான் கிடைத்தது. தேவியின் முகலாவண்யத்தில் ஈடுபட்டு பரமசிவனும் மோஹம் அடைகிறார் என்பது முக்கிய தாத்பர்யம். "மணிதர்ப்பணஸங்காசகபோலாயை நமோ நம:" (**मणिदर्पणसंकाशकपोलायै नमो नमः**) என்று லலிதா அஷ்டோத்தரத்தில் சொல்லப்பட்டிருப்பது கவனிக்கத் தக்கது. (59)

(அ) தேவியின் குரல் மிகவும் இனிமையானது :—

**सरस्वत्याः सूक्तीरमृतलहरीकौशलहरीः**
**पिबन्त्याः शर्वाणि श्रवणचुलुकाभ्यामविरलम् ।**
**चमत्कारश्लाघाचलितशिरसः कुण्डलगणो**
**झणत्कारैस्तारैः प्रतिवचनमाचष्ट इव ते ॥ ६० ॥**

ஸரஸ்வத்யா: ஸூக்தீ: அம்ருதலஹரீ கௌஶல ஹரீ:
பிபந்த்யா: ஶர்வாணி ச்ரவண சுலுகாப்யாம் அவிரளம் |
சமத்கார ச்லாகா சலிதஶிரஸ: குண்டலகணோ
ஜணத்காரை: தாரை: ப்ரதிவசநமாசஷ்ட இவ தே ||

**हे शर्वाणि**-ஹே சிவபத்னியே! **अमृतलहरीकौशलहरीः**- அமிருதப் பெருக்கின் ஸாமர்த்யத்தை அபஹரிக்கக்கூடிய தான, **ते**-உன்னுடைய, **सूक्तीः** - இனிமையான சொற்களை, **श्रवणचलुकाभ्यां** -கர்ணபுடங்களால், **अविरलं**-இடைவிடாமல், **पिबन्त्याः** - அருந்துகிறவளாயும், **चमत्कारश्लाघाचलितशिरसः** - (அவைகளின்) சிறப்பைப் புகழும் முறையில் ஏற்பட்ட சிரஃகம்பத்தோடு கூடினவளாயும் உள்ள, **सरस्वत्याः** - ஸரஸ்வதியினுடைய, **कुण्डलकगणः** -கர்ணகுண்டலங்கள், **तारैः**- திடமான, **झणत्कारैः** - ஜணஜண சப்தங்களால், **प्रतिवचनं**- ஆமோதனம் செய்யும் வார்த்தையை, **आचष्ट इव**-சொல்வது போல் இருக்கிறது.

தேவியின் பேச்சு மிகவும் மாதுர்யமுள்ளது. தேவி பேசும்போது ஸரஸ்வதி தன் வீணாகானத்தை நிறுத்தி விட்டு அந்தப் பேச்சைக் கேட்கிறாள். அதிமதுரமான வார்த்தைகளைக் கேட்டவுடன்தான் அறியாமல் சிலாகிக்கும் முறையில் தலையை ஆட்டுகிறாள். அப்பொழுது ஸரஸ்வதியின் காதுகளில் அணிந்திருக்கும் தோடுகளில் தொங்கும் சலங்கைகள் ‘ஜல்,’ ‘ஜல்’ என்று சப்தம் செய்துகொண்டு ஆடுகின்றன. அது ஆமோதனம் செய்வதுபோல் இருக்கிறது என்று உத்ப்ரேக்ஷை செய்யப் படுகிறது. (60)

(அ) தேவியின் மூக்கின் வர்ணனை :—

असौ नासावंशस्तुहिनगिरिवंशध्वजपटि
त्वदीयो नेदीयः फलतु फलमस्माकमुचितम् ।
वहत्यन्तर्मुक्ताः शिशिरकरनिश्वासगलितं
समृद्धया यत्तासां बहिरपि च मुक्तामणिधरः ॥ ६१ ॥

அஸௌ நாஸா வம்ஶஸ்துஹிநகிரி வம்ஶ த்வஜபடி
த்வதீயோ நேதீய: பலது பலமஸ்மாகமுசிதம் |
வஹத்யந்தர்முக்தா: ஶிஶிரகர நிச்வாஸ களிதம்
ஸம்ருத்த்யா யத்தாஸாம் பஹிரபி ச முக்தாமணிதர: ||

**हे तुहिनगिरिवंशध्वजपटि** - ஹே பர்வதராஜனின் குலத்திற்குக் கொடிபோல் விளங்கும் பார்வதி! **त्वदीयः असौ**-உன்னுடைய இந்த, **नासावंशः**-மூங்கிலைப் போன்ற மூக்கானது **अस्माकं**-எங்களுக்கு, **उचितं**-உசிதமாயும், **नेदीयः** – சீக்கிரம் கிடைக்கக்கூடியதாயுமிருக்கிற, **फलं** – பிரயோஜனத்தை, **फलतु**—கொடுக்கட்டும். **सः अन्तः** –அது உள்ளுக்குள், **मुक्ताः**-முத்துக்களை, **वहति**–வைத்துக்கொண்டிருக்கிறது. **यत्**-எந்தக்காரணத்தால், **तासां** – அவைகளுடைய, **समृद्धया** -ஸமிருத்தியினால், **शिशिरकरनिश्वासगलितं** – சந்திர நாடியின் மார்க்கமாக வருகிற மூச்சுக்காற்றினால் கொண்டுவரப்படும் முத்துக்களால், **बहिरपि**–வெளியிலேயும், **मुक्तामणिधरः**-முத்து மணியை தரிக்கிறதாக ஆகிறதோ!

மூங்கிலின் கடைசிக்கணுவில் விழும் மழைத்திவிலைகள் முத்துக்களாக மாறுகின்றன. மூங்கில் வழியாகக் காற்று வீசும்போது முத்து ஏதாவது ஒன்று வெளியேவரும். தேவியின் மூக்கு மூங்கிலாகக் கருதப்பட்டு உள்ளிருக்கும் முத்துக்களில் ஒன்று இடது மூக்கில் இருக்கும் பிங்களா நாடிமூலம் மூச்சுக் காற்றால் வெளியில் வந்து தேவியின் இடது மூக்கை அலங்கரிக்கிறதோ என்று உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது. மனித சரீரத்தில் இடை, பிங்கலை, ஸுஷும்னை என்ற மூன்று நாடிகள் ஓடுகின்றன. இடா நாடிக்கு ஸூரியன் என்றும், பிங்களா நாடிக்கு சந்திரன் என்றும் ஸுஷும்ன நாடிக்கு அக்னி என்றும் பெயர்கள் உண்டு. சிசிரகர:-சந்த்ரன் அல்லது பிங்கலை என்னும் நாடி. இந்த சுலோக ஆரம்பத்தில் தேவி பர்வதராஜனை ஹிமவானின் புகழை ஓங்கி உலாவும்படி செய்யும் கொடி போன்றவள் என்று ஸம்போதனம் செய்யப்பட்டிருக்கிறாள். "ஹிமஶிகரிணோ வம்ஶஸ்யைகம் வதம்ஸம்" (**हिमशिखरिणो**

वंशस्यैकं वतंसं ) என்று மூக பஞ்சசதியில் (ஸ்துதி சதகம் சு. 31) தேவி வர்ணிக்கப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது.

(அ) தேவியின் உதடுகளின் வர்ணனை: —

प्रकृत्यारक्तायास्तव सुदति दन्तच्छदरुचेः
प्रवक्ष्ये सादृश्यं जनयतु फलं विद्रुमलता ।
न बिम्बं तद्बिम्बप्रतिफलनरागादरुणितं
तुलामध्यारोढुं कथमिव विलज्जेत कलया ॥ ६२ ॥

ப்ரக்ருத்யாரக்தாயா: தவ ஸுததி தந்தச்சத ருசே:
ப்ரவக்ஷ்யே ஸாத்ருச்யம் ஜநயது பலம் வித்ரும லதா ।
ந பிம்பம் தத்பிம்ப ப்ரதிபலன ராகாதருணிதம்
துலாம் அத்யாரோடும் கதமிவ விலஜ்ஜேத கலயா ॥

हे सुदति–அழகான பல்வரிசைகளையுடைய தாயே! तव–உன்னுடைய, प्रकृत्या–இயற்கையாகவே, आरक्तायाः–சிவப்பு நிறமுள்ள, दन्तच्छदरुचेः–உதடுகளின் சோபைக்கு, सादृश्यं–ஸாம்யத்தை, प्रवक्ष्ये–சொல்லுகிறேன். विद्रुमलता–பவழக் கொடி, फलं–பழத்தை, जनयतु–உண்டுபண்ணட்டும். बिम्बं (पुनः)–கோவைப்பழமோ என்ருல், तद्बिम्बप्रतिफलनरागात्–தன்னிடத்தில் கீழ் உதடு பிரதிபிம்பித்த காரணத்தால், अरुणितं–சிவப்பாயிருந்தாலும், कलया–பதினாறில் ஒரு பங்குகூட तुलां–ஸமத்வத்தை, अध्यारोढुं–அடைவதற்கு, कथमिव–எப்படித்தான், न विलज्जेत–வெட்கத்தை அடையாது?

தேவியின் உதடுக்கு ஸமமாகச் சொல்வதற்கு எதுவும் இல்லை. பவழக்கொடியில் பழம் உண்டாவதாயிருந்தால் அது சிவப்பாயிருக்கும். அதை உபமானமாகச் சொல்லலாம். ஆனால் பவழக்கொடியில் பழம் ஏற்படப் போகிறதில்லை. கோவைப் பழமோ ஸ்வபாவமாக வெளுப்பு நிறம் தேவியின் உதடின் சிவப்பு நிறம் அதன்மேல் பட்டுத்தான் அதுவும் சிவப்பாகத் தோன்றுகிறது. ஆனால் இது உபாதிவசத்தால்

ஏற்பட்டது. தேவியின் உதட்டில் இருக்கும் இயற்கையான சிவப்பு நிறத்தில் இது பதினாறில் ஒரு பங்குகூட இருக்காது.

(அ) தேவியின் முகம் சந்திரபிம்பத்தைவிட அதிக அழகானது:—

स्मितज्योत्स्नाजालं तव वदनचन्द्रस्य पिबतां
चकोराणामासीदतिरसतया चञ्चुजडिमा ।
अतस्ते शीतांशोरमृतलहरीमाम्लरुचयः
पिबन्ति स्वच्छन्दं निशिनिशि भृशं काञ्चिकधिया ॥ ६३ ॥

ஸ்மித ஜ்யோத்ஸ்நா ஜாலம் தவ வதந சந்த்ரஸ்ய பிபதாம்
சகோராணும் ஆஸீத் அதிரஸதயா சஞ்சு ஜடிமா ।
அதஸ்தே ஶீதாம்ஶோ: அம்ருத லஹரீம் ஆம்ல ருசய:
பிபந்தி ஸ்வச்சந்தம் நிஶிநிஶி ப்ருஶம் காஞ்சிக தியா ॥

**हे भगवति**-ஹே பரதேவதையே! **तव**-உன்னுடைய, **वदनचन्द्रस्य**-முகமாகிய சந்திரனுடைய, **स्मितज्योत्स्नाजालं**-புன்சிரிப்பாகிய சந்த்ரிகையின் ஸமூஹத்தை, **पिबतां**-அருந்துகிற, **चकोराणां**-சகோரபக்ஷிகளுக்கு, **अतिरसतया**-அதிக தித்திப்பினால், **चञ्चुजडिमा**-நாக்கிற்குத் திகட்டல், **आसीत्**-ஏற்பட்டது **अतः**-ஆகவே, **ते**-அந்த பக்ஷிகள், **आम्लरुचयः**, புளிப்பில் ருசியுள்ளவைகளாய், **शीतांशोः**-சந்திரனின், **अमृतलहरीं**-அமிருதப் பெருக்கை, **काञ्चिकधिया**-புளித்த கழிவுநீர் என்ற எண்ணத்துடன், **निशि निशि**-இரவுதோறும், **स्वच्छन्दं**-தன் இஷ்டம்போல், **भृशं**-வேண்டிய அளவு, **पिबन्ति**-அருந்துகின்றன.

தேவியின் முகத்தில் விளங்கும் புன்சிரிப்பு சந்திரிகையைவிட இனிமையானது. சகோர பக்ஷிகள் இதைப் பானம் செய்து அதிக தித்திப்பினால் திகட்டல் அடைந்து, அதை மாற்றுவதற்கு புளிப்பான வஸ்துவைத் தேடுகின்றன. சந்திரனின் கிரணங்களை புளிப்பான கழுவு நீர் என்ற புத்தியுடன் தினமும் இரவில் பானம் பண்ணு

கின்றன. இயற்கையாகவே சகோர பக்ஷிகள் சந்திர கிரணங்களைப் பானம் செய்கின்றன. தேவியின் முக லாவண்யத்தை முதலில் பானம் செய்து, அதனால் ஏற்பட்ட திகட்டலை மாற்றுவதற்காகச் சந்திரகிரணங்களை பானம் செய்கின்றனவோ என்று உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது.

(அ) தேவியின் நாக்கு வர்ணிக்கப்படுகிறது:—

**अविश्रान्तं पत्युर्गुणगणकथाम्रेडनजपा**
**जपापुष्पच्छाया तव जननि जिह्वा जयति सा ।**
**यदग्रासीनायाः स्फटिकदृषदच्छच्छविमयी**
**सरस्वत्या मूर्तिः परिणमति माणिक्यवपुषा ॥ ६४ ॥**

அவிச்ராந்தம் பத்யு: குணகண கதாம்ரேடந ஜபா
ஜபாபுஷ்ப ச்சாயா தவ ஜனனி ஜிஹ்வா ஜயதி ஸா ।
யதக்ராஸீநாயா: ஸ்படிக த்ருஷதச்ச ச்சவிமயீ
ஸரஸ்வத்யா மூர்த்தி: பரிணமதி மாணிக்ய வபுஷா ॥

**हे जननि**–ஹே தாயே! **तव सा जिह्वा**–உன்னுடைய அந்த நாக்கானது, **अविश्रान्तं**–இடைவிடாது, **पत्युः**–உன் பர்த்தாவினுடைய, **गुणगणकथाम्रेडनजपा**–குணகணங்களைத் திரும்பத்திரும்பச் சொல்வதையே ஜபமாக வைத்துக்கொண்டு, **जपापुष्पच्छाया**-செம்பருத்திப்பூவின் சிவப்பைபோல் காந்தியையுடையதாய், **जयति**–விளங்குகிறது. **यदग्रासीनायाः**–எந்த நாக்கின் நுனியில் வஸிக்கிற, **सरस्वत्याः**–ஸரஸ்வதியினுடைய, **स्फटिकदृषदच्छच्छविमयी**–ஸ்படிகக்கல்போல் நிர்மலமான வெளுப்பு நிறத்தோடு கூடின, **मूर्तिः**–சரீரமானது **माणिक्यवपुषा**–மாணிக்கரத்னம்போல் சிவந்த சரீரமாக **परिणमति**–மாறுதல் அடைகிறதோ.

தேவியின் நாக்கு இயற்கையாகவே சிவப்பு நிறமுள்ளது. அதன் அக்ர பாகத்தில் வஸிக்கும் ஸரஸ்வதி தேவியின் உடல் நிறம் இயற்கையாக வெளுப்பாக இருந்தபோதிலும் நாக்கின் சேர்க்கையினால் சிவப்பாக ஸரஸ்வதி

விளங்குகிறுள். தேவியின் நாவு தன் பார்த்தாவின் குணுதி சயங்களைத் தவிர வேறு எந்த விஷயத்தையும் பேசாது. தேவியின் நாவு, தான் சிவப்பாய் இருப்பது மட்டுமல்லாமல் தன் ஸமீபத்தில் இருக்கிற ஸரஸ்வதியையும் சிவப்பு நிற முள்ளவளாக மாற்றி விடுகிறது. "**जिह्वायां रक्तत्वमात्रं न भवति। तटस्थानां रक्तीकरणे रक्तिम्नः शक्तिरपि; अतएव जयतीति प्रयुक्तम्**" என்று லக்ஷ்மீதர வ்யாக்யானத்தில் காணப் படுகிறது. (64)

(அ) தேவி குமார ஸ்வாமியை அனுக்ரஹித்தல் :—

**रणे जित्वा दैत्यानपहृतशिरस्त्रैः कवचिभि-**
**र्निवृत्तैश्चण्डांशत्रिपुरहरनिर्माल्यविमुखैः ।**
**विशाखेन्द्रोपेन्द्रैः शशिविशदकर्पूरशकला**
**विलीयन्ते मातस्तव वदनताम्बूलकबलाः ॥ ६५ ॥**

*ரணே ஜித்வா தைத்யான் அபஹ்ருத ஶிரஸ்த்ரை: கவசிபி:*
*நிவ்ருத்தை: சண்டாம்ஶ த்ரிபுரஹர நிர்மால்ய விமுகை: ।*
*விஶாகேந்த்ரோபேந்த்ரை: ஶஶிவிஶத கர்பூர ஶகலா:*
*விலீயந்தே மாத: தவ வதந தாம்பூல கபலா: ॥*

**हे मातः** - ஹே தாயே! **रणे**-யுத்தத்தில், **दैत्यान्**-அஸுரர் களை, **जित्वा**-ஜெயித்துவிட்டு, **अपहृतशिरस्त्रैः** - தலைப்பாகை யைக்கையில் எடுத்துக்கொண்டவர்களாகவும், **कवचिभिः** - கவசங்களை தரித்தவர்களாகவும், **निवृत्तैः** -யுத்தத்திலிருந்து திரும்பினவர்களாகவும், **चण्डांशत्रिपुरहरनिर्माल्यविमुखैः** - சண்டிகேசருடைய பாகமாகிய பரமசிவனின் நிர்மால்யத்தில் ஆசையற்றவர்களாகவும் இருக்கிற, **विशाखेन्द्रोपेन्द्रैः** - குமார ஸ்வாமி, இந்திரன், விஷ்ணு இவர்களால், **शशिविशदकर्पूरशकलाः** - சந்திரனைப்போல் வெளுப்பான பச்சைக்கர்பூரத் துண்டுகளுடன்கூடிய, **तव**-உன்னுடைய, **वदनताम्बूलकबलाः** —வாயால் மெல்லப்பட்ட தாம்பூலகபளங்கள் **विलीयन्ते**-கடித்துச் சாப்பிடப்படுகின்றன.

குமாரஸ்வாமி தாரகாஸுரன் முதலிய அஸுரர்களை வென்று யுத்தத்திலிருந்து திரும்பிவரும்போது அம்பாளிடம் சென்றார். தலையில் அணிந்திருந்த தலைப்பாகையைமட்டும் தாயாருக்கு மரியாதை காட்டும் முறையில் கையில் எடுத்து வைத்துக்கொண்டார். கவசத்தை எடுக்கவில்லை. தகப்பனாரிடம் போனால் அவர் சண்டிகேசுவரனுக்காக ஏற்பட்ட நிர்மால்ய பாகத்தைத் தனக்குக்கொடுத்து விடுவார். சண்டிகேச்வரனுக்கு ஒன்றும் இல்லாமல் போய் விடும். அது நியாயமில்லை என்று எண்ணி அங்கு போகாமல் தாயாரிடம் சென்றார். தேவி தன்வாயில் நன்றாகக் கடித்து மென்ற தாம்பூலத்தை உமிழ்ந்தாள். அதைத்தான் சாப்பிட்டு குமாரஸ்வாமி உத்தமமான ஞானத்தை அடைந் தார் என்பது புராணக்கதை. ஆகவே தேவியின் தாம்பூல அவசிஷ்டத்திற்கு அவ்வளவு மஹிமை இருக்கிறது. (65)

(அ) தேவியினுடைய வாங்மாதுர்யம் :—

विपञ्चया गायन्ती विविधमपदानं पशुपते-
स्त्वयारब्धे वक्तुं चलितशिरसा साधुवचने ।
तदीयैर्माधुर्यैरपलपिततन्त्रीकलरवां
निजां वीणां वाणी निचुलयति चोलेन निभृतम् ॥

விபஞ்ச்யா காயந்தீ விவிதமபதாநம் பஶுபதே:
த்வயாரப்தே வக்தும் சலிதஶிரஸா ஸாது வசநே ।
ததீயை: மாதுர்யை: அபலபித தந்த்ரீ கலரவாம்
நிஜாம் வீணாம் வாணீ நிசுலயதி சோளேன நிப்ருதம் ॥

**हे भगवति**–ஹே பரதேவதையே! **पशुपतेः**–சிவனுடைய, **विविधं**–பலவிதமான, **अपदानं**–வீரச்செயலை, **विपञ्चया**–வீணை யில், **गायन्ती**–பாடுகின்ற, **वाणी**–ஸரஸ்வதி தேவியானவள், **चलितशिरसा**–தலையை அசைக்கின்ற, **त्वया**–உன்னால், **साधु-वचने**–'பேஷ்' என்ற வார்த்தையானது, **वक्तुं**–சொல்லுவ தற்கு, **आरब्धे (सति)**–ஆரம்பித்தவுடன், **तदीयैः माधुर्यैः**-அந்த வார்த்தைகளின் இனிமையால், **अपलपिततन्त्रीकलरवां**–பரிஹ

ஸிக்கப்பட்ட தந்தியின் சப்தத்தோடு கூடின, **निजां वीणां**-தன் வீணையை, **चोलेन**-உறையால், **निभृतं**-சப்தமில்லாதது தாக, **निचुलयति**-மூடிவைக்கிறாள்.

கலைமகளின் ஸங்கீதத்தைக் கேட்டு "வெகு அழகாய் இருக்கிறது" என்று சொன்ன தேவியின் பேச்சு தன் வீணாகானத்தைவிட இனிமையாயிருப்பதைக் கண்டு ஸரஸ்வதி தன் வீணையை உறையில் இடுகிறாள் என்பது தாத்பர்யம். "நிஜஸல்லாப மாதுர்ய வினிர்பர்த்ஸித கச்சபீ" (**निजसल्लापमाधुर्यविनिर्भर्त्सितकच्छपी**) என்று லலிதா ஸஹஸ்ர நாமத்தில் சொல்லப்படுகிறது. "பும்ஸ்கோகில கலக்வாண கோமலாலாபஶாலினி" (**पुंस्कोकिलकलक्वाणकोमलालापशालिनि**) என்று த்ரிபுரஸுந்தரீ வேதபாத ஸ்தோத்திரத்தில் (சு. 26) சொல்லப்பட்டிருப்பதும் கவனிக்கத்தக்கது. (66)

(அ) தேவியின் முகவாய் கட்டையின் வர்ணனை:—

**कराग्रेण स्पृष्टं तुहिनगिरिणा वत्सलतया**
**गिरीशेनोदस्तं मुहुरधरपानाकुलतया ।**
**करग्राह्यं शंभोर्मुखमुकुरवृन्तं गिरिसुते**
**कथंकारं ब्रूमस्तव चुबुकमौपम्यरहितम् ॥ ६७ ॥**

கராக்ரேண ஸ்ப்ருஷ்டம் துஹிநகிரிணா வத்ஸலதயா
கிரீஶேநோதஸ்தம் முஹுரதர பாநாகுலதயா ।
கர க்ராஹ்யம் ஶம்போ: முக முகுரவ்ருந்தம் கிரிஸுதே
கதம்காரம் ப்ரூம: தவ சுபுகம் ஔபம்ய ரஹிதம் ॥

**हे गिरिसुते**-ஹே பர்வதகுமாரியே! **तुहिनगिरिणा**-ஹிமவானால், **वत्सलतया** வாத்ஸல்யத்துடன், **कराग्रेण**-நுனிக்கையால், **स्पृष्टं**-தொடப்பட்டதாயும், **गिरीशेन**-பரமசிவனால், **अधरपानाकुलतया**-அதரபானம் செய்வதில் ஆசைகொண்ட காரணத்தினால், **मुहुरुदस्तं**-அநேகம் தடவைகள் தூக்கப்பட்டதாயும், **शंभोः**-பரமேச்வரனுடைய, **करग्राह्यं**-கையால் பிடிக்கத்தக்கதாயும், **औपम्यरहितं**-உவமையில்லாததாயும், **मुखमुकुरवृन्तं**-

முகமாகிய கண்ணாடிக்குப் பிடிபோல் இருக்கிறதாயும் உள்ள **तव चुबुकं**-உன்னுடைய முகவாய் கட்டையை, **कथंकारं**-எந்த விதத்தில், **ब्रूमः** – சொல்வோம்.

தேவியின் முகவாய்க் கட்டையை வாத்ஸல்யத்தினால் தகப்பனாரான ஹிமவான் தொடலாம். பத்னி என்ற பிரியத்தால் பரமசிவன் தொடலாம். மற்றவர் தொட முடியாது. கண்ணாடிபோல் இருக்கும் முகத்திற்குப் பிடிபோல் இருக்கிறது முகவாய்கட்டை. ஹிமவானால் தொடப்பட்டதாயும் பரமேச்வரனால் நிமிர்த்தப்பட்டதாயுமுள்ள இதற்கு உவமையே இல்லை என்று கூறுகிறார். "அநாகலித ஸாத்ருச்ய சுபுகஸ்ரீ விராஜிதா" (**अनाकलितसादृश्यचुबुकश्री-विराजिता**) என்று லலிதா ஸஹஸ்ரநாமம் சொல்லுகிறது.

(அ) தேவியின் கழுத்து வர்ணிக்கப்படுகிறது:—

**भुजाश्लेषान्नित्यं पुरदमयितुः कण्टकवती**
**तव ग्रीवा धत्ते मुखकमलनालश्रियमियम् ।**
**स्वतः श्वेता कालागुरुबहुलजम्बालमलिना**
**मृणालीलालित्यं वहति यदधो हारलतिका ॥ ६८ ॥**

புஜாச்லேஷாத் நித்யம் புர தமயிது: கண்டகவதீ
தவ க்ரீவா தத்தே முககமல நாள ச்ரியமியம் ।
ஸ்வத: ச்வேதா காலாகுரு பஹுள ஜம்பால மலிநா
ம்ருணாலீ லாலித்யம் வஹதி யததோ ஹார லதிகா ॥

**हे भगवति**-ஹே பகவதியே! **तवेयं ग्रीवा**-உன்னுடைய இந்தக் கழுத்து, **पुरदमयितुः** – பரமேச்வரனுடைய, **भुजाश्लेषात्** கையால் செய்யும் ஆலிங்கனத்தினால், **नित्यं**-எப்பொழுதும், **कण्टकवती**-முள்ளோடு கூடினதாய், **मुखकमलनालश्रियं**-முகம் என்கிற தாமரைக்காம்பின் சோபையை, **धत्ते**-தரிக்கிறது, **यत्**-எந்த காரணத்தால், **अधः** – கீழ்பாகத்தில், **स्वतः श्वेता**-இயற்கையில் வெளுப்பாயுள்ள, **हारलतिका**-முத்து மாலையானது, **कालागुरुबहुलजम्बालमलिना सती** – அகருக்கட்டைப்

பொடிகள் அதிகமாகச் சேர்த்து குழைக்கப்பட்டதால் கருப்பாக மாறினதாக, **मृणालीलालित्यं**–தாமரைக் கொடியின் சோபையை, **वहति**–வஹிக்கிறதோ !

தேவியின் முகம் என்கிற தாமரைக்குக்கழுத்து என்பது அடித்தண்டுபோல் இருக்கிறது. பரமசிவன் தேவியின் கழுத்தை அடிக்கடி ஆலிங்கனம் செய்வதால் ரோமாஞ்சம் ஏற்பட்டு முள்ளோடு கூடின தண்டுமாதிரி இருக்கிறது. தேவி கழுத்தில் அணிந்திருக்கும் முத்துமாலை வெளுப்பாக இருந்தபோதிலும் அகருப்பொடி அதிகமாகச் சேர்த்துக் குழைக்கப்பட்ட சந்தனப்பூச்சால் கருப்புநிறமாக மாறி இருக்கிறது. ஆகவே அந்த முத்துமாலை சேற்றில் முளைத்த தாமரைக்கொடிபோல் காக்ஷியளிக்கிறது. (68)

(அ) தேவியின் கழுத்தில் காணப்படும் மூன்று ரேகைகள் வர்ணிக்கப்படுகின்றன:—

**गले रेखास्तिस्रो गतिगमकगीतैकनिपुणे**
**विवाहव्यानद्धप्रगुणगुणसंख्याप्रतिभुवः ।**
**विराजन्ते नानाविधमधुररागाकरभुवां**
**त्रयाणां ग्रामाणां स्थितिनियमसीमान इव ते ॥ ६९ ॥**

களே ரேகா: திஸ்ரோ கதிகமககீதைகநிபுணே
விவாஹவ்யாநத்த ப்ரகுணகுண ஸங்க்யா ப்ரதிபுவ: ।
விராஜந்தே நாநாவிதமதுரராகாகரபுவாம்
த்ரயாணாம் க்ராமாணாம் ஸ்திதி நியமஸீமாந இவ தே ॥

**गतिगमकगीतैकनिपुणे**–கதிகளுடனும் கமகங்களுடனும் பாடுவதில் சிறந்த பாண்டித்யம் உள்ளவளே! **ते गले**–உன் கழுத்தில் இருக்கிற, **तिस्रः रेखाः**–மூன்று ரேகைகள், **विवाहव्यानद्धप्रगुणगुणसंख्याप्रतिभुवः**–விவாஹ காலத்தில் கழுத்தில் கட்டப்பட்ட ஸூத்ரம் மூன்று சரடுகளால் முறுக்கப்பட்டது என்பதை ஞாபகப்படுத்துவதாகவும், **नानाविधमधुररागाकरभुवां**–அநேகவிதமான அழகான ராகங்

களுக்கு இருப்பிடமாகவும், **त्रयाणां ग्रामाणां** – மூன்று க்ராமங் களுடைய, **स्थितिनियमसीमान इव** – இருப்பை ஒன்ருே டொன்று கலக்காமல் இருக்கும்படி வரம்புபோல் **विराजन्ते** – ப்ரகாசிக்கின்றன.

தேவியின் கழுத்தில் மூன்று ரேகைகள் காணப்படு கின்றன. ஸாமுத்ரிகா சாஸ்திரப்படி இது உத்தம ஸ்த்ரீ களுக்கு உள்ள லக்ஷணம். இந்த ரேகைகள் இரண்டுவித மாக உத்ப்ரேக்ஷை செய்யப்படுகின்றன. தேவியின் கல்யாணத்தின்போது மாங்கல்ய ஸூத்ரத்துடன் வேறு ஒரு ஸூத்ரமும் கழுத்தில் கட்டப்பட்டுள்ளது. அது மூன்று சரடுகளால் முறுக்கப்பட்டது. இதை ஞாபகப்படுத்து வதற்காகவே மூன்று ரேகைகள் இருக்கின்றனவோ என்று முதல் உத்ப்ரேக்ஷை. தேவி ஸங்கீத சாஸ்திரத்தில் அஸா தாரண பாண்டித்யம் உள்ளவள். மார்க்கம், தேசி என்ற இரண்டு கதிகள், ஐந்துவிதமான கமகங்கள், எல்லாம் நன்ருகத் தெரிந்தவள். மதுரமான ரர்கங்கள் பல இருக் கின்றன. இவைகள் ஷட்ஜக்ராமம், மத்யக்ராமம், காந்தாரக்ராமம் என்ற மூன்று ஸ்தானங்களில் உத்பத்தி யாகின்றன. இந்த க்ராமங்கள் ஒன்ருேடொன்று கலக்கக் கூடாது. அவைகள் கலக்காமல் இருக்க எல்லையைக் காட்டுவதுபோல் இந்த மூன்று ரேகைகள் விளங்குகின்றன.

(அ) தேவியின் நான்கு கரங்களின் வர்ணனை:—

**मृणालीमृद्वीनां तव भुजलतानां चतसृणां**
**चतुर्भिः सौन्दर्यं सरसिजभवः स्तौति वदनैः ।**
**नखेभ्यः संत्रस्यन् प्रथममथनादन्धकरिपो-**
**श्चतुर्णां शीर्षाणां सममभयहस्तार्पणधिया ॥ ७० ॥**

ம்ருணாளீ ம்ருத்வீநாம் தவ புஜ லதாநாம் சதஸ்ருணாம்
சதுர்பி: ஸௌந்தர்யம் ஸரஸிஜபவ: ஸ்தௌதி வதனை:।
நகேப்ய: ஸந்த்ரஸ்யன் ப்ரதம மதநா தந்தக ரிபோ:
சதுர்ணாம் ஶீர்ஷாணாம் ஸமமபய ஹஸ்தார்பண தியா॥

**हे भगवति** - ஹே பராசக்தியே! **तव** - உன்னுடைய, **मृणालीमृद्वीनां**-தாமரைக் கொடிகளைப்போல் மிருதுவான, **चतसृणां** - நான்கு, **भुजलतानां** - கொடிகளைப்போன்ற கைகளுடைய, **सौन्दर्य**- அழகை, **सरसिजभवः**- ப்ரம்மா, **चतुर्भिः वदनैः** - நான்கு முகங்களால் **प्रथममथनात्** - (ஐந்தாவது) தலையை முன்னால் கிள்ளிவிட்ட காரணத்தினால், **अन्धकरिपोः** - பரமசிவனுடைய, **नखेभ्यः** - நகங்களிலிருந்து, **सन्त्रस्यन्** - பயந்தவராக, **चतुर्णां** - நான்கு, **शीर्षाणां** – தலைகளுக்கு, **समं**- ஒரே ஸமயம், **अभयहस्तार्पणधिया** - அபயஹஸ்தத்தைக்கொடுத்துக் காப்பாற்றவேண்டும் என்ற எண்ணத்துடன், **स्तौति**- துதிக்கிறார்.

ப்ரம்மாவுக்கு முதலில ஐந்து தலைகள் இருந்தன. பரமசிவனின் சிரஸ்ஸைப் பார்க்காமலேயே பார்த்து விட்டேன் என்று பொய் சொன்னதற்காக பொய் சொன்ன தலையைப் பரமசிவன் தன் கை நகங்களால் கிள்ளி எறிந்து விட்டார். மிஞ்சி இருக்கும் நான்கு தலைகளுக்கும் ஆபத்துவராமல் இருப்பதற்காக, தேவி தன் மிருதுவான நான்கு கைகளைக் கொண்டு அபயம் கொடுத்து ரக்ஷிக்க வேண்டுமென்று தேவியை ஸ்தோத்திரம் செய்கிறார். (70)

(அ) தேவியின் கை விரல்களின் வர்ணனை :—

**नखानामुद्योतैर्नवनलिनरागं विहसतां**
**कराणां ते कान्तिं कथय कथयामः कथमुमे ।**
**कयाचिद्वा साम्यं भजतु कलया हन्त कमलं**
**यदि क्रीडल्लक्ष्मीचरणतललाक्षारसचणम् ॥ ७१ ॥**

நகானும் உத்யோதை: நவநளினராகம் விஹஸதாம்
கராணும் தே காந்திம் கதய கதயாம: கதமுமே ।
கயாசித்வா ஸாம்யம் பஜது கலயா ஹந்த கமலம்
யதி க்ரீடல்லக்ஷ்மீ சரணதல லாக்ஷா ரஸ சணம் ॥

**हे उमे** ஹே பார்வதியே! **नखानां** - நகங்களுடைய, **उद्योतैः**- காந்திகளால்; **नवनलिनरागं** - புதிதாக மலர்ந்த தாம

ரையின் சோபையை, विहसतां - பரிஹசிக்கின்ற, ते - உன்னுடைய, कराणां - கைகளுடைய, कान्ति - காந்தியை, कथं - எப்படி, कथयामः - சொல்லுவோம்! कथय - நீயே சொல். हन्त கஷ்டம், कमलं-தாமரைப்புஷ்பம், यदि क्रीडल्लक्ष्मीचरणतललाक्षा-रसचणं - தன்னிடத்தில் வாஸம்செய்கிற லக்ஷ்மீ தேவியினுடைய பாதத்தில் ப்ரகாசிக்கும் மருதாணியின் காந்தியோடு விளங்குமேயானால், कयाचिद्वा कलया - ஏதாவது ஒருஅம்சத்தில், साम्यं - ஸாத்ருச்யத்தை भजतु - அடையட்டும்.

தேவியின நகங்களின் காந்தியால் அவள் கைகளும் அதிக தேஜஸ்ஸுடன் விளங்குகின்றன. அதற்கு ஸமமாகச் சொல்லுவதற்கு ஒன்றுமே இல்லை. தாமரையைச் சொல்லலாமோ என்றால் அதுவும ஸரி இல்லை. லக்ஷ்மீதேவி தாமரையில் வஸிப்பவள். அவள் காலில இட்டுக்கொண்டிருக்கும் மருதாணியின் சோபை தாமரையில் பட்டால் அதற்குச் சிறிது அதிகமான சோபை ஏற்படும். அப்படியும் ஒரு ஏகதேசமான அம்சத்தில்தான் தேவியின் கைகளின் சோபைக்கு ஸமமாக அதைச சொல்லலாம். (71)

(அ) அடுத்துவரும் நான்கு ச்லோகங்களில தேவியின் ஸ்தனவர்ணனை :—

समं देवि स्कन्दद्विपवदनपीतं स्तनयुगं
तवेदं नः खेदं हरतु सततं प्रस्नुतमुखम् ।
यदालोक्याशङ्काकुलितहृदयो हासजनकः
स्वकुम्भौ हेरम्बः परिमृशति हस्तेन झटिति ॥ ७२ ॥

ஸமம் தேவி ஸ்கந்த த்விபவதந பீதம் ஸ்தந யுகம்
தவேதம் ந: கேதம் ஹரது ஸததம் ப்ரஸ்னுத முகம் ।
யதாலோக்யாசங்காகுலித ஹ்ருதயோ ஹாஸ ஜநக:
ஸ்வகும்பௌ ஹேரம்ப: பரிம்ருசதி ஹஸ்தேன ஜடிதி ॥

हे देवि - ஹே தேவியே! समं - ஏககாலத்தில், स्कन्द-द्विपवदनपीतं - குமாரஸ்வாமியாலும் யானைமுகத்தோனாலும்,

அருந்தப்பட்ட **प्रस्नुतमुखं** - பால்பெருகுகிற நுனிகளோடு கூடின, **इदं** - இந்த **तव** - உன்னுடைய **स्तनयुगं** - இரு ஸ்தனங்கள், **नः** - எங்களுடைய, **खेदं** - துயரத்தை, **सततं** - எப்பொழுதும், **हरतु** - போக்கட்டும். **यत्** - யாதொரு ஸ்தனங்களை, **आलोक्य** - பார்த்து, **आशङ्काकुलितहृदयः सन्** - சங்கையினால் கலங்கின மனதுடன் கூடிய, **हेरम्बः** - விநாயகர், **हासजनकः** - சிரிப்பையுண்டு பண்ணுகிறவராய், **झटिति** - சீக்கிரம், **स्वकुम्भौ** - தன் மஸ்தகங்களை **हस्तेन** - கையினால் **परिमृशति** - தடவிப்பார்க்கின்றாரோ !

தேவியின் ஸ்தனங்களுக்கு ஸமமாகச் சொல்லக் கூடியவை யானைமுகத்தோனின் தலையிலிருக்கும் இரு கும்பங்கள்தான். "ஹஸ்திகும்போத்துங்ககுசா" (**हस्तिकुम्भोत्तुङ्गकुचा**) என்று லலிதாத்ரிசதீ ஸ்தோத்திரத்தில் சொல்லியிருப்பது கவனிக்கத்தககது. (72)

**अमू ते वक्षोजावमृतरसमाणिक्यकुतुपौ**
**न संदेहस्पन्दो नगपतिपताके मनसि नः ।**
**पिबन्तौ तौ यस्मादविदितवधूसङ्गरसिकौ**
**कुमारावद्यापि द्विरदवदनक्रौञ्चदलनौ ॥ ७३ ॥**

அமூ தே வக்ஷோஜௌ அம்ருதரஸ மாணிக்ய குதுபௌ
ந ஸந்தேஹ ஸ்பந்தோ நகபதி பதாகே மனஸி ந: ।
பிபந்தௌ தௌ யஸ்மாத் அவிதித வதூஸங்க ரஸிகௌ
குமாரௌ அத்யாபி த்விரதவதந க்ரௌஞ்சதளநௌ ॥

**हे नगपतिपताके** - ஹிமவானை பிரஸித்த புருஷனாக ஆக்கும் விஷயத்தில் அவருடைய கொடி போன்றவளே ! **ते** - உன்னுடைய, **अमू** - இந்த, **वक्षोजौ** - இரு ஸ்தனங்களும், **अमृतरसमाणिक्यकुतुपौ** - அமிருத ரஸத்தால் நிரப்பப்பட்ட மாணிக்கக்குடுக்கைகள். (இதில்) **नः** - எங்களுடைய, **मनसि** மனதில், **सन्देहस्पन्दः** - ஸந்தேஹ லேசமும், **न** கிடையாது. **यस्मात्** யாதொரு காரணத்தால் **तौ** அந்த ஸ்தனங்களை,

**पिबन्तौ** அருந்துகின்ற, **द्विरदवदनक्रौञ्चदलनौ** விநாயகரும், குமாரஸ்வாமியும், **अविदितवधूसङ्गरसिकौ** ஸ்த்ரீ ஸங்கத்தை அறியாதவர்களாகவே இருந்து கொண்டு, **अद्यापि** இப்பொழுதும் **कुमारौ** குழந்தைகளாகவே இருக்கிறார்கள்

தேவியின் ஸ்தன்யபானம் செய்த கணபதியும் ஸுப்ரமண்யனும் அவஸ்தாபேதமில்லாமல் இன்றைக்கும் சைசவத்திலேயே இருக்கிறார்கள். அதாவது, உத்தமமான ப்ரம்மஞானத்தை அடைந்து "பாலயேன திஷ்டாஸேத்" (**बाल्येन तिष्ठासेत्**) என்று உபநிஷத்தில சொல்லியிருக்கிறபடி லோகவ்யவஹாரத்திலேயே ப்ரவ்ருத்தி இல்லாமல இருக்கிறார்கள். (73)

**वहत्यम्ब स्तम्बेरमदनुजकुम्भप्रकृतिभिः**
**समारब्धां मुक्तामणिभिरमलां हारलतिकाम् ।**
**कुचाभोगो बिम्बाधररुचिभिरन्तः शबलितां**
**प्रतापव्यामिश्रां पुरदमयितुः कीर्तिमिव ते ॥ ७४ ॥**

வஹத்யம்ப ஸ்தம்பேரம தனுஜ கும்ப ப்ரக்ருதிபி:
ஸமாரப்தாம் முக்தாமணிபிரமலாம் ஹார லதிகாம் ।
குசாபோகோ பிம்பாதர ருசிபி: அந்த: ஶபலிதாம்
ப்ரதாப வ்யாமிச்ராம் புர தமயிது: கீர்த்திமிவ தே ॥

**हे अम्ब** ஹே தாயே! **ते** உன்னுடைய, **कुचाभोगः** ஸ்தனங்களுடைய மத்ய பிரதேசம், **स्तम्बेरमदनुजकुंभप्रकृतिभिः** கஜாஸுரனுடைய கும்பஸ்தலங்களில் உண்டான **मुक्तामणिभिः** நல்முத்துக்களால், **समारब्धां** கட்டப்பட்டதாயும், **अमलां** நிர்மலமாயும், **बिम्बाधररुचिभिः** கோவைப்பழத்தைப் போல் சிவந்த உதடுகளின் சோபையால் **अन्तःशबलितां** உள்புறம் சித்ரவர்ணத்துடன் கூடினதாயும் இருக்கிற, **हारलतिकां** முத்து மாலையை, **प्रतापव्यामिश्रां** பிரதாபத்துடன் கூடிய, **पुरदमयितुः** த்ரிபுர ஸம்ஹாரம்செய்த பரமசிவனுடைய **कीर्तिमिव** கீர்த்தியைப் போல், **वहति** தரித்துக் கொண்டு இருக்கிறது.

தேவி தன் மார்பில் அணிந்திருக்கும் முத்துமாலை இயற்கையாகவே வெண்மை நிறமுள்ளது. தேவியின் கோவைப்பழம்போல் சிவப்பான உதடுகளின் காந்தி அதன்மேல் வீசி அந்த முத்துமாலை வெளுப்பும் சிவப்பும் கலந்து சித்ர வர்ணத்துடன் விளங்குகிறது. த்ரிபுர ஸம்ஹாரம் செய்ததின் நிமித்தமாக பரமசிவனுக்கு ஏற்பட்ட கீர்த்தி கோபத்துடன் ஸம்பந்தப்பட்டதால் சிவப்பும் வெளுப்பும் கலந்த சித்ரவர்ணமாக இருந்தது. தேவியின் முத்துமாலையின் சித்ரவர்ணம் சிவனின் கீர்த்தியோ என்று உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறது. (74)

तव स्तन्यं मन्ये धरणिधरकन्ये हृदयतः
पयःपारावारः परिवहति सारस्वतमिव ।
दयावत्या दत्तं द्रविडशिशुरास्वाद्य तव यत्
कवीनां प्रौढानामजनि कमनीयः कवयिता ॥ ७५ ॥

தவ ஸ்தன்யம் மந்யே தரணிதரகன்யே ஹ்ருதயத:
பய:பாராவார: பரிவஹதி ஸாரஸ்வதமிவ ।
தயாவத்யா தத்தம் த்ரவிடஶிஶு: ஆஸ்வாத்ய தவ யத்
கவீநாம் ப்ரௌடாநாம் அஜனி கமநீய: கவயிதா ॥

**हे धरणिधरकन्ये** ஹே ஹிமவானுடைய புத்திரியே! **तव स्तन्यं** உன்னுடைய ஸ்தனங்களிலிருந்து பெருகும் பால் **हृदयतः** ஹ்ருதயத்திலிருந்து வந்த **पयःपारावारः** பாற்கடல்போலவும், **सारस्वतमिव** ஸரஸ்வதி ஸம்பந்தமான ஞானப் பெருக்கு போலவும், **परिवहति** பிரவஹிக்கிறது **इति मन्ये** என்று எண்ணுகிறேன். **यत्** யாதொரு காரணத்தால், **दयावत्या** தயையுடன் கூடின **त्वया दत्तं** உன்னால் கொடுக்கப்பட்ட, **तव** உன்னுடைய (ஸ்தன்யத்தை) **आस्वाद्य** பானம் செய்து, **द्रविडशिशुः** த்ரவிட தேசத்தில் பிறந்த குழந்தை **प्रौढानां**-உயர்ந்த, **कवीनां** புலவர்களுக்குள், **कमनीयः** மனோஹரமான, **कवयिता** கவியாக **अजनि** ஆகிவிட்டாரோ!

தேவியின் ஸ்தனம் ஞானக்கடலாக பாவிக்கப்படுகிறது. தேவியின் தயையால் யாருக்கு அந்த ஸ்தன்ய பானம் கிடைக்கிறதோ, அவர் உத்தமமான கவியாக விளங்குவார். ஞானஸம்பந்தர் திருஷ்டாந்தமாக சொல்லப் படுகிறார். "த்ரவிடசிசு:" (द्रविडशिशुः) என்று தன்னையே பகவத்பாதாள் சொல்லிக்கொள்கிறார் என்பது உசிதமாகத் தோன்றவில்லை. "உத்தமமான புலவர்களுக்குள் சிரேஷ்டராக விளங்குகிறார்" என்று தன்னைத்தானே யாரும் சொல்லிக்கொள்ள மாட்டார்கள். 'पयःपारावारः' (பய: பாராவார:) என்னுமிடத்தில் 'सुधाधारासार.' (ஸுதாதாரா ஸார:) என்னும் பாடாந்தரம் சில பிரதிகளில் காணப்படுகிறது. அதற்கு அமிருத பிரவாஹம் என்று அர்த்தம். (75)

(அ) தேவியின் நாபி பிரதேசம் வர்ணிக்கப்படுகிறது:-

**हरक्रोधज्वालावलिभिरवलीढेन वपुषा**
**गभीरे ते नाभीसरसि कृतसङ्गो मनसिजः ।**
**समुत्तस्थौ तस्माद्चलतनये धूमलतिका**
**जनस्तां जानीते तव जननि रोमावलिरिति ॥ ७६ ॥**

ஹர க்ரோத ஜ்வாலாவளிபி: அவலீடேன வபுஷா
கபீரே தே நாபீ ஸரஸி க்ருத ஸங்கோ மநஸிஜ: !
ஸமுத்தஸ்தௌ தஸ்மாத் அசலதநயே தூம லதிகா
ஜநஸ்தாம் ஜாநீதே தவ ஜநனி ரோமாவளிரிதி ॥

**हे अचलतनये**–ஹே ஹிமவானின்புத்திரியே! **मनसिजः**–மன்மதன் **हरक्रोधज्वालावलिभिः**–சிவனுடைய கோபாக்னி ஜ்வாலையின வரிசைகளால், **अवलीढेन**–சூழப்பட்ட, **वपुषा**–தேஹத்துடன் **ते**–உன்னுடைய, **गभीरे**–ஆழமான, **नाभीसरसि**–தொப்புள் என்ற குளத்தில், **कृतसङ्गः**–சேர்க்கை அடைந்தான். **तस्मात्**–அந்த குளத்திலிருந்து, **धूमलतिका**–கொடி போன்ற புகையானது, **समुत्तस्थौ**–உயரக்கிளம்பிற்று. **तां**–அதை, **जनः**–உலகம், **हे जननि**–ஹே தாயே! **तव रोमावलिः**–உன்னுடைய நாபி பிரதேசத்தில் தோன்றும் ரோம வரிசை, **इति**–என்று, **जानीते**–எண்ணுகிறது.

தபஸ் செய்துகொண்டிருந்த சிவனை காமவிகாரம் அடையும்படியாக மன்மதன் செய்தான். சிவனுக்கு மஹத்தான கோபம் ஏற்பட்டு தன் நெற்றிக்கண்ணால் அவனை எரித்தார். அக்னி ஜ்வாலைகளால் சூழப்பட்டு மன்மதன் தேவியின் நாபி என்னும் குளிர்ச்சியான தடாகத்தில் சரண் அடைந்தான். அதிலிருந்து புகை கிளம்புகிறது. தேவியின் நாபி பிரதேசத்தில் காணப்படும் ஸூக்ஷ்மமான ரோம வரிசையானது அங்கு தங்கியுள்ள காமனைச் சூழ்ந்துள்ள நெருப்பிலிருந்து கிளம்பும் புகையோ என்று உத்ப்ரேக்ஷிக்கப் படுகிறது. (76)

(அ) தேவியின் இடுப்பு பிரதேசத்தில் காணப்படும் ஸூக்ஷ்மமான ரோமாவளி வர்ணிக்கப்படுகிறது:—

यदेतत्कालिन्दीतनुतरतरङ्गाकृति शिवे
कृशे मध्ये किंचिज्जननि तव यद्भाति सुधियाम् ।
विमर्दादन्योन्यं कुचकलशयोरन्तरगतं
तनूभूतं व्योम प्रविशदिव नाभिं कुहरिणीम् ॥ ७७ ॥

யதேதத் காளிந்தீ தனுதர தரங்காக்ருதி ஶிவே
க்ருஶே மத்யே கிஞ்சித் ஜனனி தவ யத் பாதி
ஸுதியாம் ।
விமர்தாத் அந்யோன்யம் குசகலஶயோ: அந்தரகதம்
தனூபூதம் வ்யோம ப்ரவிஶதிவ நாபிம் குஹரிணீம் ॥

**हे शिवे**-ஹே சிவ பத்னி! **जननि**-தாயே! **तव**-உன்னுடைய, **कृशे मध्ये**-மெல்லிய இடுப்பில், **यदेतत्**-இந்த, **कालिन्दीतनुतरतरङ्गाकृति**-யமுனா நதியில் காணப்படும் சிறிய அலைபோன்ற வடிவமுள்ள, **यत्किञ्चित्**-ஒரு வஸ்துவானது (ரோமாவளி) **सुधियां**-புத்திமான்களுக்கு, **भाति**-புலப்படுகிறதோ, **तत्**-அது, **कुचकलशयोः अन्तरगतं**-கலசங்கள் போன்ற இரண்டு ஸ்தனங்களுக்கும் மத்தியிலிருக்கும், **तनूभूतं**-மிகவும் சிறியதான, **व्योम**-ஆகாசமானது, **अन्योन्य**-ஸ்தனங்கள் ஒன்றோடொன்று **विमर्दात्**-உரைவதினால்,

**कुहरिणी**–த்வாரமுள்ள, **नाभिं**–தொப்புள் குழியை, **प्रविशदिव**–நுழைவதுபோல், **भाति**–தோன்றுகிறது.

தேவியின் இடுப்பு பிரதேசத்தில் கீழ்நோக்கி இருக்கும் ரோமாவளியானது இரு ஸ்தனங்கள் நெருங்கி உரைவதினால் இரண்டுக்கும் நடுவிலுள்ள சிறிய இடைவெளி அங்கிருந்து தள்ளப்பட்டு தொப்புள் குழியில் பிரவேசிக்கின்றதோ என்று உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது. (77)

(அ) தேவியின் நாபி பிரதேசம் பலவிதமாக உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது:—

**स्थिरो गङ्गावर्तः स्तनमुकुलरोमावलिलता-**
**कलावालं कुण्डं कुसुमशरतेजोहुतभुजः ।**
**रतेर्लीलागारं किमपि तव नाभिर्गिरिसुते**
**बिलद्वारं सिद्धेर्गिरिशनयनानां विजयते ॥ ७८ ॥**

ஸ்திரோ கங்காவர்த: ஸ்தநமுகுள ரோமாவளி லதா
கலாவாலம் குண்டம் குஸுமஶர தேஜோ ஹுதபுஜ: ।
ரதே: லீலாகாரம் கிமபி தவ நாபி: கிரிஸுதே
பிலத்வாரம் ஸித்தே: கிரிஶ நயனானாம் விஜயதே ॥

**हे गिरिसुते**–ஹே பர்வத குமாரியே! **तव नाभिः**–உன் நாபியானது, **स्थिरो गङ्गावर्तः**–சலனமில்லாத கங்கா நதியின் சுழலாகவும், **स्तनमुकुलरोमावलिलताकलावालं**–கொங்கைகளாகிற தாமரை மொட்டுக்களுடைய ரோமாவளி என்ற கொடிகளின் தண்டுகளுக்கு பாத்தியாகவும் **कुसुमशरतेजोहुतभुजः**–மன்மதனின் தேஜஸ் என்னும் அக்னிக்கு, **कुण्डं**–ஹோம குண்டமாயும், **रतेः**–ரதிதேவிக்கு, **लीलागारं**–விஹார பூமியாயும், **गिरिशनयनानां**–பரமசிவனுடைய கண்களுக்கு, **सिद्धेः**–தபஸ் ஸித்தி, **बिलद्वारं**–வெளிக்கிளம்பும் பிலத்வாரமாகவும், **किमपि**–வர்ணிக்கமுடியாத அழகுடன், **विजयते**–பிரகாசிக்கிறது.

தேவியின் நாபி பிரதேசம் வர்ணிக்கமுடியாதபடி அழகுடன் விளங்குகிறது. அது கங்காநதியில் தோன்றும் சலனமில்லாத சுழலோ, அல்லது ஸ்தனங்கள் என்ற தாமரை மொட்டுக்களின் அடிக்கிழங்குகளுக்குப் பாத்தியோ, அல்லது மன்மதனுடைய தேஜஸ் என்ற அக்னிக்கு ஹோம குண்டமோ, அலலது ரதிதேவியின் விளையாட்டு பிர தேசமோ, அல்லது பரமசிவனின் கண்களுக்கு அவை செய்யும் தபஸ்ஸின் ஸித்திகள் வெளிவரும் பிலத்வாரமோ என்று பலவிதமாக உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது. “ நாப்யாலவால ரோமாளி லதாபல குசத்வயீ ” (**नाभ्यालवाल-रोमालिलताफलकुचद्वयी**) என்று லலிதா ஸஹஸ்ரநாமத்தில் காணப்படும் வாக்கியம் கவனிக்கத்தக்கது. (78)

(அ) தேவியின் இடை வர்ணிக்கப்படுகிறது :—

**निसर्गक्षीणस्य स्तनतटभरेण क्लमजुषो**
**नमन्मूर्तेर्नारीतिलक शनकैस्त्रुट्यत इव ।**
**चिरं ते मध्यस्य त्रुटिततटिनीतीरतरुणा**
**समावस्थास्थेम्नो भवतु कुशलं शैलतनये ॥ ७९ ॥**

நிஸர்க்க க்ஷீணஸ்ய ஸ்தநதட பரேண க்லமஜுஷோ
நமன்மூர்த்தே: நாரீதிலக ஶநகை: த்ருட்யத இவ।
சிரம் தே மத்யஸ்ய த்ருடித தடிநீ தீர தருணா
ஸமாவஸ்தா ஸ்தேம்னோ பவது குஶலம் சைலதநயே ॥

**हे शैलतनये**-ஹே பர்வதராஜனின் குமாரியே! **नारीतिलक**-ஸ்த்ரீகளுக்குள் உத்தமமானவளே! **निसर्गक्षीणस्य**-இயற்கையாகவே மெலிந்திருப்பதும், **स्तनतटभरेण**—ஸ்தனங்களின் பாரத்தால், **क्लमजुषः**-ச்ரமத்தையடைந்ததும், **नमन्मूर्तेः**-(ஆகையால்) வளைந்த உருவமுள்ளதும், **शनकैः**—மெள்ள மெள்ள, **त्रुट्यत इव**-ஒடிந்துபோய் விடுமோ என்று எண்ணும் படியாயும், **त्रुटिततटिनीतीरतरुणा**-நதீவேகத்தால் இடிந்து போன கரையிலுள்ள மரத்தோடு, **समावस्थास्थेम्नः**—ஸம நிலையை அடைகிறதாயுமுள்ள, **ते**-உன்னுடைய, **मध्यस्य**-

இடுப்பிற்கு, चिरं-வெகுகாலம், कुशलं भवतु-க்ஷேமம் ஏற்படட்டும்.

தேவியின் அங்கவர்ணனைகள் எல்லாம் ஸாமுத்ரிகா சாஸ்திரத்தில் உத்தம ஸ்த்ரீகளுக்கு உள்ள லக்ஷணங்கள் என்று சொல்லப்பட்டிருப்பதை அனுஸரித்துச் செய்யப் பட்டிருக்கின்றன. தேவியின் இடுப்பு ஏற்கனவே மிகவும் மெலிந்தது. கொங்கைகளின் பாரம் தாங்காமல் சிறிது வளைந்திருக்கிறது. இதைப்பார்த்தால் நதீ ப்ரவாஹத்தினுல் அறுக்கப்பட்ட கரையின்மேல் சாய்ந்து, எப்பொழுது விழுந்துவிடுமோ என்று எண்ணக்கூடிய மரமோ என்று உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது. இடுப்பு ஒடிந்து விழாமல் இருக்கவேண்டும் என்று ஆசார்யாள் வேண்டுகிருர். (79)

(அ) தேவியின் இடுப்பு பிரதேசத்தில் காணப்படும் மூன்று மடிப்புகள் வர்ணிக்கப்படுகின்றன:—

कुचौ सद्यः स्विद्यत्तटघटितकूर्पासभिदुरौ
कषन्तौ दोर्मूले कनककलशाभौ कलयता ।
तव त्रातुं भङ्गादलमिति वलग्नं तनुभुवा
त्रिधा नद्धं देवि त्रिवलिलवलीवल्लिभिरिव ॥ ८० ॥

குசௌ ஸத்ய: ஸ்வித்யத் தட கடித கூர்பாஸ பிதுரௌ
கஷந்தௌ தோர்மூலே கநக கலசாபௌ கலயதா ।
தவ த்ராதும் பங்காத் அலமிதி வலக்னம் தநுபுவா
த்ரிதா நத்தம் தேவி த்ரிவலி லவலீ வல்லிபிரிவ ॥

हे देवि-ஹே தேவியே! सद्यः-அந்த க்ஷணத்திலேயே (தன் பர்த்தாவின் குணுதிசயங்களை எண்ணும்போதே), स्विद्यत्-வியர்வையுடன்கூடிய, तट-பக்க பாகங்களில், घटित-சேர்க்கப்பட்ட, कूर्पास-ரவிக்கையை, भिदुरौ-கிழிக்கிற தாயும், दोर्मूले-கக்ஷ பிரதேசத்தில், कषन्तौ-உரைகின்ற தாயும், कनककलशाभौ-தங்கக் குடங்களைப்போல் காந்தி உள்ளதுமான, कुचौ-கொங்கைகளை, कलयता-ஸ்ருஷ்டி

செய்த, **तनुभुवा**-மன்மதனுல், **भङ्गात्**-ஸ்தனபாரத்தால் ஏற்பட்ட வளைவால் இடுப்புக்கு ஒருவிதமான ஆபத்தும், **अलं**-வரவேண்டாம், **इति**-என்று உத்தேசித்து, **त्रातुं**-(அந்த இடுப்பை) காப்பாற்றுவதற்கு, **त्रिवलि**-சதையின் மூன்று மடிப்புகள் என்கிற, **लवलीवल्लिभिः**-வல்லிக்கொடிகளால், **तव वलग्नं**-உன்னுடைய இடுப்பானது, **त्रिधा नद्धं इव**-மூன்று சுற்றுக் கட்டப்பட்டதுபோல

நெற்றியிலும் கழுத்திலும், இடுப்பிலும், உத்தம ஸ்த்ரீகளுக்கு மூன்று மடிப்புகள இருக்கின்றனவென்று ஸாமுத்ரிகா சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. க்ருசமான தேவியின் இடுப்பு ஸ்தனபாரத்தால ஒடிந்து விழாமல் இருக்கவேண்டுமென்று மூன்று கொடிகள்போல் தோன்றும் மூன்று சதை மடிப்புகளால் சுற்றிக் கட்டப்பட்டிருக்கிறதோ என்று உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது. "ஸ்தநபாரதலன் மத்ய பட்டபந்தவலித்ரயா" (**स्तनभारदलन्मध्यपट्टबन्धवलित्रया**) என்று லலிதா ஸஹஸ்ர நாமத்தில் காணப்படும் வாக்யமும் இதே அபிப்ராயத்தைத் தெரிவிக்கிறது. (80)

(அ) தேவியின் ப்ருஷ்டபாகம் வர்ணிக்கப்படுகிறது:-

**गुरुत्वं विस्तारं क्षितिधरपतिः पार्वति निजा-**
**न्नितम्बादाच्छिद्य त्वयि हरणरूपेण निदधे ।**
**अतस्ते विस्तीर्णो गुरुरयमशेषां वसुमतीं**
**नितम्बप्राग्भारः स्थगयति लघुत्वं नयति च ॥ ८१ ॥**

குருத்வம் விஸ்தாரம் க்ஷிதிதரபதி: பார்வதி நிஜாத்
நிதம்பாதாச்சித்ய த்வயி ஹரணரூபேண நிததே ।
அதஸ்தே விஸ்தீர்ணோ குருரயம் அசேஷாம் வஸுமதீம்
நிதம்ப ப்ராக்பார: ஸ்தகயதி லகுத்வம் நயதி ச ॥

**हे पार्वति**-ஹே பார்வதியே! **क्षितिधरपतिः**-ஹிமவான், **गुरुत्वं**-கனமாக இருக்கும் தன்மையையும், **विस्तारं**-பரவலாக இருக்கும் தன்மையையும், **निजात्**-தன்னுடைய, **नितम्बात्**-

ப்ருஷ்டபாகத்திலிருந்து (தாழ்வரையிலிருந்து), **आच्छिद्य**-எடுத்து, **त्वयि**-உன்னிடத்தில், **हरणरूपेण** -ஸ்த்ரீ தனமாக, **निदधे**-கொடுத்தார். **अतः** -ஆகையால், **गुरुः** -கனமாயும், **विस्तीर्णः** -பரவலாயுமிருக்கிற, **ते**-உன்னுடைய, **अयं**-இந்த, **नितम्बप्राग्भारः**-ப்ருஷ்டபாகமானது, **अशेषां वसुमतीं** - பூமி முழுவதையும், **स्थगयति**-மறைக்கிறது **लघुत्वं च**-லேசாக இருக்கும் தன்மையையும், **नयति**-அடையச்செய்கிறது.

தேவியின் ப்ருஷ்ட பாகம் ஸாமுத்ரிகா சாஸ்திரப்படி மிகவும் கனமாகவும், விஸ்தாரமாகவும் இருக்கிறது. ஹிம்வான் தன் தாழ்வரையிலிருக்கும் கனத்தையும் விஸ்தீரணத்தையும் தன் குமாரிக்கு விவாஹ காலத்தில் அக்னியின் முன்பாக ஸ்த்ரீ தனமாகக் கொடுத்தாரோ என்று உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது. தேவியின் ப்ருஷ்ட பாகத்தின் விஸ்தீர்ணமும் கனமும் பூமியினுடைய விஸ்தீர்ணத்தையும் கனத்தையும்விட அதிகமாய் இருக்கிறதாகச் சொல்லப்பட்டிருப்பதால 'அதிசயோக்தி' என்ற அலங்காரமும் காணப்படுகிறது "நிதம்பஜித பூதராம்" (**नितम्बजितभूधरां**) என்று 'த்ரிபுரஸுந்த அஷ்டகத்தில்' சொல்லப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது. (81)

(அ) தேவியின் துடைகளும் முழங்கால்களும் வர்ணிக்கப்படுகின்றன :-

करीन्द्राणां शुण्डान् कनककदलीकाण्डपटली-
मुभाभ्यामूरुभ्यामुभयमपि निर्जित्य भवति ।
सुवृत्ताभ्यां पत्युः प्रणतिकठिनाभ्यां गिरिसुते
विधिज्ञे जानुभ्यां विबुधकरिकुम्भद्वयमसि ॥ ८२ ॥

கரீந்த்ராணாம் ஶுண்டான் கநககதலீகாண்டபடலீம்
உபாப்யாம் ஊருப்யாம் உபயமபி நிர்ஜித்ய பவதி ।
ஸுவ்ருத்தாப்யாம் பத்யு: ப்ரணதிகடிநாப்யாம் கிரிஸுதே
விதிஜ்ஞே ஜாநுப்யாம் விபுதகரிகும்பத்வயமஸி ॥

**हे विधिज्ञे**-வேத ஆக்ஞையை அறிந்தவளே! **हे गिरिसुते**-ஹே பர்வதகுமாரியே! **भवति**-ஸ்ரீமாட்டியே! **करीन्द्राणां**-உயர்ந்த யானைகளுடைய, **शुण्डान्** - துதிக்கைகள், **कनककदलीकाण्डपटलीं**-ஸ்வர்ணமயமான வாழைமரக் கூட்டம், **उभयमपि**-இவ்விரண்டையும், **उभाभ्यां ऊरुभ्यां**-இரண்டு துடைகளால், **निर्जित्य**-ஜயித்துவிட்டு, **सुवृत्ताभ्यां**-அழகான வட்ட வடிவமுள்ளதும், **पत्युः**-பர்த்தாவுக்கு, **प्रणतिकठिनाभ्यां**-நமஸ்காரம் செய்வதினால சிறிது கடினமாயும் இருக்கிற, **जानुभ्यां**-முழங்கால்களால், **विबुधकरिकुम्भद्वयं**-தேவயானையான ஐராவதத்தின் இரண்டு மஸ்தகங்களையும், (ஜயித்து விட்டு) **असि**-இருக்கிறாய்.

தேவியின் துடைகள் யானையின் துதிக்கையை விடப் பருமனாயும், ஸ்வர்ணமயமான வாழை மரத்தைவிட பளபளப்பாயும் இருக்கின்றன. தேவியின் முழங்கால்கள் அழகாகவும், வர்த்துளமாகவும், அடிக்கடி பர்த்தாவை நமஸ்காரம் செய்வதால் சற்று கடினமாகவும் இருக்கின்றன. இவைகள் ஐராவதத்தின் கும்பங்களையும் புறக்கணித்து விட்டன என்று சொல்லப்படுகிறது. (82)

(அ) ஜங்கா என்னும் முழங்காலுக்குக் கீழ் பாகம் வர்ணிக்கப்படுகிறது :—

**पराजेतुं रुद्रं द्विगुणशरगर्भौ गिरिसुते**
**निषङ्गौ जङ्घे ते विषमविशिखो बाढमकृत ।**
**यदग्रे दृश्यन्ते दशशरफलाः पादयुगली-**
**नखाग्रच्छद्मानः सुरमकुटशाणैकनिशिताः ॥ ८३ ॥**

பராஜேதும் ருத்ரான் த்விகுண ஶரகர்ப்பௌ கிரிஸுதே
நிஷங்கௌ ஜங்கே தே விஷம விஶிகோ பாடம்
அக்ருத ।
யதக்ரே த்ருச்யந்தே தஶஶர பலா: பாதயுகலீ-
நகாக்ரச்சத்மாந: ஸுரமகுட ஶாணைக நிஶிதா: ॥

**हे गिरिसुते**-ஹே பார்வதியே ! **विषमविशिख**:-மன்மதன், **रुद्रं**-பரமேச்வரனை, **पराजेतुं**-ஜயிப்பதற்கு, **ते जङ्घे**-உன்னுடைய முழங்காலுக்குக் கீழ்உள்ள பாகங்களை, **द्विगुणशरगर्भौ**-இரட்டிப்பாகச் செய்யப்பட்ட பாணங்களால் நிரப்பப் பட்ட, **निषङ्गौ**-இரண்டு அம்பராத்தூணிகளாக, **अकृत**-செய்தான். **बाढं**-இது நிச்சயம்தான். **यदग्रे**-எந்த அம்பராத்தூணிகளின் அக்ரபாகத்தில், **पादयुगलीनखाग्रच्छद्मानः** -இரண்டு பாதங்களிலும் உள்ள நகங்களின் நுனி என்ற தோற்றத்தை உடையதாயும், **सुरमकुटशाणैकनिशिताः**-தேவர்களுடைய கிரீடங்களாகிய சாணைக்கல்லில் நன்ருக கூர்மையாக்கப்பட்டதாயுமுள்ள **दशशरफलाः**-பத்து பாணங்களின் இரும்புமயமான நுனிகள், **दृश्यन्ते**-காணப் படுகின்றனவோ !

தேவியின் இரு பாதங்களிலும் இருக்கும் பத்து நகங்கள் நல்ல காந்தியுடன் விளங்குகின்றன. அவை நன்ருக சாணை பிடிக்கப்பட்ட பாணங்களின் இரும்பு நுனி பாகங்கள் போலும், ஜங்கா பிரதேசமென்னும் அம்பராத் தூணிகளில் போட்டவைகள் போலும் தோன்றுகின்றன. மன்மதன் சிவனை ஜயிக்க தன்னிடம் இருக்கும் ஐந்து பாணங்கள் போதாதென்று இந்த நகங்களைக்கொண்டு பத்து பாணங்களாகச் செய்துகொண்டானே என்று உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது. (83)

(அ) உபநிஷத்துக்களின் பரம தாத்பர்யம் தேவியின் பாதாரவிந்தங்களை ஆச்ரயிப்பது தான் என்பது கூறப் படுகிறது :—

श्रुतीनां मूर्धानो दधति तव यौ शेखरतया
ममाप्येतौ मातः शिरसि दयया धेहि चरणौ ।
ययोः पाद्यं पाथः पशुपतिजटाजूटतटिनी
ययोर्लाक्षालक्ष्मीररुणहरिचूडामणिरुचिः ॥ ८४ ॥

ச்ருதீநாம் மூர்த்தானோ தததி தவ யௌ சேகரதயா
மமாப்யேதௌ மாத: ஸிரஸி தயயா தேஹி சரணௌ ।
யயோ: பாத்யம் பாத: பஸுபதி ஜடாஜூட தடினீ
யயோ: லாக்ஷாலக்ஷ்மீ: அருண ஹரி சூடாமணி ருசி: ॥

**हे मातः** ஹே தாயே! **तव**–உன்னுடைய, **यौ**–எந்த, **चरणौ**–பாதங்களை, **श्रुतीनां**–வேதங்களுக்கு, **मूर्धानः**-சிரோபாகமாக விளங்கும் உபனிஷத்துக்கள், **शेखरतया**–சிரோபூஷணமாக, **दधति**–தரிக்கின்றனவோ, **एतौ**–இவைகளை (உன்னுடைய பாதங்களை), **मम**–என்னுடைய, **शिरसि अपि**–சிரஸிலும்கூட, **दयया**–கருணையினால், **धेहि**–வை, **ययोः**–எந்த உன் பாதங்களுக்கு **पाद्यं पाथः** – பாதப்ரக்ஷாலனம் செய்து வைக்கும் ஜலம், **पशुपतिजटाजूटतटिनी** – பரமேச்வரனுடைய ஜடாமண்டலத்தில் வஸிக்கும் கங்காநதியோ, **ययोः** –எந்த உன் பாதங்களுடைய, **लाक्षालक्ष्मीः** -மருதாணியின் காந்தியானது, **अरुणहरिचूडामणिरुचिः**–சிவப்பான விஷ்ணுவினுடைய சிரோமணியின் காந்தியோ!

வேதங்களின் சிரோபாகம் என்பது உபநிஷத்துக்கள். அவைகளின் பரமதாத்பர்யம், தேவியின் பாதாரவிந்தத்தை சரணம் என்று அடைவதுதான்.

जगन्नेदं नेदं परमिति परित्यज्य यतिभिः
कुशाग्रीयस्वान्तैः कुशलधिषणैः शास्त्रसरणौ ।
गवेष्यं कामाक्षि ध्रुवमकृतकानां गिरिसुते
गिरामैदंपर्यं तव चरणमाहात्म्यगरिमा ॥

என்று மூகபஞ்சசதியில் (ஸ்துதி சதகம் சு. 24) காணப்படும் சுலோகத்தின் தாத்பர்யமும் இதுதான். பிரணய கலஹத்திற்குப் பிறகு தேவியின் கோபத்தைத் தணிப்பதற்காக பரமசிவன் தேவியின் பாதங்களில் நமஸ்காரம் செய்யும்போது, அவர் தலையில் வஸிக்கும் கங்கையின் ஜலமானது தேவியின் சரணங்களை பிரக்ஷாலனம் செய்துவைக்கிறது. விஷ்ணு நமஸ்காரம் செய்யும்போது அவருடைய கிரீடத்தில்

பிரகாசிக்கும் கௌஸ்துபமணியின் சோபை தேவியின் பாதங்களில் வீசி தேவி தன் பாதங்களில் மருதாணி பூசிக் கொண்டிருக்கிருளோ என்று தோன்றுகிறது. ஆகவே தேவியின் பாதங்கள் வேதங்களின் சிரஸ்ஸிலும் சிவன், விஷ்ணு மற்ற தேவதைகள் எல்லாருடைய சிரஸுகளிலும் வைக்கப்படுகின்றன. அதையனுஸரித்து 'என் சிரஸிலும் உன் திருவடிகளைவைத்து அனுக்ரஹம் செய்யவேண்டும்' என்று பகவத்பாதாள் கேட்டுக்கொள்கிருர். (84)

(அ) மேலும் தேவியின் பாதங்கள் வர்ணிக்கப்படுகின்றன :—

नमोवाकं ब्रूमो नयनरमणीयाय पदयो-
स्तवास्मै द्वन्द्वाय स्फुटरुचिरसालक्तकवते ।
असूयत्यत्यन्तं यदभिहननाय स्पृहयते
पशूनामीशानः प्रमदवनकङ्केलितरवे ॥ ८५ ॥

நமோவாகம் ப்ரூமோ நயன ரமணீயாய பதயோ:
தவாஸ்மை த்வந்த்வாய ஸ்புட ருசி ரஸாலக்தகவதே ।
அஸூயத்யத்யந்தம் யதபிஹநநாய ஸ்ப்ருஹயதே
பசூநாம் ஈசான: ப்ரமதவன கங்கேளி தரவே ॥

**हे भगवति**-ஹே பகவதி! **नयनरमणीयाय**-கண்களுக்கு ரமணீயமாயும், **स्फुटरुचि**-அதிக காந்தியுள்ளதாயும், **रसालक्तकवते**-ஈரமான மருதாணியோடு கூடினதாயும் இருக்கிற, **तव**-உன்னுடைய, **अस्मै पदयोः द्वन्द्वाय**-இந்த இரண்டு கால்களின் பொருட்டு, **नमोवाकं**-நமஸ்கார வார்த்தையை, **ब्रूमः**-சொல்லுகிறோம். **पशूनामीशानः**-பசுக்களுக்குப் பதியான பரமேச்வரன், **यत्**-யாதொரு தேவியினுடைய பாதங்களின் **अभिहननाय**-உதைப்பதால் ஏற்படக்கூடிய ஸம்பந்தத்திற்காக, **स्पृहयते**-ஆசைப்படுகிற, **प्रमदवनकङ्केलितरवे**-உத்யான வனத்திலிருக்கும் அசோக விருக்ஷத்தினிடம் **अत्यन्तं**-மிகவும் **असूयति**-பொருமைப்படுகிருரோ!

தேவியின் பாதாரவிந்தங்களின் ஸமீபத்திற்குப்போக யோக்யதை இல்லாததினுல் தேவர்கள்கூட தூரத்தில் இருந்துகொண்டு 'நமஸ்காரம்' என்று சொல்லுகிருர்கள். அசோகவிருக்ஷத்தின்மேல் யுவதிகளின் கால்கள் பட்டால் தான் புஷ்பிக்கும். அதற்காக தேவியின் உத்யானவனத்தில் இருக்கும் அசோக மரங்கள் தேவியின் பாதஸ்பர்சம் கிடைக்காதா என்று எதிர்பார்த்து நிற்கின்றன. அவைகளின் பேரில்கூட தேவியின் பாதங்கள் படுவது பரமேச்வரனுக்கு இஷ்டமில்லை. 'தேவியினுடைய அங்க ஸங்கம் மருதாணி மரத்துக்குக்கூட கிடைக்கிறதில்லை' என்று 96-வது ச்லோகத்தில் சொல்லுகிருர். (85)

(அ) கோத்ரஸ்கலனம் என்னும் ரஹ: கேளி வர்ணிக்கப்படுகிறது :—

मृषा कृत्वा गोत्रस्खलनमथ वैलक्ष्यनमितं
ललाटे भर्तारं चरणकमले ताडयति ते ।
चिरादन्तःशल्यं दहनकृतमुन्मूलितवता
तुलाकोटिक्वाणैः किलिकिलितमीशानरिपुणा ॥ ८६ ॥

ம்ருஷா க்ருத்வா கோத்ர ஸ்கலனம் அத வைலக்ஷ்ய நமிதம்
லலாடே பர்தாரம் சரணகமலே தாடயதி தே ।
சிராத் அந்த: ஶல்யம் தஹநக்ருதம் உன்மூலிதவதா
துலாகோடி க்வாணை: கிலிகிலிதமீஶாந ரிபுணா ॥

हे भगवति–ஹே பகவதி ! मृषा–பொய்யாக, गोत्रस्खलनं–வேறு ஒரு ஸ்த்ரீயிடம் தனக்கு அமிதமான அனுராகம் இருப்பதாக பாவனை செய்து அவள் பெயரைக்கொண்டு தன் நாயகியை அழைப்பது என்ற கேளியை, कृत्वा–செய்துவிட்டு, अथ–பிறகு, वैलक्ष्यनमितं–இன்னது செய்வது என்று தெரியாமல் வெட்கத்தால் தலைகுனிந்த, भर्तारं–நாயகனை, ते–உன்னுடைய, चरणकमले–பாதாரவிந்தம், ललाटे–நெற்றியில், ताडयति सति–உதைக்கும்போது, चिरात्–வெகு காலமாக, दहनकृतं–தன்னை எரித்ததால் ஏற்பட்ட,

अन्तःशल्यं-மனதிற்குள் இருந்த வேதனையை, उन्मूलितवता-தீர்த்துக்கொண்ட, ईशानरिपुणा-மன்மதனால், तुलाकोटिक्वाणैः-கால் சலங்கைகளின் சப்தத்தால், किलिकिलितं-'கிலி' 'கிலி' என்று ஜயசப்தம் கோஷிக்கப்படுகிறது

கோத்ரஸ்கலனம் என்று ஒரு ரஹ: கேளி உண்டு. தன் நாய்கியினிடம் தனக்கு இருக்கும் அதிகமான பிரேமையைக் காட்டுவதற்கு அது ஒரு வழி. தன் நாயகியின் முன்பு வேறு ஒரு ஸ்த்ரீயிடம் தனக்கு அதிக பிரியம் உண்டு என்று பாவனைசெய்து அவளுடைய பெயரால் தன் நாயகியை அழைப்பது, பிறகு தன் நாயகியைக் கோபம் அடையும்படி செய்வது, பின்பு அவளை ஸமாதானப்படுத்தும் முறையில் அவள் கால் தன் தலையில் படும்படியாகப் படுத்துகொள்ளுதல். இதுதான் கோத்ரஸ்கலனம் என்னும் அந்தரங்கமான விளையாட்டு. தன் பர்த்தாவின் நெற்றிக் கண்ணின்மேல் தேவியினுடைய கால்கள் பட்டவுடன் மன்மதனுக்கு வெகுநாட்களாக இருந்த த்வேஷம் அடியோடு தீர்ந்துவிடுகிறது உடனே அவன் ஜயகோஷம் செய்கிறான். தேவியின் கால் தண்டையில் கட்டப்பட்டிருக்கும் சலங்கைகள் 'கில' 'கில' என்று சப்தம் செய்கின்றன. அது மன்மதனுடைய வெற்றி முழக்கம் என்று உத்ப்ரேக்ஷை செய்கிறார். (86)

(அ) தேவியின் பாதாரவிந்தச் சிறப்பு வர்ணிக்கப்படுகிறது :—

हिमानीहन्तव्यं हिमगिरिनिवासैकचतुरौ
निशायां निद्राणं निशि चरमभागे च विशदौ ।
वरं लक्ष्मीपात्रं श्रियमतिसृजन्तौ समयिनां
सरोजं त्वत्पादौ जननि जयतश्चित्रमिह किम् ॥ ८७ ॥

ஹிமாநீ ஹந்தவ்யம் ஹிமகிரி நிவாஸைக சதுரௌ
நிஶாயாம் நித்ராணம் நிஶி சரமபாகே ச விஶதௌ ।
வரம் லக்ஷ்மீ பாத்ரம்-ச்ரியமதிஸ்ருஜந்தௌ ஸமயிநாம்
ஸரோஜம் த்வத்பாதௌ ஜநநி ஜயத: சித்ரமிஹ கிம் ॥

**हे जननि**-ஹே தாயே! **हिमगिरिनिवासैकचतुरौ**-இமய மலையில் வாஸம் செய்வதில் அஸாதாரணமான ஸாமர்த்யம் உள்ளதாயும், **निशि**-இரவிலும், **चरमभागे च**-காலையிலும், **विशदौ** – மலர்ந்தவைகளாயும், **समयिनां**-ஸமயாசாரம் என்னும் பூஜா விதானத்தை அனுஸரித்தவர்களுக்கு, **श्रियं** – ஐச்வர்யத்தை, **अतिसृजन्तौ** – கொடுக்கிறவைகளாயும், இருக்கிற, **त्वत्पादौ**-உன் இரு பாதங்கள், **हिमानीहन्तव्यं**-பனியால் கருகிப்போகும் தன்மையுள்ளதாயும், **निशायां**-இரவில், **निद्राणं** – தூங்குகிறதாயும் (மூடினதாயும்), **वरं**-உத்க்ருஷ்டமான, **लक्ष्मीपात्रं**-லக்ஷ்மீதேவிக்கு வாஸஸ்தானமாயும் இருக்கிற, **सरोजं**-தாமரைப் புஷ்பத்தை, **जयतः**-ஜயிக்கின்றது. **इह**-இந்த விஷயத்தில், **किं चित्रम्** – என்ன ஆச்சரியம் இருக்கிறது?

ஸாதாரணமான தாமரைப்புஷ்பம் பனிபட்டால் கருகிப் போய்விடும். பகலில்மட்டும் மலர்ந்திருக்கும். இரவில் மூடிக்கொண்டுவிடும். லக்ஷ்மீதேவிக்கு வாஸஸ்தானமாக மட்டும் இருக்கும். ஆனால் தேவியின் பாதகமலங்கள் பனியில் கருகிப்போவதில்லை. இரவு பகல் இரண்டு காலங்களிலும் மலர்ந்திருக்கின்றன. ஸமயாசாரம் என்னும் க்ரமப்படி தன்னைப் பூஜைசெய்கிறவர்களுக்கெல்லாம் அமிதமான ஐச்வர்யத்தைக்கொடுக்கும் தன்மை உள்ளவைகளாக இருக்கின்றன. ப்ராக்ருதத் தாமரையைவிட தேவியின் பாத ஸரோஜம் எல்லாவிதங்களிலும் உத்க்ருஷ்டமானது என்பதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? (87)

(அ) தேவியின் பாதாக்ரபாகம் மிகவும் மிருதுவானது

**पदं ते कीर्तीनां प्रपदमपदं देवि विपदां**
**कथं नीतं सद्भिः कठिनकमठीकर्परतुलाम् ।**
**कथं वा बाहुभ्यामुपयमनकाले पुरभिदा**
**यदादाय न्यस्तं दृषदि दयमानेन मनसा ॥ ८८**

பதம் தே கீர்த்தீநாம் ப்ரபதமபதம் தேவி விபதாம்
கதம் நீதம் ஸத்பி: கடிந கமடீ கர்பர துலாம் ।
கதம் வா பாஹுப்யாம் உபயமந காலே புரபிதா
யதாதாய ந்யஸ்தம் த்ருஷதி தயமாநேந மநஸா ॥

**हे देवि**-ஹே தேவி! **कीर्तीनां**-புகழுக்கு, **पदं**-இருப்பிடமாயும், **विपदां**-கஷ்டங்களுக்கு, **अपदं**-இருப்பிடமில்லாததாயும் இருக்கிற, **ते प्रपदं**-உன் பாதத்தின் அக்ரபாகம், **सद्भिः**-வித்வான்களால், **कठिनकमठीकर्परतुलां**-கடினமான ஆமையினுடைய முதுகு ஓட்டின் ஸாம்யத்தை, **कथं**-எப்படி, **नीतं**-அடையும்படி செய்யப்பட்டது? **दयमानेन**-தயையுடன் கூடின, **मनसा**-மனதினால், **पुरभिदा**-பரமேச்வரனால், **उपयमनकाले**-விவாஹ ஸமயத்தில், **बाहुभ्यां**-இருகைகளால் **यत्**-யாதொரு (பாதாக்ரமானது), **आदाय**-எடுத்து, **दृषदि**-அம்மிக் கல்லின் மேல், **कथंवा**-எப்படித்தான், **न्यस्तं**-வைக்கப் பட்டதோ!

தேவியின் பாதங்களின் அக்ரபாகம் மிகவும் மிருதுவானது. அது தன் பக்தர்களைக்காப்பாற்றும் புகழ் பெற்றது. அதை நம்பினவர்களுக்கு ஆபத்துகள் வராது. அத்தகைய பாதங்களைக் கவிகள் எப்படி ஆமையின் கடினமான முதுகு ஓட்டிற்கு ஸமமாகச் சொல்லுகிறார்களோ தெரியவில்லை. அதுதான் போகட்டுமென்றால், விவாஹ ஸமயத்தில் தேவியின் பாதங்களைத் தன் கையால் பிடித்து பரமேச்வரன் எப்படித்தான் கடினமான அம்மிக்கல்லின்மேல் வைத்தாரோ, புரியவே இல்லை. தேவியின் பாதாக்ரங்கள் மிகவும் மிருதுவானவை என்பது முக்கிய தாத்பர்யம். கல்யாண காலத்தில் வரன் வதூவின் பாதங்களைப் பிடித்து அம்மிக்கல்லின் மேல் வைப்பது வழக்கம். (88)

(அ) மேலும் தேவியின் பாதாக்ரங்கள் வர்ணிக்கப்படுகின்றன:—

नखैर्नाकस्त्रीणां करकमलसंकोचशशिभि-
स्तरूणां दिव्यानां हसत इव ते चण्डि चरणौ ।

फलानि स्वःस्थेभ्यः किसलयकराग्रेण ददतां
दरिद्रेभ्यो भद्रां श्रियमनिशमह्नाय ददतौ ॥ ८९ ॥

நகை: நாக ஸ்த்ரீணாம் கரகமல ஸங்கோசசசிபி:
தரூணாம் திவ்யாநாம் ஹஸத இவ தே சண்டி சரணௌ।
பலானி ஸ்வஸ்தேப்ய: கிஸலய கராக்ரேண தததாம்
தரித்ரேப்யோ பத்ராம் ச்ரியமநிசம் அஹ்நாய தததௌ॥

हे चण्डि-ஹே சண்டி, किसलय-துளிர்களாகிய, कराग्रेण-கைகளின் நுனியால், स्वःस्थेभ्यः-ஸ்வர்க்கத்தில் இருக்கும் தேவர்களுக்கு மட்டும, फलानि-பலன்களை, ददतां-கொடுக்கின்ற, दिव्यानां-தேவலோகத்தில் உள்ள, तरूणां-கல்ப வ்ருக்ஷங்களை, दरिद्रेभ्यः-ஏழைகளுக்கும்கூட, भद्रां-குறைவில்லாத, श्रियं-ஐச்வர்யத்தை, अनिशं-எப்பொழுதும், अह्नाय-உடனே, ददतौ-கொடுக்கின்ற, ते-உன்னுடைய, चरणौ-பாதங்கள், नाकस्त्रीणां-தேவஸ்திரீகளுடைய, कर-கைகளாகிற कमल-தாமரைப் புஷ்பங்களை, संकोच-மூடச்செய்வதில், शशिभिः-அநேகம் சந்திரன்கள்போல் விளங்குகிற, नखैः-நகங்களால், हसत इव-பரிஹாஸம் செய்வதுபோல் இருக்கின்றன.

தேவியின் பாதங்கள் பரமதரித்திரர்களான பக்தர்கள் எல்லாருக்கும் அமிதமான ஐச்வர்யத்தை தாமதமில்லாமல் கேட்டவுடன் கொடுக்கக்கூடிய சக்தியுள்ளவை. கல்ப விருக்ஷங்களோ ஸ்வர்க்கலோகத்திலிருக்கும் தேவர்களுக்கு மட்டும் அவர்கள் கோரினதை கொடுக்கச்சக்தியுள்ளவை. ஆகவே தேவியின் பாதங்கள் கல்ப விருக்ஷங்களைவிட அதிகமான மேன்மை தங்கியவை. தவிரவும் தேவியின் பாதாக்ரங்களில் இருக்கும் நகங்களிலிருந்து வீசும் ஒளியானது அநேக சந்திரன்களுடைய கிரணங்கள்போல் இருந்து தேவஸ்திரீகளின் கைகள் என்ற கமலங்களை மூடிக் கொள்ளும்படி செய்கின்றனவோ என்று உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது. அதாவது இந்த்ராணி முதலிய தேவ ஸ்திரீகள் தேவியின் பாதாரவிந்தங்களுக்குக் கைகூப்பி நமஸ்காரம் செய்கிறார்கள் என்று தாத்பர்யம். (89)

(அ) மனமும் இந்திரியங்களும் தேவியின் பாதாரவிந்தங்களில் ஈடுபடவேண்டும் என்கிறார்:—

ददाने दीनेभ्यः श्रियमनिशमाशानुसदृशी-
ममन्दं सौन्दर्यप्रकरमकरन्दं विकिरति ।
तवास्मिन्मन्दारस्तबकसुभगे यातु चरणे
निमज्जन्मज्जीवः करणचरणः षट्चरणताम् ॥ ९० ॥

ததாநே தீநேப்ய: ச்ரியம் அநிசம் ஆசாநுஸத்ருசீம்
அமந்தம் ஸௌந்தர்ய ப்ரகர மகரந்தம் விகிரதி ।
தவாஸ்மின் மந்தார ஸ்தபக ஸுபகே யாது சரணே
நிமஜ்ஜன் மஜ்ஜீவ: கரண சரண: ஷட்சரணதாம் ॥

**हे भगवति**-ஹே தேவி! **दीनेभ्यः**-தரித்திரர்களின் பொருட்டு, **आशानुसदृशीं**-ஆசைக்குத் தகுந்ததாக, **श्रियं**-ஐச்வர்யத்தை, **अनिशं**-எப்பொழுதும், **ददाने**-கொடுக்கிறதாயும், **अमन्दं**-அதிகமாக, **सौन्दर्यप्रकर**-அழகின் கூட்டமாகிய, **मकरन्दं**-புஷ்பரஸத்தை, **विकिरति**-பிரவாஹமாய் ஓடும்படி செய்கிறதாயும், **मन्दार**-கல்பவ்ருக்ஷத்தினுடைய, **स्तबक**-பூங்கொத்துபோல், **सुभगे**-அழகாக இருக்கிறதாயுமுள்ள, **तव**-உன்னுடைய, **अस्मिन्**-இந்த, **चरणे**-பாதாரவிந்தத்தில், **करणचरणः**-ஐம்புலன்களையும் மனதையும் பாதங்களாக உடைத்ததான, **मज्जीवः**-என் ஜீவன், **निमज्जन्**-மூழ்கி, **षट्चरणतां**-வண்டாக இருக்கும் தன்மையை, **यातु**-அடையட்டும்.

தேவியின் பாதாரவிந்தங்கள் கல்ப வ்ருக்ஷங்களின் பூங்கொத்துபோல் அழகாகவும் ரஸ பரிதமாகவுமிருக்கின்றன; கல்ப வ்ருக்ஷங்களின் பூங்கொத்துகளின் உள் பாகத்திலிருக்கும் புஷ்ப ரஸத்தை வண்டுகள் பானம் செய்கின்றன. அதுபோல் தேவியின் பாதாரவிந்தங்களில் நிறைந்திருக்கும் ஆனந்தமென்னும் அமிருதத்தைத் தான் அனுபவிக்க வேண்டுமென்று ஆசார்யபாதாள் கேட்டுக்கொள்ளுகிறார்; மனதும் ஐந்து புலன்களும் ஜீவனுடைய ஆறு

சரணங்களாகக் கருதப்படுகின்றன; அதாவது ஞானேந்த்ரியங்களும் மனதும் தேவியின் சரணாரவிந்தத்தில் ஈடுபட வேண்டும் என்பது கருத்து. (90)

(அ) தேவியின் நடை வர்ணிக்கப்படுகிறது :-

पदन्यासक्रीडापरिचयमिवारब्धुमनसः
स्खलन्तस्ते खेलं भवनकलहंसा न जहति ।
अतस्तेषां शिक्षां सुभगमणिमञ्जीररणित-
च्छलादाचक्षाणं चरणकमलं चारुचरिते ॥ ९१ ॥

பதந்யாஸ க்ரீடா பரிசயமிவாரப்துமநஸ:
ஸ்கலந்தஸ்தே கேலம் பவன கலஹம்ஸா ந ஜஹதி ।
அதஸ்தேஷாம் ஶிக்ஷாம் ஸுபக மணி மஞ்ஜீர ரணித
ச்சலா தாசக்ஷாணம் சரண கமலம் சாரு சரிதே ॥

**हे चारुचरिते**-ஹே சுபசரிதே! **पदन्यासक्रीडापरिचयं**-அழகாகக் காலடி எடுத்துவைக்கும் விளையாட்டின் அப்யாஸத்தை, **आरब्धुमनसः**-ஆரம்பிக்க விருப்பம்கொண்ட **भवनकलहंसाः**-வீட்டில வளரும் கலஹம்ஸங்கள், **स्खलन्तः**-தடுமாறிக்கொண்டும், **ते** உன்னுடைய, **खेलं**-நடையை, **न जहति**-விடுவதில்லை (விடாமல் அப்யஸிக்கின்றன). **अतः**-ஆகவே, **चरणकमलं**-உன்பாதாரவிந்தம், **सुभगमणि**-உயர்ந்த ரத்னங்கள் இழைத்த, **मञ्जीर**-பாதஸரத்தின், **रणित**-சப்தம் என்ற, **छलात्**-வ்யாஜத்தால், **तेषां**-அந்த ஹம்ஸங்களுக்கு, **शिक्षां** - ஶிக்ஷையை, **आचक्षाणं इव** - சொல்லி வைப்பதுபோல்

ஸாதாரணமாக உத்தம ஸ்திரீகளின் நடை ஹம்ஸத்தின் நடைபோல் அழகாய் இருக்கிறதென்று கவிகள் வர்ணிப்பது வழக்கம். தேவியின் விஷயத்தில் அது மாறி இருக்கிறது. தேவியின் நடையைப் பார்த்து கலஹம்ஸங்கள் ஒய்யாரநடையைப்பழக்கிக் கொள்கின்றன என்று சொல்லப்படுகிறது. தேவி நடக்கும்போது கால்களில்

அணிந்திருக்கும் பாதஸரங்களின் சலங்கைகள் 'ஜல்' 'ஜல்' என்று சப்தம் செய்கின்றன. அன்னப்பறவைகளுக்கு சிக்ஷை சொல்லிவைப்பதற்காக அந்த சப்தம் ஏற்படுகிறதோ என்று உத்ப்ரேக்ஷைசெய்கிறார். "ஹம்ஸைரப்யதிலோபனீய கமநே" (हंसैरप्यतिलोभनीयगमने) என்று 'மந்த்ர மாத்ருகா புஷ்பமாலா ஸ்தவத்'திலும் (சு 6) "மராளீநாம் யாநாப்யஸந கலநா மூலகுரவே" (मरालीनां यानाभ्यसनकलनामूलगुरवे) என்று 'மூகபஞ்சசதியிலும் (பாதாரவிந்தசதகம் சு. 3) காணப்படும் வாக்கியங்கள் கவனிக்கத்தக்கவை. (91)

(அ) கேசாதி பாதாந்தம் ஒவ்வொரு அங்கத்தின் வர்ணனை முடிந்தபிறகு பொதுவாக தேவியின் ஸ்வரூபம் வர்ணிக்கப்படுகிறது:—

**गतास्ते मञ्चत्वं द्रुहिणहरिरुद्रेश्वरभृतः**
**शिवः स्वच्छच्छायाघटितकपटप्रच्छदपटः ।**
**त्वदीयानां भासां प्रतिफलनरागारुणतया**
**शरीरी शृङ्गारो रस इव दृशां दोग्धि कुतुकम् ॥ ९२ ॥**

கதாஸ்தே மஞ்சத்வம் த்ருஹிண ஹரி ருத்ரேச்வர ப்ருத:
ஶிவ: ஸ்வச்சச்சாயா கடித கபட ப்ரச்சதபட: ।
த்வதீயாநாம் பாஸாம் ப்ரதிபலநராகாருணதயா
ஶரீரீ ச்ருங்காரோ ரஸ இவ த்ருஶாம் தோக்தி குதுகம் ॥

**हे भगवति** - ஹே பகவதியே! **द्रुहिणहरिरुद्रेश्वरभृतः** - ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன், ஈசுவரன் ஆகிய ஸேவகர்கள், **ते**-உன்னுடைய, **मञ्चत्वं** - கட்டிலாக இருக்கும் தன்மையை, **गताः** - அடைந்திருக்கிறார்கள். **शिवः** - ஸதாசிவன், **स्वच्छ** - வெளுப்பான, **छाया** - காந்தியினால், **घटित** - செய்யப்பட்ட, **कपटप्रच्छदपटः** - மேல் விரிப்பு வஸ்திர உருவமாக இருந்து கொண்டு, **त्वदीयानां**-உன்னுடையதான, **भासां** - காந்திகள் **प्रतिफलन** - ப்ரதிபலித்ததினால் ஏற்பட்ட, **राग** - சிவப்பினால் **अरुणतया** - சிவப்பாக இருக்கும் காரணத்தால், **शरीरी** -

உருவம் எடுத்துக்கொண்ட, **शृङ्गारः रस इव** - ச்ருங்கார ரஸம் போல், **दृशां** - உன் கண்களுக்கு, **कुतुकं** - ஆனந்தத்தை, **दोग्धि** - உண்டுபண்ணுகிருர்.

ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன், ஈசுவரன் இந்நான்கு தேவர்களும் தேவியின் ஸமீபத்தில் இருந்து தியானம் செய்ய வேண்டுமென்ற உத்தேசத்துடன் தேவி சயனித்துக் கொள்ளும் கட்டிலின் நான்கு கால்களாக மாறி இருக்கிருர்கள். தேவியின் பர்த்தாவான ஸதாசிவன் வெளுப்பான காந்தியோடு கூடியவராயிருந்த போதிலும் தேவியின் ஸாமீப்யத்தால் தேவியின் சிவப்பு காந்தி அவர் மேலும் பட்டு அவரும் சிவப்பாய்த் தோன்றுகிருர். ச்ருங்கார ரஸமே ஸதாசிவ ரூபமாக சரீரம் தரித்து வந்திருக்கிறதோ என்று உத்ப்ரேக்ஷை செய்யப்படுகிறது. (92)

(அ) பரமேச்வரனுடைய கருணையே மூர்த்தீகரித்தது போல் விளங்குகிருள் தேவி :-

अराला केशेषु प्रकृतिसरला मन्दहसिते
शिरीषाभा चित्ते दृषदुपलशोभा कुचतटे ।
भृशं तन्वी मध्ये पृथुरुरसिजारोहविषये
जगत्त्रातुं शंभोर्जयति करुणा काचिदरुणा ॥ ९३ ॥

அராளா கேசே^ஷு ப்ரக்ருதி ஸரளா மந்தஹஸிதே
^ஶிரீஷாபா சித்தே த்ருஷதுபல ^ஶோபா குசதடே ।
ப்ருசம் தந்வீ மத்யே ப்ருதுருரஸிஜாரோஹவிஷயே
ஜகத் த்ராதும் ^ஶம்போர் ஜயதி கருணு காசிதருணு ॥

**हे भगवति**-ஹேதாயே! **शंभोः**-பரமசிவனுடைய, **काचित्**-இன்னவிதமென்று வர்ணிக்கமுடியாததான, **करुणा**-கருணையானது, **केशेषु**-தலைமயிர்களில் **अराला**-சுருட்டையாயும், **मन्दहसिते**-புன் முறுவலில், **प्रकृतिसरला**-இயற்கையான ஸௌந்தர்யமாயும், **चित्ते**-மனதில், **शिरीषाभा**-வாகைப் பூவைப்போல் மிருதுவாயும், **कुचतटे**-கொங்கை பிரதேசத்

தில், दृषदुपलशोभा-மிகக்கடினமான கல்லின் சோபை யுடனும், मध्ये-இடைப்பிரதேசத்தில், भृशं तन्वी-மிகவும் மெலிந்ததாயும், उरसिजारोहविषये-ஸ்தன பிரதேசத்திலும் ப்ருஷ்ட பாகத்திலும், पृथुः-அகன்றதாயும், अरुणा-சிவந்த தாயும் இருந்துகொண்டு, जगत्-உலகத்தை, त्रातुं-காப்பாற்று வதற்கு, जयति-விளங்குகிறது.

தேவியின் ஸ்வரூபம் முழுவதும் கவனிக்கும்போது பரமேச்வரனுடைய அபார கருணையே இந்த ரூபமாக விளங்குகிறதோ என்று தோன்றுகிறது. தேவி "கருணா ரஸார்த்ர ஹ்ருதயா" (करुणारसार्द्रहृदया) என்றும், "ஹய்யங்கவீன ஹ்ருதயா" (हय्यङ्गवीनहृदया) என்றும் மற்ற ஸ்தோத்திரங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கிறாள். (93)

(அ) கிருஷ்ணபக்ஷம் தேவியின் ஸ்நான காலம் :-

कलङ्कः कस्तूरी रजनिकरबिम्बं जलमयं
कलाभिः कर्पूरैर्मरकतकरण्डं निबिडितम् ।
अतस्त्वद्भोगेन प्रतिदिनमिदं रिक्तकुहरं
विधिर्भूयो भूयो निबिडयति नूनं तव कृते ॥९४॥

களங்க: கஸ்தூரீ ரஜநிகர பிம்பம் ஜலமயம்
கலாபி: கர்பூரை: மரகதகரண்டம் நிபிடிதம் ।
அத: த்வத்போகேன ப்ரதிதினம் இதம் ரிக்தகுஹரம்
விதி: பூயோ பூயோ நிபிடயதி நூனம் தவ க்ருதே ॥

हे देवि-ஹே தேவியே! कलङ्कः-சந்திர பிம்பத்தின் மத்தியில காணப்படும் களங்கமானது, कस्तूरी-கஸ்தூரி யாகவும், रजनिकरबिम्बं-சந்திர பிம்பமானது, जलमयं-பன்னீ ராகவும், कलाभिः कर्पूरैः निबिडितं-கிரணங்களாகிற பச்சைக் கற்பூரங்களால் நிரப்பப்பட்ட (சந்திரமண்டலமானது), मरकतकरण्डं-மரகதங்களால் இழைக்கப்பட்ட பாத்திரமாகவும் ஆகின்றன. अतः-ஆகவே, इदं-இந்த ஜலபாத்திரத்தை,

**प्रतिदिनं**–தினந்தோறும், **त्वद्भोगेन**–நீ ஸ்நானம் செய்வதால், **रिक्तकुहरं**–காலியாயிருப்பதை, **विधिः**–ப்ரம்மாவானவர், **भूयो-भूयः**–திரும்பத்திரும்ப **तव कृते**-உனக்காக, **निविडयति**-பூர்த்தி செய்கிருர், **नूनं**–நிச்சயம்.

கிருஷ்ணபக்ஷத்தில் தேவி ஸ்நானத்திற்குப் போகிருள். ஆகாச மண்டலம் ஜலம் நிரப்பி வைக்கபபடும் பெரிய மரகத அண்டா என்றும், சந்திர பிம்பம் பன்னீர் என்றும், சந்திர பிம்பத்தின் மத்தியில் காணப்படும் களங்கமானது கஸ்தூரி என்றும் சொலலப்படுகிறது. கிருஷ்ண பக்ஷத்தில் சந்திரனின் கலே ஒன்ருென்ருகக் குறைந்து வருவது தேவி ஸ்நானம் செய்யச் செய்ய பாத்திரத்திலுள்ள ஜலம் குறைந்து வருவதுபோல் இருக்கிறதென்றும், அமாவாஸை தினம் சந்திரனின் கலேகள் ஒன்றுமே இல்லாததைக் காலி யான பாத்திரமென்றும் சொல்லப்படுகிறது. சுக்லபக்ஷம் ப்ரதமையன்று தேவி பஹிரங்கமான ஸபைக்கு வந்து விடுகிருள். அன்றிலிருந்து பதினைந்து நாட்கள் தேவி தேவர்களாலும், மனுஷ்யர்களாலும் பூஜை செய்யப் படுகிருள். 'ப்ரதிபன்முக ராகாந்த திதி மண்டல பூஜிதா' (**प्रतिपन्मुखराकान्ततिथिमण्डलपूजिता**) என்று லலிதா ஸஹஸ்ர நாமத்தில் காணப்படும் வாக்கியத்திற்கு இது தான் அர்த் தம். தேவி தர்பாரில் இருக்கும் காலத்தில் சந்த்ர கலே ஒன்ருென்ருக அதிகமாவதுபோல ப்ரம்மாவால் ஜலம் கொஞ்சம் கொஞ்சமாக அம்ருதக் கடலிலிருந்து கொண்டு வந்து கொட்டப்பட்டு அந்த அண்டா மறுபடியும் நிறம்பி விடுகிறது. நபோ மண்டலத்தைப் பெரிய ஜல பாத்திர மாகவும், சந்திர பிம்பத்தை ஜலமாகவும், சந்திர பிம்பத்தில் காணப்படும் களங்கத்தை கஸ்தூரி என்னும் வாஸனு த்ரவ்யமாகவும், கிருஷ்ணபக்ஷத்தில் சந்த்ரனின் கலேகள் ஒன்ருென்ருகக் குறைவது, தேவி ஸ்நானம் செய்வதால் தினமும் சிறிது சிறிதாக ஜலம் குறைவது போலும்; சுக்ல பக்ஷத்தில் சந்த்ரனின் கலேகள் ஒன்ருென்ருக அதி கரிப்பது ஜல பாத்திரம் கொஞ்சம் கொஞ்சமாக மறு

படியும் நிரப்பப்படுவது போலும் இருக்கிறது என்று வர்ணிக்கப்படுவது மிகவும் உத்க்ருஷ்டமான கல்பனையாகும் (94)

(அ) தேவியை உபாஸனை செய்வதற்கு இந்த்ரிய நிக்ரஹம் அவசியம் :—

पुरारातेरन्तःपुरमसि ततस्त्वच्चरणयोः
सपर्यामर्यादा तरलकरणानामसुलभा ।
तथा ह्येते नीताः शतमखमुखाः सिद्धिमतुलां
तव द्वारोपान्तस्थितिभिरणिमाद्याभिरमराः ॥ ९५ ॥

புராராதே: அந்த:புரமஸி தத: த்வச்சரணயோ:
ஸபர்யா மர்யாதா தரள கரணாநாம் அஸுலபா ।
ததா ஹ்யேதே நீதா: ஶதமக முகா: ஸித்திமதுலாம்
தவ த்வாரோபாந்தஸ்திதிபி: அணிமாத்யாபி: அமரா: ।

**हे भगवति**-ஹே தாயே ! **त्वं**-நீ, **पुरारातेः**-பரமேச்வரனுடைய, **अन्तःपुरं**-அந்தப்புரத்திலிருக்கும் பட்டமஹிஷியாக, **असि**-இருக்கிறாய். **ततः**-அந்தக் காரணத்தால், **त्वच्चरणयोः**-உன்னுடைய பாதாரவிந்தங்களில், **सपर्यामर्यादा**-பூஜை செய்வதென்ற பிரகாரமானது, **तरलकरणानां**-இந்திரிய நிக்ரஹம் இல்லாதவர்களுக்கு, **असुलभा**-ஸாத்யமான காரியமில்லை. **तथाहि**-அது மிகவும் நியாயம்தான். **एते**-இந்த **शतमखमुखाः अमराः**-இந்த்ராதி தேவதைகள், **तव**-உன்னுடைய **द्वारोपान्तस्थितिभिः**-த்வார பாலகிகளாக இருக்கிற **अणिमाद्याभिः**-அணிமாதி ஸித்திகளுடன்கூட, **अतुलां सिद्धिं**-அமிதமான மனோபீஷ்டத்தை, **नीताः**-அடையும்படி செய்யப்பட்டிருக்கிறார்கள்.

ஸமயாசாரத்தையனுஸரித்து தேவியின் ஸமீபத்திற்கு போய் பூஜை செய்வதற்கு ஜிதேந்த்ரியர்கள்தான் அதிகாரிகள். இந்திரன் முதலான தேவதைகள்கூட ஸமீபத்தில் போவதற்கு வேண்டிய யோக்யதை இல்லாமல் தேவியின் கிருஹத்தின் த்வாரபாலகிகளாகிய அணிமா முதலான

எட்டு ஸித்திகளோடு தாங்களும் த்வார பாலகர்களாக நின்று ஜன்ம ஸாபல்யத்தை யடைகிருர்கள். "புராராதே: அந்த:புரம்" (पुरारातेरन्तःपुरम्) என்று தேவி இங்கு சொல்லப்படுவதுபோல் தேவீ புஜங்க ஸ்தோத்திரத்திலும் (சு. 2) சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம். **निर्मलचित्तैरेव सुधाम्भोधिमध्यस्थितायाः पादाम्बुजसेवा समर्थिभिरेव ज्ञायते नान्यैरित्यर्थः॥** (95)

(அ) தேவியின் நிகரில்லாத பாதிவ்ரத்யம் கூறப் படுகிறது :—

**कलत्रं वैधात्रं कतिकति भजन्ते न कवयः**
**श्रियो देव्याः को वा न भवति पतिः कैरपि धनैः।**
**महादेवं हित्वा तव सति सतीनामचरमे**
**कुचाभ्यामासङ्गः कुरवकतरोरप्यसुलभः ॥ ९६ ॥**

களத்ரம் வைதாத்ரம் கதி கதி பஜந்தே ந கவய:
ச்ரியோ தேவ்யா: கோ வா ந பவதி பதி: கைரபி தனை:।
மஹாதேவம் ஹித்வா தவ ஸதி ஸதீநாம் அசரமே
குசாப்யாம் ஆஸங்க: குரவகதரோரபி அஸுலப: ||

**हे सति**-ஹே பரதேவதையே! **वैधात्रं**-ப்ரம்மாவினுடைய **कलत्रं**-பத்னியான ஸரஸ்வதி தேவியை, **कतिकति कवयः**-எங்தெந்தக்கவிகள், **न भजन्ते**-அடையாமல் இருக்கிருர்கள்? **श्रियो देव्याः**-லெக்ஷ்மீ தேவிக்கு, **कैरपि धनैः**-ஏதாவது கொஞ்சம் ஐச்வர்யத்திஞல், **को वा**-யார்தான், **पतिः**-பர்த்தாவாக, **न भवति**-ஆகவில்லே? **हे सतीनामचरमे**-பதிவ்ரதைகளுக்குள் முதன்மையானவளே! **महादेवं**-பரமசிவனே, **हित्वा**-விட்டு, **तव कुचाभ्यां**-உன்னுடைய ஸ்தனங்களோடு, **आसङ्गः**-ஸ்பர்சமானது, **कुरवकतरोरपि**-மருதாணி மரத்திற்குக்கூட, **असुलभः**-கிடைப்பது அரிது.

ப்ரக்ருதத்தில் தேவி ஸர்வோத்க்ருஷ்டமான ப்ரம்ம ஸ்வரூபம் என்று உபாஸனே செய்யப்படுவதால் தேவிக்கு

ஸமானமான தேவதை யாருமே இல்லையென்று சொல்லுகிறார். பாதிவ்ரத்யத்தில் தேவிக்கு ஸமானமாக ஸரஸ்வதியையும் லக்ஷ்மியையும்கூட சொல்ல முடியாது. வித்வான்களிடம் ஸரஸ்வதீதேவியும், ஐச்வர்யமுள்ளவர்களிடம் லக்ஷ்மீ தேவியும் வஸிக்கிறார்கள் என்று சொல்லுகிறோம். ஆனால் தேவியின் ஸம்பந்தம் மஹாதேவனைத்தவிர வேறு யாருக்குமே கிடைப்பதில்லை. இதனால் ஸரஸ்வதீ தேவியும் லக்ஷ்மீ தேவியும் குறைவாகச் சொல்லப்படுகிறார்களென்று அர்த்தம் செய்யக்கூடாது. "நஹி நிந்தா நிந்த்யம் நிந்திதும் ப்ரவ்ருத்தா அபிது ஸ்துத்யம் ஸ்தோதும்" (नहि निन्दा निन्द्यं निन्दितुं प्रवृत्ता अपितु स्तुत्यं स्तोतुम् ) மீமாம்ஸா சாஸ்திரத்தில் இதை 'நஹி நிந்தா ந்யாயம்' என்று சொல்லுவார்கள். ஒரு தேவதையை ஸ்தோத்திரம் செய்யும்போது இதர தேவதைகளைக் குறைவாகப்பேசினால் அவர்களை நிந்தை செய்ததாக அர்த்தமில்லை. ப்ரக்ருதத்தில உபாஸிக்கப்பட தேவதையை உத்க்ருஷ்டமென்று ஸ்தோத்திரம் செய்கிறார் என்று மட்டும்தான் அர்த்தம். ஸரஸ்வதியையும் லக்ஷ்மியையும்விட தேவி மேலானவள் என்று சொல்லுவதின் தாத்பர்யம் என்னவென்றால தேவியை உபாஸனை செய்வதால் உபாஸகர்களுக்கு ஸர்வஞானமும் எல்லாவித ஐச்வர்யங்களும் கிடைக்கும என்பதுதான். (96)

(அ) மனதுக்கும் வாக்குக்கும் எட்டாத பரப்ரம்ம ஸ்வரூபிணி என்று தேவி கருதப்படுகிறாள்:—

गिरामाहुर्देवीं द्रुहिणगृहिणीमागमविदो
हरेः पत्नीं पद्मां हरसहचरीमद्रितनयाम् ।
तुरीया कापि त्वं दुरधिगमनिःसीममहिमा
महामाया विश्वं भ्रमयसि परब्रह्ममहिषि ॥ ९७ ॥

கிராம் ஆஹுர்: தேவீம் த்ருஹிண க்ருஹிணீம் ஆகமவிதோ
ஹரே: பத்னீம் பத்மாம் ஹர ஸஹசரீம் அத்ரி தநயாம் ।
துரீயா காபி த்வம் துரதிகம நிஸ்ஸீம மஹிமா
மஹாமாயா விச்வம் ப்ரமயஸி பரப்ரம்ம மஹிஷி ॥

**हे परब्रह्ममहिषि**–ஹே பரப்ரம்மத்தின் பட்டமஹிஷியே! **आगमविदः**–வேதத்தை அறிந்தவர்கள், **त्वां**–உன்னை, **द्रुहिणगृहिणीं**–ப்ரம்மாவினுடைய பத்னியான, **गिरां देवीं**–ஸரஸ்வதி தேவி என்றும், **त्वामेव**–உன்னையே, **हरेः**–ஹரியினுடைய, **पत्नीं**–பத்னியான, **पद्मां**–லக்ஷ்மீதேவி என்றும், **त्वामेव**–உன்னையே, **हरसहचरीं**–சிவனுடைய பத்னியான, **अद्रितनयां**–பார்வதிதேவியாகவும், **आहुः**–சொல்லுகிறார்கள். **त्वं**–(ஆனால்) நீயோ, **तुरीया**–நான்காவது தத்வமாகவும், **कापि**–அவாங் மனஸ கோசரமாகவும, **दुरधिगमनिस्सीममहिमा**–அடைய முடியாததாயும் எலலையிலலாததாயும் இருக்கிற மாஹாத்ம்யத்துடன்கூடின, **महामाया सती**-மஹாமாயையாக இருந்துகொண்டு, **विश्वं भ्रमयसि**–உலகை மோஹிக்கும்படி செய்கிறாய்.

தேவியை ஸரஸ்வதி என்றோ லக்ஷ்மீ என்றோ, பார்வதி என்றோ வர்ணிப்பதெல்லாம் ஆரோபிதம். நிஜஸ்வரூபத்தில தேவி ப்ரம்மத்தின் உபாதியாகிய மஹாமாயை. இந்த மாயைக்கு ஆச்ரயம் ப்ரம்மமதான். இப்படி மாயையை உபாதியாகக்கொண்ட ப்ரம்மத்தை தந்த்ர சாஸ்திரத்தில் மஹாமாயா அல்லது தேவி என்று உபாஸனை செய்கிறார்கள்.

இந்த சுலோகத்தில் சொல்லியிருக்கும் அபிப்பிராயத்தை [1] த்ரிபுரஸுந்தரீ வேதபாத ஸ்தோத்திரத்திலும் (சு. 46, 97) எழுதியிருக்கிறார். "ஏகம் ஸந்தம் யம் பஹுதாஹு: மதி பேதாத் (**एकं सन्तं यं बहुधाहुर्मतिभेदात्**) என்று ஹரிஸ்துதி யில் (சு. 18) சொல்லியிருக்கிறபடி அத்விதீயமாயும், ப்ரத்ய காத்மஸ்வரூபமாகவும் இருக்கிற தேவியை நம்முடைய புத்தியின் போக்கையனுஸரித்து ஸரஸ்வதி, லக்ஷ்மீ,

१ वाग्देवीति त्वां वदन्त्यम्ब केचिल्लक्ष्मीगौरीत्येवमन्येऽप्युशन्ति ।
शश्वन्मातः प्रत्यगद्वैतरूपां शंसन्ति केचिन्निविदो जनाः ॥
तव तत्त्वं विमृशतां प्रत्यगद्वैतलक्षणम् ।
चिदानन्दघनादन्यन्नेह नानास्ति किंचन ॥

கௌரி என்ற வெவ்வேறு பெயர்களால் உபாஸனை செய்கிறோம். மூகபஞ்சசதியிலும் (ஸ்துதி சதகம் சு. 92) இதே உல்லேகத்தைக் காணலாம். (97)

(அ) தேவியின் அனுக்ரஹத்தை வேண்டுகிறார்:—

कदा काले मातः कथय कलितालक्तकरसं
पिबेयं विद्यार्थी तव चरणनिर्णेजनजलम् ।
प्रकृत्या मूकानामपि च कविताकारणतया
कदा धत्ते वाणीमुखकमलताम्बूलरसताम् ॥ ९८ ॥

கதா காலே மாத: கதய கலிதாலக்தக ரஸம்
பிபேயம் வித்யார்த்தீ தவ சரண நிர்ணேஜன ஜலம் ।
ப்ரக்ருத்யா மூகாநாமபி ச கவிதாகாரணதயா
கதா தத்தே வாணீமுககமலதாம்பூலரஸதாம் ॥

**हे मातः** – ஹே தாயே! **कलितालक्तकरसं** – மருதாணி ரஸத்தோடு கூடின, **तव** – உன்னுடைய, **चरणनिर्णेजनजलं** – பாதப்ரக்ஷாலன தீர்த்தத்தை, **विद्यार्थी** – வித்யையை விரும்பும் (நான்) **कदा काले** – எப்பொழுது, **पिबेयं** – பானம் செய்வேன்! **कथय** – சொல. **तत्** – அந்த ஜலமானது, **प्रकृत्या मूकानामपि** – பிறவியிலேயே ஊமையாயிருப்பவர்களுக்கும் கூட, **कविताकारणतया** – கவிதா சக்திக்குக் காரணமாக இருப்பதால், **कदा** – எப்பொழுது, **वाणीमुखकमल** – ஸரஸ்வதியின் தாமரைபோன்ற வாயால், **ताम्बूलरसतां च** – மெல்லப்பட்ட தாம்பூலத்தின் ரஸமோ என்று தோன்றும் தன்மையை **धत्ते** – அடையப்போகிறது.

தேவி தன் பாதங்களில் மருதாணி இட்டுக்கொண்டு இருக்கிறாள். அந்த பாதங்களை அலம்பினால ஜலம் சிவப்பாக ஆகிறது. அந்த ஜலத்தைப் பானம் செய்தால், ஸரஸ்வதி தன் வாயில் போட்டு நன்றாகக் கடித்துத் துப்பின தாம்பூலத்தை வாயில் யாராவது எடுத்து போட்டுக்கொண்டால் எப்படி சிவக்குமோ அப்படி சிவக்கும். அவன் உடனே

ஊமையாயிருந்தாலும் மஹா பாண்டித்யத்தையடைகிருன். ஊமையாக இருந்த ஒருவன் தேவியின் பாதப்ரக்ஷாலன ஜலத்தைச் சாப்பிட்டவுடன் மிகச் சிறந்த மஹா கவியாக மாறிவிட்டான். தேவியை ஐநூறு ச்லோகங்களால் ஸ்தோத்திரம் செய்தான். அந்த காவியத்திற்கு 'மூக பஞ்ச சதி' என்று பெயர். 'ஸ்துதி சதக'த்தில (சு. 11) "மூகாநுமபி குர்வதீ ஸுரதுனீநீகாச வாக்வைபவம்" (**मूकानामपि कुर्वती सुरधुनीनीकाशवाग्वैभवं**) என்று காணப் படும் வாக்கியம்தான் அதற்கு பிரமாணம். தேவீ புஜங் கத்தில் (சு.6) "கதம் த்வத்கடாக்ஷம் விநா தத்வபோத:" (**कथं त्वत्कटाक्षं विना तत्त्वबोधः**) என்று ஆசார்யபாதாள் சொல்லியிருப்பதும் கவனிக்கத்தக்கது. (98)

(அ) பலச்ருதி சொல்லப்படுகிறது :—

**सरस्वत्या लक्ष्म्या विधिहरिसपत्नो विहरते**
**रतेः पातिव्रत्यं शिथिलयति रम्येण वपुषा ।**
**चिरं जीवन्नेव क्षपितपशुपाशव्यतिकरः**
**परानन्दाभिख्यं रसयति रसं त्वद्भजनवान् ॥ ९९ ॥**

ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா விதி ஹரி ஸபத்னோ விஹரதே
ரதே: பாதிவ்ரத்யம் ஶிதிலயதி ரம்யேண வபுஷா ।
சிரம் ஜீவந்நேவ க்ஷபித பஶு பாஶ வ்யதிகர:
பராநந்தாபிக்யம் ரஸயதி ரஸம் த்வத்பஜநவான் ॥

**हे भगवति**-ஹே தாயே! **त्वद्भजनवान्**-உன்னை உபாஸனை செய்கிறவன், **सरस्वत्या**-ஸரஸ்வதியோடும், **लक्ष्म्या**-லக்ஷ்மி தேவியோடும், **विधिहरिसपत्नः सन्**-ப்ரும்மா, விஷ்ணு, இருவருக்கும் விரோதியாக இருந்துகொண்டு, **विहरते**-ரமிக் கிருன். **रम्येण वपुषा**-அழகான சரீரத்தால், **रतेः** ரதிதேவி யினுடைய, **पातिव्रत्यं**-கற்பை, **शिथिलयति**-தளரச்செய்கிருன். **क्षपितपशुपाशव्यतिकरः**-ஜீவனுக்கும் அவித்யைக்கும் உள்ள அநாதியான ஸம்பந்தத்தை அறுத்தவனுய், **चिरं जीवन्नेव**-சிரஞ்ஜீவியாக இருந்துகொண்டு, **परानन्दाभिख्यं**-பரமானந்த

மென்று சொல்லப்படுகிற, रसं-ஸுகத்தை, रसयति-அனுபவிக்கிருன்.

தேவியை ஸமயாசார விதானப்படி யதாக்ரமமாக உபாஸனை செய்தவன் ஐஹிகம், ஆமுஷ்மிகம் என்ற இரண்டு விதமான பலன்களையும் அடைகிருன். ப்ரும்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் விரோதியாக இருந்து ஸரஸ்வதியுடனும் லெக்ஷ்மீ தேவியுடனும் ரமிக்கிருன் என்பதை ப்ராக்ருதமாக அர்த்தம் செய்யக்கூடாது. தாத்பர்யம் என்னவென்ருல் அப்ரதிஹதமான வைதுஷ்யத்தையும், எல்லையில்லாத செல்வத்தையும் அடைகிருன் என்பதுதான். அழகான சரீரத்துடன் மன்மதன் மாதிரி ரூபத்தை தரித்து ரதிதேவிக்கு ப்ரமத்தை உண்டு பண்ணி அவளுடைய கற்பைத் தளரச் செய்கிருன் என்பதும் அதிசயோக்தி. மிகவும் ரம்யமான சரீர லாவண்யத்தை அடைகிருன் என்பது தாத்பர்யம். இந்த விஷயம் ஏற்கெனவே 13வது ச்லோகத்தில் சொல்லப்பட்டது. இதுவரை ஐஹிக லாபம். சிரஞ்ஜீவியாக இருப்பது ஆமுஷ்மிக பலன்களில் முதலாவது; பசு என்று சொல்லப்படும் ஜீவனுக்கும் பாசம் என்று சொல்லப்படும் அவித்யைக்கும் அனுதி காலமாக ஏற்பட்ட ஸம்பந்தத்தை அறுத்துவிடும் உத்தமமான ஞானத்தை தேவியின் அனுக்ரஹத்தால் அவன் அடைகிருன். அவனுக்கு நாசம் கிடையாது. ப்ரம்மாதி தேவதைகள் கல்பத்தின் முடிவில் மஹா ப்ரளயத்தில் அழிந்து போகிருர்கள். ஆனுல் தேவியை அந்தரங்க பக்தியுடன் பஜனம் செய்தவனுக்கு நாசம் கிடையாது.[1]

ப்ரம்ம ஞானத்தை தேவியின் அனுக்ரஹத்தினுல் அடைந்து ஜீவன் முக்தனுக இருந்து கொண்டு நிரதி

---

१ ईशत्वनामकलुषाः कति वा न सन्ति
ब्रह्मादयः प्रतिभवं प्रलयाभिभूताः ।
एकः स एव जननि स्थिरसिद्धिरास्ते
यः पादयोस्तव सकृत्प्रणतिं करोति ॥
(கல்யாணவிருஷ்டி ஸ்தவம் சு. 3)

சயமான ப்ரம்மானந்தத்தை அனுபவிக்கிருன் என்பது இரண்டாவது ஆமுஷ்மிக லாபம் தேவியை மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அனுஹதம், ஆக்ஞா, விசுத்தி என்ற சக்ரங்களில உபாஸனேசெய்வதால் ஏற்படும் ஸார்ஷ்டி, ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம் என்ற மோக்ஷங்கள் எல்லாம் ஆபேக்ஷிகம். அவைகளில் துக்க நிவ்ருத்தி ஏற்படுகிறதே தவிர ப்ரம்மானந்தம் என்ற ஸுகானுபவம் கிடையாது. அதை அடைவதற்கு ஆறு சக்ரங்களிலும் தேவியை முறைப்படி உபாஸனே செய்து உபாஸனு பலத்தினுல படிப்படியாக ஏறி, ருத்ர க்ரந்தி, விஷ்ணு க்ரந்தி, ப்ரம்ம க்ரந்தி எனப்படும் க்ரந்திகளேயும் தாண்டி ப்ரம்ம ரந்த்ரம் என்று சொல்லப்படும் ஸஹஸ்ரார கமலத்தில் சிவன் சக்தி என்ற இரு தத்துவங்களே ஐக்ய பாவத்துடன் அனுஸந்தானம் செய்து உபாஸனே செய்ய வேண்டும். ஸஹஸ்ரார கமலம் என்பது ஆயிரம் தளங்களுடன் கூடின தாமரையைப் போன்ற சக்ரம். இதன் மத்தியில் 'பிந்து' என்பது தேவியின் ஸ்தானம். அந்தரங்க பக்தியுடன் பிந்து ஸ்தானத்திலிருக்கும் சிவசக்தி ஐக்ய ஸ்வரூபமான 'ஸாதா' என்னும் தேவியை உபாஸனே செய்வதால் ஜீவப்ரம்ம ஐக்யமென்ற அகண்டாகார வ்ருத்தி ஏற்பட்டு நிரவதியான ஸுகத்தை அனுபவிக்கிருன். ப்ராரப்த கர்மா முடிந்தவுடன் சரீரபாதம் ஏற்படுகிறது. பிறகு விதேஹ கைவல்யத்தையடைந்து ப்ரம்ம ஸ்வரூபமாகவே ஆகி விடுகிருன். "மோக்ஷத்வார கவாடபாடனகரீ" (**मोक्षद्वारकवाटपाटनकरी**) என்றும், "ஸாக்ஷாந் மோக்ஷகரீ" (**साक्षान्मोक्षकरी**) என்றும், "அன்னபூர்ணுஷ்டக"த்தில் காணப்படுவது இதற்கு அனுகுணமான வாக்யங்கள். (99)

(அ) உபஸம்ஹாரம் செய்யப்படுகிறது :-

**प्रदीपज्वालाभिर्दिवसकरनीराजनविधिः**
**सुधासूतेश्चन्द्रोपलजललवैरर्घ्यरचना ।**

स्वकीयैरम्भोभिः सलिलनिधिसौहित्यकरणं
त्वदीयाभिर्वाग्भिस्तव जननि वाचां स्तुतिरियम् ॥ १०० ॥
इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्य श्रीगोविन्दभगवत्पूज्यपादशिष्य
श्रीमच्छंकरभगवत्पादविरचिता सौन्दर्यलहरी संपूर्णा ॥

ப்ரதீபஜ்வாலாபி: திவஸகரநீராஜநவிதி:
ஸுதாஸூதே: சந்த்ரோபலஜலலவை: அர்க்யரசநா ।
ஸ்வகீயை: அம்போபி: ஸலிலநிதிஸௌஹித்யகரணம்
த்வதீயாபி: வாக்பி: தவ ஜநனி வாசாம் ஸ்துதிரியம் ॥

**हे वाचां जननि**–ஹே வாகதீச்வரி! **स्वकीयाभिः**–(எப்படி) தன்னுடைய, **प्रदीपज्वालाभिः**–அகனி ஜ்வாலைகளால், **दिवसकरनीराजनविधिः**–ஸூர்யனுக்கு மங்களஹாரதி செய்யப் படுகிறதோ, **स्वकीयैः**–தன்னுடையதான, **चन्द्रोपलजललवैः**–சந்த்ரகாந்தக்கல்லிலிருந்து கொட்டும் ஜலங்களால், **सुधासूतेः**-சந்திரனுக்கு, **अर्घ्यरचना**–அர்க்யப்ரதானமோ, **स्वकीयैः**–தன்னுடையதான, **अम्भोभिः**–ஜலங்களால், **सलिलनिधिसौहित्यकरणं**–ஸமுத்திரத்தை திருப்தி செய்துவைப்பதோ (அப்படியே) **त्वदीयाभिः**–உன்னுடையதான, **वाग्भिः**–வாக்குகளால், **तव**–உன்னுடைய, **इयं**–இந்த, **स्तुतिः**–ஸ்தோத்திரம் (செய்யப்படுகிறது).

தேவியின் அனுக்ரஹத்தால்தான் ஞானமும் கவிதையும் உபாஸகனுக்கு ஏற்படுகிறது என்று முன்னமே பல ச்லோகங்களில் (15, 16, 17, 75, 98) சொல்லப்பட்டது. அப்படி தேவியின் அனுக்ரஹத்தால் அடைந்த கவிதா சக்தியைக்கொண்டு தேவியையே ஸ்தோத்திரம் செய்வது என்பது உபசாரத்திற்கு சற்று விரோதமாகத்தோன்றலாம். ஒருவரிடமிருந்து தனத்தை இலவசமாகப் பெற்று அதைக் கொண்டே அவருக்கு மரியாதை செய்வது ஹாஸ்யத்திற்கு இடம் தரும். ஆனால் ஸூர்யனுக்கும், சந்திரனுக்கும், ஸமுத்திர ராஜாவுக்கும் உசிதமான ஸமயங்களில் கற்பூர ஹாரதியோ, அல்லது அர்க்ய ப்ரதானமோ நாம் செய்யும்

போது இந்த முறையில்தான செய்கிறோம். உத்தராயண புண்யகாலத்தில் ஸூர்யனை பூஜை செய்து கற்பூர ஹாரதி செய்கிறோம். இந்த நீராஜனம் ஸூர்யனின் ப்ரகாசம்தான். சந்திரக்ரஹணம் விட்டபிறகு சந்திர காந்தக்கலகளிலிருந்து விழும் ஜலத்தைக்கொண்டு சந்திரனுக்கு அர்க்ய ப்ரதானம் செய்கிறோம். அதேமாதிரி அர்த்தோதயம், மஹோதயம் போன்ற புண்ய காலங்களில் ஸமுத்திர ஸ்நானம் செய்து ஸமுத்ர ஜலத்தைக் கையில் எடுத்து ஸமுத்திர ராஜாவுக்கு அர்க்கியப்ரதானம் செய்கிறோம். தேவியினுடைய அனுக்ரஹத்தைக்கொண்டு அடைந்த வாக் விலாஸத்தால் தேவியையே பூஜை செய்வது சிஷ்டாசாரத்திற்கு விரோதமில்லையென்று சொல்லி இநத உத்தமமான ஸ்தோத்திரத்தை உபஸம்ஹாரம் செய்கிறார். (100)

*ஸ்ரீ சங்கரபகவத் பாதாசார்யார் அருளிய*
*ஸௌந்தர்யலஹரீ முற்றிறறு.*



# ஒரு விசேஷக் குறிப்பு.

## ஸௌந்தர்யலஹரி 60-வது சுலோகம். பக்கம் 81.

அம்பாள் பேசும்போது அவளுடைய வாங்மாதுர்யத்தில் ஈடுபட்டு ஸரஸ்வதி தேவி தன் வீணாகானத்தை நிறுத்தி விட்டுத் தலையை அசைக்கிறாள். அப்பொழுது அவளுடைய குண்டலங்களில கட்டப்பட்டிருக்கும் தங்க சலங்கைகள் 'ஜல' 'ஜல' என்று சப்தம் செய்வது ஆமோதனம் செய்வது போல் இருக்கிறது என்று இந்த சுலோகத்திற்கு லக்ஷ்மீதர வ்யாக்யானத்தை ஒட்டி அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது.

ஸரஸ்வதி பேசும்போது அவளுடைய வாங்மாதுர் யத்தை மெச்சி அம்பாள் தன் தலையை அசைக்கும்போது அம்பாளின் குண்டலங்கள் பதில் சொல்லும் முறையில் 'ஜல' 'ஜல' என்று சப்திக்கின்றன என்று அர்த்தம் செய்வதற்கும் இதில் இடம் இருக்கிறது.

இதற்கு முந்தின சுலோகத்தில தேவியின் கபோல பிரதேசமும், இதற்குப் பின்வரும் சுலோகத்தில் தேவியின் மூக்கும் வர்ணிககப்பட்டிருக்கிறபடியால் இதில் தேவியின் காதில் அணிந்திருக்கும் குண்டலங்கள் வர்ணிக்கப்படுவது ஸஹஜம். 66-வது சுலோகத்தில் தேவியின் வாங்மாதுர்யம் வர்ணிக்கப்படுவதால் இங்கு குண்டலங்களை வர்ணிப்பது உசிதமென்று தோன்றுகிறது.

சுலோகத்தின் அமைப்பில் இருவித அர்த்தங்களுக்கும் இடம் இருப்பதாகத்தோன்றுகிறது.

ஆசிரியர்.

|| श्रीः ||

# || श्लोकानुक्रमणिका ||